Srivatsam

# திருநாராயணபுரம்





திருநாராயணபுரம் எம்பெருமானர் மூலவரும் உத்ஸவரும். தமருகந்த திருமேனி. ஐம்பத்திருவருடன் யோக மகிமையால் இத்திருமேனி மூலம் ஸ்வாமி வார்த்தையாடியதாக ஐதிஹ்ய

# எம்பெருமானாரும் திருநாரயணபுரமும்

M. A. வேங்கடகிருஷ்ணன் M.A.

ஆதிசேஷனின் அபராவதாரமான எம்பெருமானார் தென்னரங்கர் செல்வமுற்றும் திருத்திவைத்து ஸ்ரீரங்கஸ்ரீயை ரக்ஷித்து வருங்காலத்தில் ராஜேந்திர சோழபுரத்தில் அரசாண்டு வந்த குலோத்துங்க சோழராஜன் துஷ்டசைவனாகையாலே நாட்டிலுள்ள வித்வான்களையெல்லாம் "சிவாத் பரதரம் நாஸ்தி" (சிவனைக்காட்டிலும் மேம்பட்ட தெய்வமில்லை) என்று எழுதிடச் சொல்லி வற்புறுத்தினான். சிலர் அவனுக்கு அஞ்சியும், சிலர் பொருட்கும் பூமிக்குமாசைப்பட்டும் அவ்வாறே எழுதிட்டனர். அப்போது அவ்வரசனை அண்டியிருந்த நாலூரான் எனுமொரு வைஷ்ணவன் "எங்களிராமநுசன் எழுத்திட்டாலன்றோ எழுத்தாவது: மற்றையோர் இட்டாலென்? இடாவிடிலென்?" என்று கூற அரசனும் அப்போதே இராமநுசரை அழைத்துவர ஆட்களை அனுப்பினான். ஆனால் அந்த துஷ்டர்களிடம் எம்பெருமானாரைக் காட்டிக் கொடுக்க விரும்பாமல் கூரத்தாழ்வான் தாமே எம்பெருமானாருடைய காஷாயத்தை அணிந்து த்ரிதண்டத்தையும் தரித்துக் கொண்டு ராஜஸபைக்கு எழுந்தருளினார். அச்சமயம் நீராட்டத்திலிருந்த எம்பெருமானார் நீராட்டத்தை முடித்துக் கொண்டு தமது காஷாய த்ரிதண்டாதிகளைக் கூரத்தாழ்வான் தரித்து ராஜஸபைக்கு எழுந்தருளின விஷயம் பற்றி அறிந்து, கூரத்தாழ்வானுடைய வெள்ளைவஸ்த்ரத்தை தரித்துக் கொண்டு சோழ நாட்டுக்கு வெளியில் சென்று விடும்படி முதலிகள் நிர்ப்பந்திக்க, அவர்களுடன் மேல் நாடு நோக்கிப் புறப்பட்டார்.

காவிரிக் கரையோரமாகவே எழுந்தருளின ஸ்ரீ ராமாநுஜர் முதன் முதலில் சாலபுரி என வழங்கிவந்த ஒரு கிராமத்தை அடைந்தார். பிறகு அவ்வூர் சாலிக்ராமம் என வழங்கப்படலாயிற்று. முதன் முதலில் மேல் நாட்டில் தமது திருவடிகளை வைத்த இடம் ஆதலால் இன்றைக்கும் அங்கு திருமண் சங்கு சக்கரங்களுடன் விளங்கும் ஒரு திருவடிச் சன்னதியுள்ளது. அத்திருவடிகளை வடுக நம்பிகள் ப்ரதிஷ்டை செய்ததாகக் கூறப்படுகிறது.

அங்கிருந்து எம்பெருமானார் தொண்டனூர் எனும் கிராமத்திற்கு எழுந்தருளினார். அங்குதான் ஜைன மன்னனான பிட்டிதேவனைத் திருத்திடபணி கொண்டு அவனுக்கு விஷ்ணுவர்த்தனன் என்று பெயர் சூட்டி வைஷ்ணவனாக்கியருளினார்.

பிட்டிதேவன் என்கிற விட்டல தேவராயன் ஒரு யுத்தத்தில் தன் அங்கம் ஒன்றை இழந்து விட்டதால் அங்கஹீனனை அவனை ஜைனமத குருக்கள் ஒதுக்கிவிட்டனர். ஆனால் ராமாநுஜர் பரமக்ருபையுடன் அவனை அங்கீகரித்தருளி அவனுடைய மகளுக்கு ஏற்பட்டிருந்த நோயையும தமது யோக மஹிமையால் தீர்த்தருளினார். உடனே விட்டல தேவராயன் ஜைன மதத்தைத் துறந்து வைஷ்ணவனாகி விஷ்ணுவர்த்தனன் என்னும் பெயர் பூண்டு ஸ்ரீராமநுஜர் ஒருவரையே தன் குருவாகக் கொண்டான்.

அதனால் அஸூயையுற்ற ஜைனர்கள் பலர் எம்பெருமானாரை வாதத்திற்கழைத்தனர். எம்பெருமானாரும் தமது அஹிபதி நிஜாகாரத்துடன் ஸஹஸ்ர பணாமண்டலங்களுடன் ஒரு திரைக்குள்ளிருந்து கொண்டு ஓராயிரம் ஜைன வித்வான்களுடனும் ஏக காலத்தில் வாதம் பண்ணி, ச்ரிய:பதியான எம்பெருமானே பரம்பொருள் என்றும், ச்ருதியே பரமப்ரமாணம்

என்றும், விசிஷ்டாத்வைதமே பரமதத்வம் என்றும் நிலைநாட்டி, ஜயஸ்தம்பமும் நாட்டுவித்தார். ஜைனர்களும் தோல்வியை ஒப்புக்கொண்டு எம்பெருமானாரை வணங்குவதற்காகத் திரையை விலக்க அங்கே ராமாநுஜர் ஆயிரம் தலைகளுடன் கூடிய ஆதிசேஷனாகவே ஸேவை ஸாதித்தார். இன்றைக்கும் இத்திருக்கோலத்தில் அங்கு எம்பெருமானார் (சுதை வடிவமாக) கோயில் கொண்டுள்ளார். ச்ரவணபெல்குலா என்ற ஜைனஸ்தலத்தில் இன்றைக்கும் எம்பெருமானார் ஸன்னிதியும் அதற்கெதிரில் ஸ்வாமியின் விஜய பரம்பரையைக் கூறும் தாடீ பஞ்சகம் என்ற 5 ச்லோகங்கள் பொறிக்கப்பட்ட கல்வெட்டும் ஜைனப் பெரியோரின் பராமரிப்பில் இருப்பதைக் காணலாம்.

பிறகு விஷ்ணுவர்த்தனனைக் கொண்டு ராமாநுஜர் தொண்டனூரில் ஒரு மிகப்பெரிய ஏரியை நிர்மாணித்தார். இருகுன்றுகளிடையில் வெட்டப்பட்டுள்ள ஏரி, ஸ்ரீ ராமாநுஜர் ஏரி என்றும் திருமலைஸாகரம் என்றும் வழங்கப்படுகிறது. இன்றைக்கும் விஞ்ஞானிகளும் அதிசயிக்கும்படி கட்டப்பட்டுள்ள அவ்வேரியின் அமைப்பும், மோதிதலாப் (முத்துக்குளம்) என்ற அதன் கரை (dam)யும், ஸ்ரீராமாநுஜரே தமக்கிருந்த சிற்பசாஸ்த்ர ஜ்ஞானத்தினால் வகுத்துக் கொடுத்ததாகும். எம்பெருமானாரின் க்ருபையாகிற வெள்ளம் 'வனத்திடரை ஏரியாம் வண்ணம்'' நிரப்புவதுபோல இந்த ஸ்ரீராமாநுஜர் ஏரியும் பயிர்களுக்குப் பாசன வசதிக்கு உதவுகிறது.

இவ்வாறிருக்குங்கால், இராமாநுசர் ஊர்த்வ புண்ட்ரம் சாத்திக்கொள்ள திருமண் அகப்படாமல் சோகித்திருந்தபோது திருநாராயணன் ஸ்வப்னத்தில் ஸேவைதந்து, தாம் அர்ச்சா ரூபியாய் நாராயணாத்ரி என்ற யாதவகிரி ப்ரதேசத்தில் ஒரு பதரி மரத்திற்கு எதிரில் துளசிக் காட்டின் நடுவில் புதைந்திருப்பதாகவும் அதற்குச் சமீபத்தில் திருமண் அபரிமிதமாக மறைந்து கிடப்பதாகவும் சொல்லி, தனக்குக் கோவில் கட்டித் திருவாராதனத்துக்கும் ஏற்பாடு செய்ய நியமித்தருளினன். அவ்வாறே எம்பெருமானாரும் அவ்வெம்பெருமானைக் கண்டெடுத்துக் கோயில் சமைத்து மூலவராக எழுந்தருளப் பண்ணினார். அங்கு கிடைத்த திருமண் கொண்டு த்வாதசோர்த்வ புண்ட்ரங்களைச் சாத்திக் கொண்டு தருப்தரானார். கோவிலைச்சுற்றித் தம் சிஷ்யர்களைக் குடியேற்றித் தாமும் ஒரு மடம் ஸ்தாபித்துக்கொண்டு திருநாராயணன் கைங்கர்யத்தை நிர்வஹித்து வந்தார். அந்த ஊரும் திருநாராயணபுரமாயிற்று. திருவாய்மொழியில் 'ஒருநாயகம்'' (4-1) என்ற பதிகத்தை இந்த எம்பெருமான் விஷயம் என்று ஸங்கல்பித்து திருநாராயணபுரத்தை திவ்ய தேசமாக அபிமானித்தருளினார்.

ஆதிகாலத்தில் ப்ரஹ்மா இவ்வெம்பெருமானை ஆராதித்துவந்தார். பிறகு ஸனத்குமாரருக்கு அவரைத் திருவாராதனத் திருமூர்த்தியாய்த் தந்துவிடவே, ஸ்ரீமந் நாராயணன் தமது திருமார்பிலிருந்து அதே போன்ற ஒரு திருமேனியை வரவழைத்து ப்ரஹ்மவிற்குத் தந்தருள, பிரமனும் அவ்வெம்பெருமானை வெகுகாலம் பூசித்திருந்தான். இக்ஷ்வாகு வம்சத்தினரின் குலதனமான ஸ்ரீரங்கநாதனை விபீஷணனுக்கு அநுக்ரஹித்துவிடவே இந்த எம்பெருமானை சக்ரவர்த்தி திருமகனை ஸ்ரீராமனிடம் பிரமன் கொடுத்தான் ஸ்ரீராமனும் மிகவும் ப்ரீதியுடன் இவ்வெம்பெருமானுக்குத் திருவாராதனங்கள் கண்டருளப் பண்ணி வந்ததால் அவர் 'ராமப்ரியர்' ஆனார். சக்ரவர்த்தி திருமகனிடமிருந்து அவ்வெம்பெருமானைப் பெற்ற குசன் தன்னுடைய பெண்ணான கனகமாலிகை யதுசேகரன் என்ற யதுவம்சத்தரசனை மணந்த போது ஸ்த்ரீதனமாகக் கொடுத்தான். இவ்வாறு ராமப்ரியன் யதுவம்சத்தவனை ஸ்ரீக்ருஷ்ணனிடம் வந்து சேர்ந்தான். ஒரு ஸமயம் பலராமர் பூப்ரதக்ஷிணம் செய்யும் போது நாராயணாத்ரி என்ற மலையில் (ஸனத் குமாரரால் ப்ரதிஷ்டை செய்யப்பட்ட) மூலவரைக் கண்டு, மீண்டு த்வாரகைக்குத் திரும்பி, தம் தம்பியான ஸ்ரீக்ருஷ்ணனிடம் அவருடைய திருவாராதன திருமேனியைப் போன்ற மற்றொரு திருமேனியைத் தாம் நாராயணாத்ரியில் கண்டதாகத் தெரிவித்தார். உடனே கண்ணனும் தம் திருவாராதனப் பெருமாளுடன் அங்கு சென்று

இரண்டு திருமேனியையும் ஒப்பிட்டுப் பார்த்து அங்கேயே தம் திருவாராதன எம்பெருமானை உத்ஸவ விக்ரஹமாக ப்ரதிஷ்டை செய்தருளினார். அது முதல் நாராயணாத்ரி யாதவகிரியாயிற்று.

இப்புராண வரலாற்றை அறிந்த எம்பெருமானார், திருநாராயணனுக்கு ஒத்த உத்ஸவ மூர்த்தியை மீண்டும் ப்ரதிஷ்டை செய்ய வேணுமென்று பார்த்தார். எம்பெருமானும் தாம் டெல்லி பாதுஷாவின் அரண்மனையில் இருப்பதாக ஸ்வப்னத்தின் மூலம் தெரிவிக்க, உடனே எம்பெருமானார் டெல்லிக்குப் பயணமானார். (* இது விஷயம் பற்றிய அநுபந்தம் பின்னர் காண்க) பாதுஷாவைக் கிட்டி ராமப்ரியரை தருமாறு வேண்டினார். எம்பெருமானாருடைய பெருமையை அவரைப் பார்த்த மாத்திரத்திலேயே உணர்ந்த பாதுஷா இந்துக் கோவில்களினின்றும் களவாடப்பட்ட விக்ரஹங்கள் வைக்கப்பட்டிருந்த அறையைத் திறந்து காட்டி "உங்கள் பெருமான் இருந்தால் எடுத்துக் கொண்டு போகலாம்" என்று அநுமதித்தான். ஆனால் அங்கு ராமப்ரியரைக் காணாமல், எம்பெருமானார் தமது ஞான த்ருஷ்டியினால் ராமப்ரியர் பாதுஷாவின் குமாரியான இளவரசியின் ஸஜ்ஜாக்ருஹத்தில் உள்ளதை அறிந்து அரசனிடம் கேட்க, அவனும் "நீங்கள் அழைத்து உங்கள் பெருமாள் உங்களிடம் வந்தால் அழைத்துக் கொண்டு போங்கள்" என்றனன் உடனே எம்பெருமானாரும் "வருக வருக வருக இங்கே வாமன நம்பீ வருக இங்கே!" என்று அழைக்க, ராமப்ரியரும் அர்ச்சாஸமாதியைக் கடந்து ஓடிவந்து உடையவர் மடியில் ஏறி அமர்ந்துகொள்ள, "என் செல்வப்பிள்ளையே" என்று வாரி அணைத்து உச்சி மோந்து முத்தமிட்டு மகிழ்ந்தார். இதனால் ராமப்ரியர் யதிராஜ ஸம்பத்குமாரர் ஆனார். யதிராஜரும் உடனே செல்வப்பிள்ளையுடன் திருநாராயணபுரம் நோக்கிப் புறப்பட்டார். ராமப்ரியரை விட்டுப் பிரியகில்லாத பாதுஷாவின் குமாரியும் ராமப்ரியரைப் பின்தொடர்ந்து வந்து அவரது திருவடிகளிலேயே ஐக்யமாகிவிட்டாள். இன்றும் திருநாராயணபுரம் மூலவர் உத்ஸவர் திருவடிகளில் திருவடி நாச்சியாராகவும், பீபி நாச்சியாராகவும் இவரை ஸேவிக்கலாம்.

தென்னரங்கர் செல்வம் முற்றும் திருத்தி வைத்தது போலவே இங்கும் பலவித ஏற்பாடுகளைச் செய்திருக்கிறார் எம்பெருமானார். தாம் தொண்டனூர் வந்தபோது தம்மைப் பின்தொடர்ந்த ஐம்பத்திருவரை நான்கு ஸமூஹங்களாகப் பிரித்து அவர்களுக்கு க்ரமமாக திருவனந்தபுரம் தாஸர், மாலாகார தாஸர், திருக்குறுங்குடி தாஸர், யதிராஜ தாஸர், என்று தாஸ்ய நாமங்களும் சாற்றி, பல கைங்கர்யங்களையும் நியமித்து "செல்வப்பிள்ளையை நீங்கள் கிணற்றின் கரையிலிருக்கும் குழந்தையைப் பார்த்துக் கொள்வது போல பயபக்தியோடு ஜாக்ரதையாகப் பார்த்துக் கொண்டு, எப்பொழுதும் மங்களாசாஸனம் செய்து கொண்டிருக்க வேணும்" என்று தம்வஸ்துவை பிறர் கையில் ஒப்புவித்து வைப்பது போல் செல்வப்பிள்ளையைக் கொடுத்தருளினார். கோவில் நிர்வாஹங்களை (ஸ்ரீகார்யம்) மேற்கொள்ள வஞ்சிபுரம் தாஸருக்கு நியமித்தார். கோவில் திருவாராதனநெறிகள் பாஞ்சராத்ர ஆகமப்படி நடைபெறும் பொருட்டு ஸ்ரீரங்கத்திலிருந்து ஸ்ரீரங்கராஜ பட்டர் என்பவரை வரவழைத்து பாஞ்சராத்ர அர்ச்சகராகவும் நியமித்தார். அந்தப் ப்ராந்தத்தில் தம்மால் திருத்திப்பணி கொள்ளப்பட்ட பல ஸ்ரீவைஷ்ணவர்களுக்காக ஐந்து ஊர்களில் முதலியாண்டானைக் கொண்டு பஞ்ச நாராயணர்கள் என்று புகழப்படும் ஐந்து எம்பெருமான்களைத் திருக்கோயில்களில் ப்ரதிஷ்டை செய்தார்.

இவ்வாறு திருநாராயணனுக்கும் செல்வப் பிள்ளைக்கும் அனைத்துமும் கண்டருளப் பண்ணிக் கொண்டிருக்கையில் க்ருமிகண்ட (குலோத்துங்க) சோழன் கழுத்திலே புண்ணாகிப் புழுத்து மாண்டான் என்கிற நற் செய்தியைக் கேள்விப்பட்டு மீண்டும் ஸ்ரீரங்கம் விடைகொள்ள விழைந்தார். அது கண்ட அவரடியார்கள் அவரைப்பிரிய மனமில்லாமல் "தேவரீர் இங்கேயே எழுந்தருளியிருக்க வேணும்" என்று மிகவும் வேண்ட எம்பெருமானாரும் தம்மைப்

போலவே ஒரு விக்ரஹத்தை செய்பச் சொல்லி அதற்குத் தம்முடைய ப்ராண ப்ரதிஷ்டையும் செய்து, அந்த அர்ச்சைத் திருமேனி மூலம் அவ்வடியார்களுடன் பேசவும் செய்தார். இதனால் அடியார்களும் எம்பெருமானாரைப்பிரிய ஒருவாறு தேறி அப்பிரிவை ஸஹித்திருந்தனர். திருநாராயணபுரத்தில் எழுந்தருளியிருக்கும் உடையவரது திருமேனி தமர் உகந்த திருமேனி என்று போற்றப்படுகிறது. எம்பெருமானாரும் செல்வப்பிள்ளையிடம் புத்ரவாத்ஸல்யம் ஒருபுறம் பெரிய பெருமாளுடைய பித்ரு வாத்ஸல்யம் மறுபுறமிழுக்க திருநாராயணனைப் பிரிய மனமின்றிக்கே கோயிலை எழுந்தருளினார்.

திருநாராயணபுரத்தில் வைரமுடி ஸேவை என்பது ப்ரஸித்தமான உத்ஸவம். உத்ஸவ மூர்த்தியான செல்வப்பிள்ளை உடையவர் ஸன்னிதிக்கு எதிரே எழுந்தருள உடையவர் திருமுன்பே வைரமுடி எனப்படும் மகுடத்தை செல்வப்பிள்ளைக்குச் சாத்தும் வழக்கம் இன்றும் உள்ளது. உடையவர் பெருமாளைத் தமது செல்வப்பிள்ளையாகவே போற்றின படியால் உடையவரே தமது திருக்குமாரனுக்கு மகுடாபிஷேகம் செய்து மகிழ்வதாக இவ்வைரமுடி உத்ஸவம் அமைந்திருக்கிறது. ஸ்ரீராமனுடைய பட்டாபிஷேகத்தை அவனுடைய தந்தை தசரதன் நடத்தி வைக்க முடியாமல் போயிற்று; அக்குறை தீர ராமப்ரியனுடைய பட்டாபிஷேகத்தை அவருடைய பிதாவாகிய ராமாநுஜரே நடத்தி வைக்கிறார் போலும் "பற்றிலார் பற்ற நின்றானே" என்றபடி முற்றும் துறந்த ஸந்யாஸியான எம்பெருமானாரையும் பிதாவாக் கியவர் அன்றோ செல்வப்பிள்ளை

> கோதற்ற ஞானத் திருப்பாவைபாடிய பாவைதங்கை
> வாதுக்கு வல்லவன் ஆண்டான் மருமான் தம்பி எம்பார்
> தீதற்ற செல்வப்பிள்ளையோ பிள்ளை நம்பி சிச்சன்
> ஏதுக்கிராமாநுசனை எதியென்றியம்புவ திருநிலமே!

என்றொரு பாடலும் நம் ஸ்வாமிபற்றி வழங்கிவருகிறது.

உடையவர் கடைசியாக அருளிச்செய்த ஆறு வார்த்தைகளுள் ஒரு வார்த்தை:

"நமக்கு ப்ரியமான திருநாராயணபுரத்தில் ஒரு கூரை வீடாகிலும் கட்டிக்கொண்டு வாஸம் செய்யுங்கள்" இதை நிறைவேற்றப் பாரிப்போமாக.

*அநுபந்தம்: இராமாநுசர் காலத்தில் டெல்லிப் ப்ராந்தத்தில் துருஷ்கராஜ்யம் ஏற்பட்டிருந்ததில்லை; ஆகையால் ராமாநுஜர் திருநாரயாணபுரத்து உத்ஸவமூர்த்தியை துருஷ்கராஜனிடமிருந்து மீட்டுக்கொண்டு போவதற்காக டெல்லிக்கு எழுந்தருளினார் என்பது ஆதாரமற்றது என்று சிலர் ஆக்ஷேபிப்பதற்கு காஞ்சிபுரம் நல்லப்பா ஜீயப்பங்கார் ஸ்வாமி, "ஸ்ரீ ராமாநுஜன்" வாயிலாக வெளியிட்டுள்ள ஸமாதானம்; ராமாநுஜர் காலத்தில் டெல்லி ப்ராந்தத்தில் துருஷ்கராஜ்யம் நன்கு ஏற்பட்டிருந்தது என்பதற்கு சரித்திரமே சான்று. ராமாநுஜர் வாழ்ந்தகாலம் சரித்திரப்படி கி.பி. 1017—1137. கஜினி முகம்மது துருக்கியிலிருந்து வட இந்தியாவில் படையெடுத்து பஞ்சாபில் ஜெயபாலன் என்கிற அரசனை வென்றது கி.பி. 1001ம் வருஷத்தில், (The oxford History of India by Vincent A. Smith. pp. 190-192) அவன் யமுனையைக்கடந்தது கி.பி. 1018. அவ்வாண்டிலேயே பஞ்சாப் முழுவதும் பிடிக்கப்பட்டு 1091-ல் கானோஜ் (Kanauj) பிடிக்கப்பட்டு 1022ல் லாஹூர் முழுவதும் துருஷ்கராஜ்யம் ஏற்பட்டது. கி.பி. 1024ல் கத்தியவாரிலுள்ள பெயர்பெற்ற ஸோம் நாத் கோவில் கொள்ளையடிக்கப்பட்டுள்ளது. 1030ல் கஜினி முகமது இறந்த பிறகு அஹமது பட்டத்திற்கு வந்தான். கி.பி. 1098ல் இரண்டாம் மஸூது (Masood II) இந்தியாவை ஆண்டுகொண்டிருந்தான். கி.பி. 1100 வரையில் துருஷ்கராஜ்யம் வட இந்தியாவில் பலமாக இருந்திருக்கிறது.

ராமாநுஜர் முதன்முதலில் திருநாராயணபுரம் எழுந்தருளிய போது அவருக்கு வயது ஏறக்குறைய 81 என்று நமது குருபரம்பரைகள் தெரிவிக்கின்றன. அவர் டெல்லிக்குச் சென்றது கி.பி. 1097க்கு மேல் கி.பி. 1100க்குள் இருந்திருக்க வேண்டும்.

அடுத்து, மேல்கோட்டையிலிருந்து இந்த விக்ரஹம் டெல்லிக்கு எப்படிப் போய்ச் சேர்ந்தது என்ற கேள்வி எழுகிறது. தொண்டனூருக்கருகில் ஒரு கல்வெட்டில்—அதனடியில் ஒரு தீவிர முஹமதிய வீரன் புதையுண்டிருப்பதாகக் காணப்படுகிறது அவன் கஜினி முகம்மது ஸேனையைச் சேர்ந்தவனாக இருந்திருக்க வேண்டும் என்று ஊஹிக்கப்படுகிறது. (Vide—The Life of Ramanuja by A. Govindacharya pp. 198. Foot Note). இதிலிருந்து முகம்மதியர்கள் மைசூர் ராஜ்யத்தின் பேரில் படையெடுத்து வந்தார்கள் என்று அறியலாகிறது அவர்கள் ராமப்ரியர் விக்ரஹத்தைக் கவர்ந்து தங்கள் தலைநகரான டில்லிக்கோ அல்லது லாகூருக்கோ கொண்டு சென்றிருக்கக் கூடும்).

கமலாகுசகஸ்தூரீ கர்த்தமாங்கிதிவக்ஷஸே
யாதவாத்ரிநிவாஸாய ஸம்பத் புத்ராய மங்களம்

———oo———

# திருக்குறுங்குடி



திருக்குறுங்குடி நம்பியும், எம்பெருமானாரும் (பக்கம் 33)



திருப்பரிவட்டப்பாறை, திருக்குறுங்குடி
(பக்கம் 35)

## ஆழ்வார் திருநகரி



நம்மாழ்வாரும் (மதுரகவிகள் பெற்ற) பவிஷ்யதாசாரியரும்.

## திருக்கோட்டியூர்



திருக்கோட்டியூர் நம்பியும் (நாதமுனிகள் பெற்ற) பவிஷ்யதாசாரியரும்.

ஸ்ரீ:

# எம்பெருமானாரும் திருக்குறுங்குடி ஸ்ரீவைஷ்ணவநம்பியும்

இராமாநுசமுனிவன் "திருவரங்கர் செல்வம் முற்றும் திருத்தி வைத்தான் வாழியே" என்கிறபடியே கோயிலில் பெரிய பெருமாளுக்கு நித்ய கைங்கர்யங்கள் பண்ணி தர்சனம் நிர்வஹித்துக் கொண்டிருந்த நாளிலே, திவ்யதேசங்களை மங்களாசாஸனம் பண்ணவேண்டுமென்று திருவுள்ளம் பற்றி பெருமாளநுமதி கொண்டு சோழநாட்டுத் திருப்பதிகளை அடைவே மங்களாசாஸனம் பண்ணி இதரமதஸ்தர்களை வாதில் வென்று பாண்டிய நாட்டு திவ்ய தேசங்களை ஸேவிப்பதாய் அவற்றுள் பரமபாவனமாயிருக்கிற ஸ்ரீவைஷ்ணவ வாமன க்ஷேத்ரமான சோலைசூழ் தண் திருக்குறுங்குடிக்கு எழுந்தருள்வதாக வழி நடந்து கொண்டிருக்கையில்;

ஸச்சிஷ்யன் ஒருவன் ஆசார்யன் பக்கலிலே கனத்த அன்புடன் நடந்துபோருமதை நாட்டார்க்கறியப்பண்ண வேண்டுமென்று திருவுள்ளம் கொண்டு, ஈச்வரத்வபூர்த்தியிருந்தும் ஸதாசார்ய ஸமாச்ரயணம் பண்ணிச் 'செய்த வேள்வியனாக' ஆக எந்த ஆசார்யனை ஆச்ரயிக்கலாம் என்று எண்ணியிருக்க, உடையவரும், "கோதை நறுமலர்மங்கை மார்வன் குறுங்குடிக்கே என்னை யுய்த்திடுமின்" என்று திருமங்கையாழ்வாருக்கு ப்ராப்யதேசமான திருக்குறுங்குடிக்கு எழுந்தருளி, திருப்பாற் கடலில் நீராடித் திருப்பாற் கடல் நம்பியைத் தொழுது ஊருக்குள் ப்ரவேசித்து கோயிலுக்குள் புக்கு அடைவே எழுந்தருளி கரும்பனைப் பெரும்பழம் புரண்டு வீழ வாளைபாயும் கரண்டமாடு பொய்கையையும், திருப்பனையையும், அப்பொய்கையில் நீராடிய காக்கைக்கு வீடளித்து அங்கே யெழுந்தருளியுள்ள கார்முகில் வண்ணனை கண்ணபிரானையும் ஸேவித்து, "தவளவிளம்பிறை" யிற்படியே திருமங்கையாழ்வார் வீடு பெற்ற மேன்மையையுடைய வைகுந்த நீள் வாசலின் பெருமையை அருளிச்செய்து கொண்டு, மகாபாகவதோத்தமனான நம்பாடுவானுக்கு ஸேவை ஸாதிப்பதற்காக கருளப்புட் கொடியான த்வஜத்தை சற்றே விலகி நிற்கும்படி நியமித்துள்ள நம்பியின் வாத்ஸல்யத்தையும் ஸௌசீல்யாதி குணங்களையும் அருளிச் செய்து கொண்டு உள்ளே புக்கு பேரருளாளன் பெருமையைப் பேசக் கற்றுவல்ல திருமங்கையாழ்வாரைத் தொழுது, மற்றைய ஆழ்வார்களையும் ஸேவித்து அடைவே உள்ளே புக்கு எம்பெருமான் திருமுன்பே பெருமகிழ்வெய்தி நின்றவளவில்;

நம்பியும், இவருடைய ஞானபக்தி வைராக்யங்களையும் பிறர் துக்கம் ஸஹியாமையையும் தம்மாலே திருத்த முடியாத உலகத்தவர்களைத் திருத்திப் பணி கொண்டு ஸ்ரீவைஷ்ணவத்தைப் பரவச் செய்து, மாறன் பணித்த தமிழ் மறையை நிலை நாட்டி வருவதையும் கண்டு "இவரிடமே ஆசார்யத்வ பூர்த்தியுள்ளது; இவரையே நாம் ஆச்ரயித்து திருமந்த்ரோபதேசம் பெற்று ஆசார்யவானாகவேணும்" என்று திருவுள்ளம் பற்றி, உடையவரைக் கடாக்ஷித்து "நாம் முன்னர் மத்ஸ்யர்க்காகப்படாதனபட்டு, உயிரளிப்பான் என் நின்றயோனியுமாய்ப் பிறந்து உபதேசித்துத் திருத்தப்பார்த்தவளவிலும் ஒரொருவர் உண்டாகில் அத்தனைகாண் உள்ளமே என்றிருந்தது; தேவரீர் இத்தனை குழாங்களையும் செயல் நன்றாகத் திருத்திப்பணி கொண்டது எங்ஙனென்று அருளிச்செய்ய வேணும்" என்று வினவ, ஸ்வாமியும். "கேட்குமடைவிலே கேட்டாலன்றோ சொல்லுங் க்ரமத்திலே சொல்லுவோம்" என்றருளிச்செய்ய, நம்பியும், சட்டென்றுத் தம் ஸிம்ஹாஸனத்தினின்றும் இறங்கி, உடையவருக்குத் திவ்ய ஸிம்ஹாஸனத்தை ஸமர்ப்பித்து, தாம் திருக்கொத்தோவியலைப் படுத்து, அதிலே இருந்துகொண்டு, "இப்போது அருளிச் செய்யலாகாதோ?" என்று ஸவிநயராயப்ரார்த்திக்க, இராமாநுசனும், அந்த திவ்ய ஸிம்ஹாஸனத்திலே தம்மாசார்யரான பெரிய நம்பி எழுந்தருளியிருப்பதாக பாவித்துத் தாம் அவருடைய ஆளாக நின்று, நம்பியை வலப்புறத்திலே அமைத்துத் திருக்கைகளாலே அவருடைய திருமுடியைத் தொட்டுக் கொண்டு, ஆசார்யன் திருவடிகளை த்யானித்துக் கொண்டு குருபரம்பராபூர்வகமாக மந்த்ரரத்னமான த்வயத்தை நம்பியின் வலதிருச்செவியிலே உபதேசித்தருளினார்.

இங்ஙனம் உபதேசிக்கப் பெற்ற நம்பியும் போரவுகந்தருளி "நாம் நம் இராமாநுசனையுடையோம்" என்று திருவாய்மலர்ந்தருளிச் செய்ய, உடையவரும் அவருக்கு ஸ்ரீவைஷ்ணவநம்பி என்று தாஸ்ய நாமம் ஸாதித்தருள, நம்பியும் திருப்பரியட்டம், திருமாலை, தீர்த்தம், ஸ்ரீசடகோபன் முதலியன ப்ரஸாதித்தருள உடையவரும், பள்ளி கொண்டநம்பி, வீற்றிருந்தநம்பி, இவர்களை மங்களாசாஸனம்பண்ணி, திருமாமணிமண்டபத்தேற எழுந்தருளி, அதற்கு ராமாநுஜ மடம் என்று திருநாமம் சாத்தியருளி, நம்பிமலை என்ற திருநாமமுடைய திருமலைக்கெழுந்தருளித் திருமலைநம்பியை ஸேவித்து மீண்டும் ஸ்ரீவைஷ்ணவநம்பியை அடிபணிந்து மேலை யாத்திரையைத் தொடரும்படி நியமனம் வேண்ட, நம்பியும் நித்யவாஸமாயிருக்கவேண்ட, எம்பெருமானாரும் காரிமாறனையவதாரித்த தேவரீருடைய ஸ்ரீஸூக்திப்படி "படமுடையரவில் பள்ளி பயின்றவன் பாதம் காணநடக்க" அடியேனுக்கு ஆசைஅதிகரியா நின்றது; தேவரீருடைய நியமனமும் அதிலங்கனம் பண்ணப் போகாது; இங்கு கைங்கர்யத்துக்கு அடியேன் ஆசார்யவம்சத்தைச் சேர்ந்த ஒருவருக்கு ஆச்ரமம் ஸாதித்து இங்கு தேவரீருடைய முகமலர்த்திக் குறுப்பாக நடந்து வருமாறு செய்ய நினைவு கொண்டேன் என, நம்பியும் ஸம்மதித்தருள, உடையவரும், தமக்கன்பரும், பெரியநம்பி திருவம்சஸ்தருமான ஸ்ரீபூர்ணசார்யருக்கு துரீய ஆச்ரமத்தை ஸாதித்து, திருக்குறுங்குடி நம்பி பெயரான பேரருளாளன் என்பதையும் தம்மதான இராமாநுசன் என்பதையும் சேர்த்து பேரருளாளராமாநுஜஜீயர் என்று திருநாமம் சாத்தி கைங்கர்யத்தில் நியமித்து, அவர் ப்ரார்த்தித்தபடித் தம்திருவடிநிலைகளை அவருக்குத் திருவாராதனார்த்தமாக ப்ரஸாதித்து மலைநாட்டு திருப்பதிகளை மங்களாசாஸனம் பண்ணவென்று திருவநந்தபுரம் சென்று சேர்ந்தார்.

அங்கு பத்மநாபனைத் திருவடிதொழுது, அங்கு சில காலமிருந்து ஸ்ரீவைஷ்ணவஸ்ரீ பரவும்படிசெய்ய, இதைக்கண்டு ஸஹிக்கமாட்டாத அர்ச்சக நம்பூதிரிகளும் மாயவாதிகளும் சேர்ந்து அநந்தபத்மநாபனிடம் தாங்கள் உடையவர் கட்டுப்பாட்டில் சேர ஒண்ணாது என்று முறையிட அவரும் அவர்கள் பக்கல் உள்ள வாத்ஸல்யத்தாலே பெரிய திருவடியை அழைத்து, மடத்தில் கண் வளர்ந்தருளும் உடையவரைக் கட்டிலுடன் எழுந்தருளப் பண்ணி திருக்குறுங்குடியில் கொண்டு விடும்படி நியமிக்க, அவரும் அப்படியே நம்பியாறு என்னப்படும் ஸிந்துநதி இருபிரிவாக இருக்கும் இடத்தில் திருப்பரியட்டப் பாறை என்கிற பாறையின்மேல் எழுந்தருளப் பண்ணிவிட்டு மீண்டும் திருவநந்தபுரமே எழுந்தருளினார்.

எம்பெருமானாரும் சிற்றஞ்சிறு காலையில் துயிலுணர்ந்து சுற்றும் கடாக்ஷிக்க, திருக்குறுங்குடியாயிருக்கக் கண்டு "இது என்னமாயம் கொல்" என்று அதிசயித்து நம்பீ! என்று வடுகநம்பியை அழைக்க, திருக்குறுங்குடி நம்பியும் தன்னுரியனுக்குத் தானடிமை செய்ய இதுவேதருணமென்று ஆராதகாதல் கொண்டு வடுக நம்பிபோல் வேஷம் பூண்டு திருப்பொற்கூடை ஸஹிதமாய் "அடியேன் நாயந்தே" என்று எதிரே நிற்க, எம்பெருமானாரும், தேறியும் தேறாதவராய் "அநந்தபத்மநாபனுக்கு நம் விஷயத்தில் திருவுள்ளம் இதுவோ" என்றெண்ணிக்கொண்டு, நம்பியும் தாமுமாய்த் திருபாற்கடலில் நீராடி ஈராறு திருநாமமணிந்து நம்பிக்கும் தாமேயணிவிப்பதாய் அணிவிக்க, அவரும் அணிந்து ஸ்வாமி திருவடியில் பணிந்து நிற்க இருவருமாய் திருக்குறுங்குடியை மங்களாசாஸனம் பண்ணவென்று கோவிலேற எழுந்தருள;

அவ்வூரில் அறியக்கற்றுவல்ல ஸ்ரீவைஷ்ணவர்களான நிலத்தேவர்களும் ஓடோடியும் சென்று ஸ்வாமி எழுந்தருளுவதை பேரருளாள ராமாநுஜ ஜீயர்க்கு ஆசார்யரான சடகோபன் பொன்னடி எழுந்தருளுகிறாரென்று அனைத்துக் கொத்துப் பரிஜனத்தோடும் சென்று ஸ்வாமி திருவடிகளில் தண்டன் ஸமர்ப்பிக்க, உடையவரும் அவரை முடிபிடித்தெடுத்து நம்பி கைங்கர்யங்கள் பற்றி குசலப்ரச்னம் பண்ண, அவரும் நம்பியருளாலும் தேவரீருளாலும் ஒரு குறையுமில்லை; கோஷ்டிகளில்லாமல் ஸ்வாமியும் வடுகநம்பியுமாக எழுந்தருளுவது இது என்ன புதுமை? என்று விண்ணப்பிக்க, இன்புற்ற சீலத்திராமாநுசனும் நடந்த வ்ருத்தாந்தங்களை அருளிச் செய்து அடைவே ஸேவித்துக் கொண்டு உள்ளே சென்று நம்பியை ஸேவிக்க, நம்பியும், தாம் வடுகருக்கு அப்போது சாத்தின திருமண்காப்புடன் பொலிந்து நிற்கக் கண்டு

ஆச்சர்யப்பட்டு, பக்கம் நோக்கி வடுகரைக்காணுமல் அவர் எங்குற்றார் என்று வினவ, எங்கும் தேடியும் காணுமல், "இவரே அவராய் வந்தார்" என்று அறுதியிட்டு, ராமாநுஜ நம்பியோ என்று அருளிச் செய்து, "மாமாயனே ! மாயம் செய்யேலென்னை ! வடுக நம்பிகோலம் பூண்டு எளியேனுக்கு குற்றேவல் பூண்டது அடியேனை மோஹிப்பிக்கவோ?" என்று விண்ணப்பிக்க, நம்பியும் ஸ்வாமியைக் குளிர கடாக்ஷித்து "தன் குருவின் தாளிணைக்கீழ் வாழ்ச்சியான தாஸ்ய ரஸத்தை அநுபவிக்கத் தெரியாத நாட்டுமானிடர்க்கு அத்தை அநுஷ்டித்துக்காட்ட பலகால மெண்ணியிருந்தவனுக்கு இன்று தான் தேவரீருடைய க்ருபையால் அந்த அவா நிறைவேறியது. அடியேனுக்கு ஸ்ரீ வைஷ்ணவ நம்பி என்றும் ராமாநுஜநம்பி என்றும் தேவரீர் அருளிய தாஸ்ய நாமத்தாலே தன்யனானேன்" என்றருளிச் செய்து. எம்பெருமானாருக்குச் சிறப்புக்களை அடைவே ஸாதித்து, அருளாள முனியைக்கொண்டு ப்ராஹ்மாகத்தில் எழுந்தருளுவித்து நாடும் நகரமும் நன்கறியத் திரு வீதிவலம் செய்வித்துக் களித்தருளினன்.

திருவனந்தபுரத்தில் காலையில் ஸ்வாமியைக் காணுதே வடுகநம்பியும் மற்ற முதலிகளும் செய்வதேதன்றறியாதே முசித்துக்கிடக்க, திருக்குறுங்குடிநம்பியும் ஸ்வப்நமுகேன உடையவர் திருக்குறுங்குடியிலெழுந்தருளியிருப்பதைக் காட்டிக் கொடுக்க, வடுகநம்பியும் மற்றவர்களும் கடுநடை நடந்து வைஷ்ணவவாமனக்ஷேத்ரம் வந்தடைந்து எம்பெருமானாரை ஸேவித்து நிற்க ஸ்வாமியும் "அநந்தபத்மநாபன் திருவுள்ளமிருந்தபடி இது" என்று சொல்லி அங்கு நடந்ததெல்லாவற்றையும் சொல்ல அவர்களும் திருக்குறுங்குடியை மங்களாசாஸனம் பண்ணி ஹ்ருஷ்டரானார்கள்.

சில நாட்கள் கழிந்தவாறே எம்பெருமானார் மீதமுள்ள மலைநாட்டு திவ்ய தேசங்களை மங்களாசாஸனம் பண்ணவேணுமென்ற அவாவுற்று நம்பிஸன்னிதியில் விண்ணப்பித்து நியமனம் கோர, நம்பியும் தேவரீருடைய திருவுருவம் ஒன்றை மடத்தில் ஏறியருளப்பண்ணி பேரருளாளராமாநுஜ ஜீயரால் ஸர்வ விதகைங்கர்யமும் கொள்ள வேணும் என்று திருவுள்ளமாயருள உடையவரும் தம்மைப்போல அர்ச்சா விக்ரஹம் ஏறியருளப்பண்ணித் தம் திவ்ய சக்தியையும் ப்ரவேசிக்கச் செய்து ஜீயருக்குத் தந்தருள, ஜீயரும் சிரஸாவஹித்து மடத்தில் திருப்ரதிஷ்டைபண்ணி உகந்தருளினார்.

பேரருளாளஜீயரும் திருக்குறுங்குடியில் நடந்த வைபவத்தின் ஞாபகார்த்தமாக நம்பியின் நியமனம் பெற்று, பெரியதிருவடி உடையவரை எழுந்தருளப் பண்ணிவைத்த திருப்பரியட்டப்பாறையிலே ஸ்வாமிக்குத் திருவிருப்புக்கட்டி விக்ரஹமாக ப்ரதிஷ்டிப்பித்தருளி நித்ய திருவாராதனத்துக்கும் ஏற்பாடுகள் செய்வித்தார். திருப்பரியட்டப் பாறையிலும் ராமாநுஜரும் (திருகுறுங்குடியானை) வடுகநம்பியும் சிலாரூபத்தில் அத்யாபி ஸேவை ஸாதிப்பதும் ப்ரஸித்தம்.

பின்பு ப்ரதி வருஷமும் ஊரார் எதிராசாவதரித்தருளிய சித்திரையில் செய்ய திருவாதிரையன்று உடையவர் ஸன்னிதிக்கு நம்பி எழுந்தருளி, உடையவருடன் சேர்த்தியாகத் திருமஞ்சனம் கண்டருளி, உடையவருக்குத் திருமண்காப்பு சாத்தியவநந்தரம் நம்பிக்குத் திருமண்காப்பு சாத்துவதாக இந்த மஹோத்ஸவம் விமரிசையாக நடந்து வருகிறது. இது இந்த திவ்யதேசத்தில் ஸ்வாமிக்குத் தனிப் பெருமை. மேலும் எம்பெருமானார் இங்கு "இனி திருப்போடெழில் ஞான முத்திரை வாழியே" என்கிறபடியே நம்பிக்கு உபதேசம் பண்ணின அவஸரத்திலேயே ஸேவைஸாதிப்பது தனிச் சிறப்பு. அப்பனுக்குச் சங்காழி அளித்து வேதார்த்த ஸங்க்ரஹமும் ஸாதித்து வட வேங்கடத்திருச்சியில் ஆசார்யனுப் ஞான முத்திரையுடன் ஸேவை ஸாதிப்பது போலேயே இங்கும் மற்றவிடங்களிலெல்லாம் ஆத்ம ஸ்வரூபம் "அடியேனுள்ளான் உடலுள்ளான்" என்றதிற்படியே எம்பெருமானுக்கு சேஷப்பட்ட வஸ்து என்பதை எல்லாரும் அறியும்படி அஞ்சலித்து நெஞ்சுக்குச் கீழே சற்றுத் தாழ அமைத்துக் கொண்டு ஸேவை ஸாதிப்பது ப்ரஸித்தம்.

எம்பெருமானார் பொன்னடி வாழ்க.

திருக்குறுங்குடி திருஜீயர் மடத்து வெளியீடான (1955) "திருக்குறுங்குடி ஸ்ரீபேரருளாள ராமாநுஜ ஜீயர் ஸ்வாமிகள் மடத்து வரலாறு" என்ற நூலிலிருந்து தொகுத்தது

பதிப்பாசிரியர் Dr. V. V. ராமாநுஜம்.

ஸ்ரீ:

# பவிஷ்யதாசார்ய விக்ரஹம்

## நாதமுனிகள் பெற்ற பவிஷ்யதாசார்யர்

ஆழ்வார் திருநகரியில் திருப்புளியாழ்வாரடியில் 12000 முறை கண்ணிநுண் சிறுத் தாம்பை ஜபித்து நாதமுனிகள் குருகூர்ச் சடகோபனை நம்மாழ்வாரை ஸாக்ஷாத்கரித்துத் திருவாய்மொழியையும் மற்றைய திவ்ய ப்ரபந்தங்கள் யாவற்றையும் பெற்றார் என்பது மிக ப்ரஸித்தமான விஷயம். திருவாய்மொழியை ப்ரஸாதித்தருளியபோது, "பொலிக! பொலிக!" என்னும் திருவாய்மொழி வந்தவாறே, "கலியும் கெடும் கண்டு கொண்மின்" என்றதற்கேற்ப இந்த ப்ரபந்ந குலத்திலே ஒரு மஹாநுபாவர் அவதாரம் பண்ணப்போகிறார்; அவராலே நாடடங்க வாழ்ச்சி பெறப் போகிறது" என்றருளிச் செய்ய, நாதமுனிகளும் "பயனன்றாகிலும்" என்ற பாசுரத்தை தேவகானத்தில் பாடி ஆழ்வாரை யுகப்பித்து, "அந்த வ்யக்தியினுடைய வடிவை அடியேனுக்கு உணர்த்தியருள வேணும்" என்று ப்ரார்த்திக்க, ஆழ்வாரும் ஸர்வஜ்ஞராகையால் அன்றைய இரவு நாதமுனிகளுடைய ஸ்வப்நத்திலே எழுந்தருளி, மிகவும் ஸௌந்தர்யம், தேஜஸ் இவைகளையுடையராய் "காஷாயசோபி கமநீய சிகாநிவேசம், தண்டத்ரயோஜ்வலகரம் விமலோபவீதம்" என்று பின்புள்ளோர் அநுஸந்தித்த திருமேனியைக் காட்டித் தந்தருளினார். நாதமுனிகள் மேலும் ஆழ்வாரை உகப்பித்து, இந்த பவிஷ்யதாசார்ய விக்ரஹத்தை அடியேன் நித்யமும் அநுபவிக்கும்படி அநுக்ரஹிக்க வேண்டுமென ப்ரார்த்திக்க, ஆழ்வாரும் சில்ப சாஸ்த்ரத்தில் நிபுணனான ஒரு சில்பிக்கு ஸ்வப்நத்தில் இந்த வ்யக்தியின் வடிவை வகுத்துக்காட்டி, "நாளை நம்புளிக் கீழே வந்து இப்படியே ஸர்வாவயபூர்ணமாகச் சமையுங்கோள்" என்று நியமிக்க, அவனும் அப்படியே நிர்மித்துக் கொடுத்தான். அவ்விக்ரஹத்தில் ஆழ்வார் ஒரு சக்தி விசேஷத்தையும் புகுத்தி நாதமுனிகளுக்குப் ப்ரஸாதித்து, "இவ்விக்ரஹ விசேஷத்தை நம் அவயவமாக நினைத்திரும். இந்த வ்யக்திக்கடி நாமே. இனிமேல் நம் தர்சனம் ஓங்கி வளரும்படி அடியிட்டு வைத்தோம். உம்முடைய குலத்தில் ஒருவர் இந்த ஆசார்யரை ஸாக்ஷாத்கரிக்கப் போகிறார். இந்த விக்ரஹ விசேஷத்தை நம்மை கண்டிருக்குமாப் போலே கண்டிரும்" என்று ஸாதித்தருளினார். நாதமுனிகளும் அப்போது ஆழ்வார் விஷயமாக

> யஸ்ஸ்வாபகாலே கருணாகரஸ்ஸந் பவிஷ்யதாசார்ய பரஸ்வரூபம் ।
> ஸந்தர்சயாமாஸ மஹாநுபவம் தம் காரிஸூநும் சரணம் ப்ரபத்யே ॥

என்று அருளிச் செய்தார். பின்னர் ஸ்வஸ்தலமான வீரநாராயணபுரத்தே எழுந்தருளி இந்த நடப்புகளை மன்னனாரிடம் விண்ணப்பித்துத் தம் அந்தரங்க சிஷ்யர்களிடமும் சொல்லி ப்ரீதரானார்.

பின்பொருகால் தம் குமாரரான ஈச்வர முனியையும் தம்ப்ரிய சிஷ்யரான உய்யக் கொண்டாரையும் அழைத்து, உய்யக்கொண்டாரை தர்சன ப்ரவர்த்தகராக நியமித்து, தம் குமாரரிடம், "உமக்கு ஒரு குமாரர் உண்டாகப் போகிறார். அவருக்கு யமுனைத் துறைவர் என்று திருநாமம் சாத்தும்" என்று நியமித்து, உய்யக்கொண்டாரிடம் பவிஷ்யதாசார்ய விக்ரஹத்தை ப்ரஸாதித்து, இது நமக்கு மிகவும் விரும்பின விஷயம். ஈச்வர முனியின் குமாரருக்கு இதைத்தஞ்சமாகக் காட்டிக் கொடும்" என்று நியமித்தார்.

பின்பு நாத முனிகள் பரமபதித்துத் தாமே தர்சனம் நடத்திக் கொண்டு போரும்போது உய்யக் கொண்டாரும் தம் சிஷ்யர்களான மணக்கால் நம்பியும் திருவல்லிக்கேணிப் பாண்பெருமாள் அரையரும் திருவாய்மொழி கேட்கிற போது 'பொலிக! பொலிக!' வந்தவாறே நாதமுனிகள் ஆழ்வாரிடம் இந்தத்திருவாய்மொழிக்கு விஷயமான வ்யக்தியை ஸாக்ஷாத்கரித்த விவரங்களை விரிவாயருளிச் செய்து பவிஷ்யதாசார்ய விக்ரஹத்தையும் அவர்களுக்குத் தஞ்சமாகக் காட்டித் தந்தருளினார்.

உய்யக் கொண்டாருக்குச் சரமதசை ப்ராப்தமானவாறே, அவரும் இந்த விக்ரஹத்தை மணக்கால் நம்பியிடம் ந்யஸ்த நிதியாய்க் கொடுத்தருளினார். உய்யக்கொண்டார் காலத்தில்

ஈச்வரமுனிக்குக் குமாரர் தோன்றவில்லை. பின்னர் குமாரர் தோன்றியதும், யமுனைத்துறைவர் என்று பேரிட்டதும், அவர் ஆளவந்தார் என்று ப்ரஸித்தரானதும், அவரை அநுவர்த்தித்து மணக்கால் நம்பி தர்சனத்துக்குக் கடவராய்த் திருத்தியதும் நாடறிந்த சரித்திரமாகும். மணக்கால் நம்பியும் ஆளவந்தாரிடம் உமது பிதாமஹர் தர்சனரஹஸ்யங்களை மட்டுமல்லாமல் இந்த விக்ரஹத்தையும் ந்யஸ்தப்ரமாக நம்மிடம் வைத்தருளினார். இந்த வ்யக்தியை நீர் ஸாக்ஷாத்கரிக்கப்போகிறீர். இந்த அவதார ரஹஸ்யத்தைப் பேணிக் கொண்டு போரும்'' என்று அந்த விக்ரஹத்தை ப்ரஸாதித்தருளினார்.

ஆளவந்தாரும் அப்படியே தர்சன ப்ரவர்த்தகராய் எழுந்தருளியிருக்கும் போது பவிஷ்யதாசார்ய விக்ரஹத்தைப் பரம ரஹஸ்யமாய்ப் பரிவுடனே நோக்கிக் கொண்டு; தம்மாசார்யர் அருளிச் செய்தபடியே நாட்டை நடத்தியுய்யச் செய்ய அவதரிக்கப் போகும் வ்யக்தியை எதிர் நோக்கிக் கொண்டிருந்தார். காலக்ரமத்தில் இளையாழ்வாரைப் பற்றி கேட்டருளி, பெருமாள் கோவிலுக்கெழுந்தருளி, கரியமாணிக்கத்தாழ்வார் ஸன்னிதிக்கருகில் திருக்கச்சிநம்பி காட்டக்கண்டு, இவரே பவிஷ்யதாசார்யர் என்று நிச்சயித்து, ''ஆமுதல்வனிவன்'' என்று அநுக்ரஹித்து, அந்த ஸமயம் அவரை அழைத்து அளவளாவ (ஏதோ காரணங்களால்) இயலாதபடியாலே, ''இளையாழ்வாரை தர்சனப்ரவர்த்தகராக்கும்படி நோக்கவேணும்'' என்று பேரருளாளனைச் சரணம் புகுந்துப் பின்னர் கோவிலேற எழுந்தருளினார்.

பின்னர் தமக்கும் அந்திமதசை அணித்தானவாறே இந்த பவிஷ்யதாசார்ய விக்ரஹத்தைத் திருக்கோட்டியூர் நம்பிக்கு ப்ரஸாதித்து நாதமுனிகளுக்கு இந்த திருமேனி கிடைத்த அனைத்து வரலாற்றையும் ஸாதித்து, ''அனைத்துலகும் வாழப்பிறந்தவர் இவர். நாம் உம்மிடம் வைத்துள்ள ஸகல ரஹஸ்யார்த்தங்களையும் இவருக்கு ஒளிக்காதே சொல்லும். இவர் திருநாமத்தால் இந்த தர்சனம் மகோந்நத நிலையை அடையப்போகிறது. ப்ரபந்நகுலம் உத்தரிக்கும்படித் திருவவதாரம் பண்ணியுள்ளமஹான் இவர். இவராலேதான் உங்களுக்குப் பேறு. இவரோடே இரண்டு நாளாகிலும் அளவளாவும் பாக்யமில்லாத இழவோடே நாம் போகிறோம்'' என்று அருளிச் செய்து திருநாட்டுக்கெழுந்தருளினார்.

திருக்கோட்டியூர் நம்பியும் இந்த ரஹஸ்யங்களையும் பவிஷயதாசார்ய விக்ரஹத்தையும் ஆராதித்து வந்தார். இராமாநுசனுக்கு இவர் ஸகலார்த்தங்களையும் உபதேசித்ததையும் திருமேனிக்குப் பரிவராயிருந்ததையும் இம்மலரில் வேறு இடங்களில் காண்க. ஒரு ஸமயம் இவர் எம்பெருமானாரிடம் ''தேரீவரைப் பலகாலும் துளைப்பண்ணியதைத் திருவுள்ளத்திலே கொள்ளாதே கோர். அர்த்தத்தின் சீர்மையை வெளியிட வேண்டிச் செய்தோமித்தனை தேவரீர் லோக ஸம்ரக்ஷணார்த்தமாகத் திருவவதரித்தருளிற்று. நாதமுனிகளுக்கும் தஞ்சமான விஷயம் தேவரீர். இப்படிப் பட்ட மஹாநுபாவனோடு ஸம்பந்தமுண்டப் பெற்றோம் என்று மார்பிலே கைவைத்து உறங்கலாம் படியாயிருக்கும். இந்த தர்சனம் எம்பெருமானார்தரிசனமென்று தேவரீர் திருநாமத்தினால் கொழுந்து விட்டு விளங்கப் போகிறது'' என்று அருளிச் செய்தார்.

திருக்கோட்டியூர் நம்பியும் தம்சரமதசையில் தாம் போற்றிவந்த இந்த திவ்ய விக்ரஹத்தை எம்பெருமானார் திருவடிகளில் ஆச்ரயித்திருந்த தம் குமாரத்தி தேவகி நாச்சியாரிடம் ஸாதித்து, தம்முள்ளக் கருத்து வெளியாம்படி 'எம்பெருமானார் திருவடிகளே சரணம்'' என்று அநுஸந்தித்துக் கொண்டு திருநாட்டு கெழுந்தருளினார்.

பின்னர் தமது திருத் தகப்பனாரையும் அர்ச்சையாயெழுந்தருளப்பண்ணி பவிஷ்யதாசார்ய விக்ரஹத்தையும் சேர்த்து தேவகி நாச்சியார் திருக்கோட்டியூரில் ஸன்னிதியுண்டாக்கி ப்ரதிஷ்டிப்பித்தார். இப்போதும் இங்கு ஸேவைஸாதித்துக் கொண்டு உலகத்தை வாழ்வித்தருளுகிறார் ஸ்வாமி எம்பெருமானார்.

(இந்த விவரங்கள் நாடனாராச்சான் பிள்ளை ஸாதித்த சரமபர்வநிர்ணயம் என்ற கிரந்தத்திலிருந்தும் பெரியோர் வாய் கேட்டும் தொகுக்கப் பட்டவை).

## மதுரகவிகள் பெற்ற பவிஷ்யதாசார்யர்

நம்மாழ்வாருடைய அவதாரம் தீர்த்தம் ப்ரஸாதித்தான பின்பு மதுரகவிகள் ஆசார்யரின் பிரிவைப் பொறுக்கமாட்டாமல் அர்ச்சாவதாரமாய் ஆழ்வாரை எழுந்தருளப்பண்ணுவதாக அவரநுமதி கொண்டு தாமிரபரணி தீர்த்தத்திலிருந்து தாமிரத்தை (உலோகம்) பிரித்தெடுத்து அதுகொண்டு ஆழ்வாரிடம் ப்ராவண்யமுள்ள ஒரு சிற்பியைக் கொண்டு ஒரு திவ்யமங்கள விக்ரஹத்தை உருவாக்கினர். அந்த விக்ரஹமும் ஆழ்வார் தமக்கு அநவரதமும் நெஞ்சுக்கு விஷயமாக இருப்பதுபோல் பூர்ண உதரமும் ஞான முத்திரையுமாக அமையாமல் அஞ்சலிஹஸ்தத்துடன் ஆழ்வார் உருவினின்றும் வேறுபட்டதாய் அமைந்திருந்தது. இதுபற்றி வியாகூலமடைந்த மதுரகவிகள் பலமுறை கண்ணிநுண் சிறுத்தாம்பைப்பாடி ஆழ்வாரை உகப்பித்து ஆழ்வார் விக்ரஹம் தம்நெஞ்சுக்கு ஸதா விஷயமான ப்ரகாரமே அமையும்படி அநுக்ரஹிக்க வேணும் என்று ப்ரார்த்திக்க, ஆழ்வாரும் மதுரகவிகளின் ஸ்வப்நத்தில் தோன்றி "இப்போது அமைந்துள்ள விக்ரஹத்துக்கும் நாமே அடியாவோம். "பொலிக! பொலிக!" திருவாய்மொழியில் "கலியும் கெடும் கண்டு கொண்மின்" என்ற வசனத்துக்கு விஷயமான ஸர்வோத்தாரக பவிஷ்யாதாசார்ய விக்ரஹத்தை உமக்குக் காட்டிக் கொடுத்தோம். இதை நாமேயாக ப்ரதிபத்திப் பண்ணும். மறுபடி ஒரு விக்ரஹம் சமையும்; நாமே வந்து ஆவிர்ப்பவிக்கிறோம்" என்று சொல்லி மறைய மதுரகவிகளும் "இதொரு ஸ்வப்நமிருந்தபடி என்?" என்று அதிசயித்து மிகவும் ப்ரீதராய் மற்றுமொருமுறை தாமிரபரணி நதியிலிருந்தே உலோகம் ஸித்தப்படுத்தி சிற்பியைக் கொண்டு விக்ரஹம் எழுந்தருளப் பண்ண இவர் சிந்தைக்கு ஸதா விஷயமாயிருக்கும் திருக்கோலத்தில் உண்ணும் சோறு பருகுநீர் தின்னும் வெற்றிலையுமெல்லாம் கண்ணன் என்கிறபடியே ஸதாபகவதநுபவம் பண்ணுவதால் நிறைந்த வயிற்றையுடையராயும் ஞான முத்ரா ஹஸ்தராயும் ஸேவை ஸாதிக்க, மிகவும் மகிழ்ந்து கோவிலில் ஆதிநாதன் திருமுன்பே உறங்காப்புளியடியில் ஸன்னிதி அமைத்து ப்ரதிஷ்டிப்பித்து திருநக்ஷத்ரங்கள் உத்ஸவாதிகளையெல்லாம் விமரிசையாகப் பண்ணி அனைத்தழகும் கண்டருளும்படி பண்ணி வைத்தார்.

ஆழ்வார் விக்ரஹத்துக்கு முன்பு தோன்றியபடியால் இந்த பவிஷ்யதாசார்ய விக்ரஹத்தை அண்ணர் என்பர். ஸ்வாமிக்கு ஆண்டாளிட்ட கோயிலண்ணர் என்ற திருநாமம் இப்படி ஒரு வழியில் அர்த்தமுடையதானது அதிசயிக்கத்தக்கதே மதுரகவிகளும் இந்த விக்ரஹத்தையும் ஆழ்வாரைப்போல் பூசித்துப் பேணிக்காத்து வந்தார்.

பிறகு வெகுகாலம் சென்ற பிறகு பிள்ளைலோகாசாரியர் கோயிலில் தர்சன நிர்வாஹம் பண்ணியருளும் காலத்தில் நாட்டில் துருஷ்கர்களால் ஏற்பட்ட உபத்ரவம் அதிகரித்து நம் பெருமாளும் கோயிலை விட்டுப் புறப்பட்டு வலசையாய் எழுந்தருளியபோது, அதுபோலவே ஆழ்வார்திருநகரியிலும் பயமேற்பட ஆழ்வாரையும் ஊரைவிட்டு வெளியே எழுந்தருளப் பண்ணும்படி ஆய்விட்டது. ஆழ்வாரை மேற்கேயுள்ள மலைச்சரிவு ஒன்றில் நிக்ஷேப வித்தமாக எழுந்தருளப் பண்ணியதும், மதுரையில் ராஜ்யபாரம் நடத்திக் கொண்டிருந்த திருவாய்மொழிப்பிள்ளையின் முக்யப்ரயத்னத்தால் காடு மூடியிருந்த திருநகரியைத் திருத்தி ஆழ்வாரையும் மலைச்சரிவினின்றும் மறுபடி எழுந்தருளப் பண்ணி கோவில் திருப்பணி முடித்து பழைய நிலைக்குக் கொண்டு வந்ததுமான விபரங்களை யதீந்த்ர ப்ரவணப்ரபாவம் முதலான நூல்களில் காணலாம். மணக்கால் நம்பியால் ஆளவந்தார் தர்சனநிர்வாஹகராத் திருத்தப்பட்டது போல கூரகுலோத்தமதாஸரால் திருத்தப்பட்ட திருவாய்மொழிப்பிள்ளை ஆழ்வார் திருநகரியிலேயே தர்சனம் நிர்வகஹித்துக் கொண்டு எழுந்தருளியிருந்தார் இப்படியிருந்த நாளில் மதுரகவியாழ்வார் எழுந்தருளப் பண்ணிய பவிஷ்யதாசார்ய விக்ரஹம் திருப்புளியடியில் இருப்பதாக உணர்ந்து அந்த விக்ரஹத்தை வெளிப்படுத்தி, தனிக்கோவில் கட்டி, அதைச் சுற்றிலும்

ராமாநுஜ சதுர் வேதிமங்கலம் என்ற வீதிகளை ஏற்படுத்தி, அந்த ஸன்னிதிக்கு நிர்வாஹகராய் திருநாவீறுடைய பிரானின் குமாரரும் தம் ப்ரிய சிஷ்யருமான அழகியமணவாளனை நியமித்தார். அழகிய மணவாளனும், ஸ்வாசார்யரான திருமலையாழ்வாரிடம் (ஸ்ரீசைலேசர் என்றும் திருவாய் மொழிப் பிள்ளை என்றும் இவரையே அழைப்பர்) கனத்தப்ரேமமுடையராய் அவர்தாமே தமக்குத் தஞ்சமாகக் காட்டிக் கொடுத்த எதிராஜரிடம் அத்யந்த பக்தியுடன் ஈடுபட்டு யதிராஜ விம்சதி என்கின்ற ஸ்தோத்ரத்தை அந்த எம்பெருமானார் திருவடிகளில் விண்ணப்பம் பண்ணி னார். இந்த ப்ராவண்யாதிசயத்தினால் யதீந்த்ரப்ரவணர் என்று பின்பு கொண்டாடப்பட்டவரா யினர். யதி புநரவதாரமான இந்த அழகிய மணவாளன் பின்னர் ஆச்ரம ஸ்வீகாரம் பண்ணி அழகிய மணவாளமாமுனியாகி, கோவிலில் தர்சன நிர்வாஹம் பண்ணியிருந்து அழகிய மணவாளப் பெருமாளுக்கும் ஆசார்யராயினர் என்பது மிக ப்ரஸித்தமான வரலாறாகும்.

அர்ச்சையில் ஆழ்வாருக்கும் முன்னர் தோன்றி அவருக்கு மிகவும் உகந்த விஷயமான படியால், ஆழ்வார் வைகாசி விசாகத் திருநாள் கண்டருளுகையில் ஏழாவது திருநாளன்று இந்த எம்பெருமானார் ஸந்நிதிக்கு எழுந்தருளி அவருடன் ஒரே ஆஸனத்தில் எழுந்தருளி யிருந்து திருமஞ்சனம், திருவாராதனம், உத்ஸவம் இவை கண்டருளி மகிழ்வதை இன்றைக் கும் ஆழ்வார் திருநகரியில், ஸேவிக்கலாம்.

தம்முடைய (விபவ) அவதாரத்துக்கு வெகுகாலம் முன்னரே இரண்டு இடங்களில் தம் திருவுருவைப் போற்றி வணங்கும்படியான அஸாதாரணப் பெருமை படைத்தவர் நம் ஸ்வாமி ராமாநுஜர் ஒருவரே. இவருக்கு முன்பிருந்தவர்கள் இவர் திருமுடி ஸம்பந்தத்தால் பேறு பெற்றதாகவும் பின்புள்ளோர் திருவடி ஸம்பந்தத்தால் பேறு பெறுவதாகவும் ஸத்ஸம்ப்ரதாயத் துணிவு. ஸர்வ உத்தாரகத்வம் படைத்த ஆசார்யன் என்ற சொல்லுக்கு இலக்கணமாகத் திகழ்பவர் இவர் ஒருவரேயாகும்.

நல்லார் நவில் குருகூர் நகரான ஆழ்வார் திருநகரிக் கெழுந்தருளி ஆழ்வாரை மங்களா சாஸனம் செய்தருளி மாறனடி பணிந்துய்ந்த விராமாநுசன் பெற்ற வரத்தினால் அதுவரை மதுரகவிகள் என்று குலாவப்பட்ட ஆழ்வார் திருவடி நிலைகளை (ராமாநுசனுடைய ப்ராத்தனைக் கிணங்க) "ராமாநுஜன்" என்று வ்யவஹரிக்க வேண்டுமென்று நம்மாழ்வாரின் திவ்யாஜ்ஞை. இதனால் நம்மாழ்வார் திருவடி நிலைகளுக்கு மட்டுமின்றி ஏனைய மற்ற ஆழ்வார்களின் திருவடி நிலைகளும் ராமாநுஜன் என்றே பெயராயின.

ஆழ்வார் திருநகரியில் ஸேவைஸாதிக்கும் எம்பெருமானார் திருமேனி பற்றிய விவரங்கள் அங்குள்ள பெரியோர் வாய் கேட்டறிந்தவை.

தொகுப்பு : பதிப்பாசிரியர் Dr. V. V. ராமாநுஜம்.

ஸ்ரீ :

# அஞ்சுகுடிக்கொரு சந்ததியாம் ஆண்டாள் தமக்கும் அண்ணரான பெருமாள்

## Dr. V. V. ராமாநுஜம்

சூடிக்கொடுத்த சுடர்கொடியான ஆண்டாள் வாழி திருநாமத்தில் "பெரும்பூதூர் மாமுனிக்குப் பின்னானாள் வாழியே" என்று நாம் அநுஸந்தித்து வருகிறோம். எம்பெருமானார் திருமஞ்சனக் கட்டியத்தில் "ஆஞ்சு குடிக்கொரு சந்ததியாம் ஆண்டாள் தமக்கும் அண்ணரான பெருமாள்" என்ற கொண்டாட்டத்தைக் காணலாம். இவருடைய பல திருநாமங்களில் "கோயிலண்ணன்" என்பதும் ஒன்று. இத்திருநாமம் ஆண்டாளால் (அர்ச்சாஸமாதியைக் கடந்து) இடப்பட்டதாகும்.

ஒரு ஸமயம் தமது சிஷ்யர்குழாங்களுக்கு நாச்சியார் திருமொழி காலக்ஷேபம் ஸாதிக்கையில் "நாறுநறும்பொழில்" (9-6) பாசுரம் ப்ரஸ்துதமாக, ஆண்டாள், "திருமாலிருஞ்சோலை நம்பிக்கு நான் நூறு தடாவில் வெண்ணெய் வாய்நேர்ந்து பராவி வைத்தேன்—நூறு தட நிறைந்த அக்காரவடிசில் சொன்னேன்—ஏறு திருவுடையான் இன்று வந்து இவை கொள்ளுங் கொலோ" என்று பாரித்துள்ளது கண்டு, அப்போது ஒரு சிந்தை செய்து, உடனே முதலிகளு

டன் திருமாலிருஞ்சோலை சென்றடைந்து அழகருக்கு நூறு தடா வெண்ணெயும் நூறு தடா அக்கார வடிசிலும் ஸமர்ப்பித்து, திருவடி தொழுது, நேரே ஸ்ரீவில்லிபுத்தூர் சென்று ஆண்டாளை மங்களாசாஸனம் பண்ணி "தேவரீர் மனோரதித்ததை அடியேன் பெருமாளுக்கு அமுது செய்யப் பண்ணினேன்" என்று விண்ணபிக்க, ஆண்டாளும் அர்ச்சாஸமாதியைக் கடந்து தம் இருப்பை விட்டு நாலடி நடந்து வந்து "நம் கோயிலண்ணரே!" என்று எம்பெருமானாரைக் குளிர கடாக்ஷித்து அநுக்ரஹித்தருளினார். தங்கை செய்ய ஆசைப்பட்டதைத் தமையன் தலைக்கட்டி வைப்பது லௌகிக வழக்கன்றோ? ஆகையால் உடையவரைக் கோதை தமது அண்ணராக மதித்து பெரும்பூதூர் மாமுனிக்குப் பின்னானாளாக (தங்கையாக) ஆயினள்.

இங்கு பாசுர வ்யாக்யானத்தில் பெரியவாச்சான்பிள்ளை ஸ்ரீஸூக்தி : "நூறு தடா நிறைந்த வெண்ணெய் என்று பெண்பிள்ளை ப்ரார்த்தித்து வைத்தாள்; கொடுத்தாளாகச் சொல்லக் கேட்டிலோம்; பரிந்தவற்றையிறுக்கை அவ்ஸந்தானஜாதர்க்கு பரமிறே என்று தாம் (ராமாநுஜர்) அமுதசெய்யப் பண்ணினாராம்" என்று.

ஆண்டாள் பூதேவியினம்சமாகத் திருவவதரித்தவர். மங்களாசாஸனத்தில் பொங்கும் பரிவுள்ள பட்டர்பிரான் குமாரத்தியாக வளர்ந்து, அவரையே பிதாவாகவும் ஆசார்யராகவும் கொண்டு "விட்டுசித்தர் தம் தேவரை வல்ல பரிசு வருவிப்பரேல் அது காண்டுமே" என்கிற படியே, "ஆழ்வாருடைய ஸம்பந்தத்தையிட்டு எம்பெருமான் கட்டாயம் அநுக்ரஹிப்பன்" என்ற திடமான அத்யவஸாயமுடையவராயிருந்தது ப்ரஸித்தம் எம்பெருமானாரும் ஆசார்யஸம்பந்தத்தாலே பேறு என்ற அத்யவஸாயமுடையவரே. இதனாலேயே பொய்யிலாத புந்தியுடையராம் நம் மணவாளமாமுனிகளும் "ஆண்டாள் மதுரகவியாழ்வார் எதிராசராமிவர்கள்" என்று இம்மூவரையும் ஒக்கப்பாடியருளினார் உபதேசரத்தினமாலையில். மேலும், ஸ்ரீதேவியை விட பூமிதேவிக்கே சேதனரிடம் பரிவு அதிகம். இப்பார்மகட்க்கே தேசுடைய திருவரங்கனார் பேர்க்கவும் பேராமல் பேசியிருப்பது—அதாவது "ஸ்திதேமனஸி ஸுஸ்வஸ்தே அஹம் ஸ்மராமி மத்பக்தம், நயாமி பரமாங்கதிம்" என்ற சரண்ய அத்யவஸாயத்தை வெளியிட்டருளியது. கேவலம் ஸம்ஸாரிகளுடைய துர்க்கதியை மட்டுமே கண்டிறங்கி அருள் சுரப்பதில் க்ருபா மாத்ர ப்ரஸன்னரான எம்பெருமானாருக்கும் பூமிப்பிராட்டிக்கும் அத்யந்தம் ஒருமைப்பாடுள்ளது. இக்காரணம் பற்றியே ஆண்டாளிடம் அபிமாநப்ராவண்யாதிசயத்தை உள்ளவராயிருந்தார் உடையவர்.

ஸ்ரீவில்லிபுத்தூரில் எம்பெருமானாரை அநுக்ரஹிக்கவென்று வெளிவந்த ஆண்டாள், இந்த அதிசயத்தை யாவரும் அறியவேணுமென்று கர்ப்பக்ரஹத்துள் திரும்பவும் எழுந்தருளாமல் அதற்கு முன்னிலேயே இப்போதும் ஸேவை ஸாதிக்கிறார். அந்தத் திருமேனியிலுள்ள பரிவால் மார்கழி முப்பதும் நடந்த நீராட்ட உத்ஸவத்தை ஏழு தினங்களில் சுருக்கி நடத்தும்படி ராமாநுஜார்யதிவ்யாஜ்ஞை ஏற்பட்டுள்ளது. இப்படியே நடந்து வந்தது மணவாளமாமுனிகள் காலத்தில் எட்டு நாளாயிற்று. நீராட்ட உத்ஸவ சாற்றுமுறை ஸேவிக்கவென்று கோயிலிலிருந்து அழகிய மணவாளமாமுனிகள் எழுந்தருள, அசிந்திதமாக ஒருநாள் தாமதமாகவே சாற்றுமறைக்கு மறுநாள் (ஸங்கராந்தியன்றே) எழுந்தருளும்படியாயிற்று. யதிபுனரவதாரராகையால் இவர் எழுந்தருளினதற்கு ஸ்மாரகமாக ஒரு அதிசயம் வேணும் என்று இவருக்கென்று அன்றும் நீராட்ட உத்ஸவம் கண்டருளினாள் ஆண்டாள். இப்போதும் மணவாளமாமுனிகள் எழுந்தருளி இந்த உத்ஸவத்தை நடத்திவைத்து மகிழ்கிறார். ராமாநுஜார்ய திவ்யாஜ்ஞைப்படி மாதக்கடைசியில் நடக்கும் நீராட்ட உத்ஸவத்தின்போதுதான் அங்கு திருப்பாவை அநுஸந்தானம். மார்கழி பூரவும் கிடையாது. தினம் ஒன்றுக்கு நான்கு பாசுரங்களாக முதலில் வடபெருங்கோயிலுடையானிடம் விண்ணப்பித்து, பிறகு ஆண்டாள் நீராட்டம் கண்டருளிய பின்பு, பக்கத்தில் எம்பெருமானார் எழுந்தருளியிருக்க "அருளப்பாடு நம் கோயிலண்ணர்" என்று அருளப்பாடிட்டுப் பிறகு பாசுரங்கள் விண்ணப்பம் பண்ணப்படுகின்றன. எம்பெருமானாருக்கு நாச்சியாரிடமுள்ள ப்ரா

வண்யாதிசயம் வேதமனைத்துக்கும் வித்தாக அவர் பாடியருளிய திருப்பாவையினிடமும் உண்டு. ஸ்வாமிருக்குத் திருப்பாவை ஜீயர் என்ற பெயர் பெரியநம்பியால் சாத்தப்பட்டது (இதுபற்றிய விவரங்கள் மற்றொரு கட்டுரையில் உள்ளதைக் காண்க) ஸ்ரீபெரும்பூதூரில் இன்றும் ஸ்வாமி திருமஞ்சனம் கண்டருளியதும் திருமண்காப்பணியும்போது திருப்பல்லாண்டு அநுஸந்தானமில்லாமல் திருப்பாவையே தொடங்கி ஸேவிக்கப்படுகிறது.

திருவரங்கத்தில் அத்யயனஉத்ஸவத்தில் அரையர் பாசுரங்களை விண்ணப்பிக்கு முன்பு அந்தந்தப் பாசுரகர்த்தாவான ஆழ்வாரிடம் சென்று அவரனுமதி பெற்று அவர் திருமுன்னமே தாளத்தைசப்தித்துத் தொடங்குவது அநுஷ்டானத்திலுள்ளது. ஆண்டாள் அருளிச்செய்துள்ள திவ்யப்ரபந்தங்கள் ப்ராரம்பமாகும் தினங்களில் இவை எம்பெருமானார் திருமுன்பே தொடங்கப்படும் அநுஷ்டானமும் அறியத்தக்கது.

திருப்பதியில் கோவிந்தராஜப் பெருமாளை ப்ரதிஷ்டிப்பித்தபோது அவருக்கு ஆண்டாளை வலப்புறத்தில் (தனிக்கோவில் நாச்சியார் ஸ்தானத்தில்) கோதாலக்ஷ்மியாக ப்ரதிஷ்டிப்பித்து, திருவேங்கடமுடையானிடம் ஆண்டாள் அநுபவிக்கப் பாரித்ததை திருமலையோடு ஒத்த திவ்யதேசமான திருப்பதியில் எம்பெருமானிடம் பெறும்படி பல உத்ஸவங்களைக் கற்பித்து நடக்கும்படி பண்ணியருளியது ஸ்வாமிக்கு ஆண்டாளிடம் உள்ள ப்ராவண்யாதிசயத்தைக் காட்டும்.

திருப்பாவை ஜீயரான எம்பெருமானார் கோவில்களிலும் நமது இல்லங்களிலும் பகவதாராதனத்தின் அங்கமாக திருப்பாவையை ஸேவித்து "சிற்றஞ்சிறுகாலே" பாசுரத்துடன் சாற்றுமறை பண்ணுவது என்ற ஸ்யவஸ்தையைக் கற்பித்தருளினர். தமது நித்யக்ரந்தத்தில் ஸ்வாமி "ச்ருதிஸுகை ஸ்தோத்ரை: ஸ்துத்வா" என்று அருளிச் செய்துள்ளதைப் பொதுவாக 'அருளிச்செயலநுஸந்தானம்' என்று கொண்டாலும் குறிப்பாக திருப்பாவையையே திருவுள்ளத்தில் கொண்டு அருளிச்செய்ததாக வேண்டும். ஸ்வாமி மாதுகரத்துக்கு (பிக்ஷைக்கு) எழுந்தருளும் போது திருப்பாவை அநுஸந்தானத்துடனேயே எழுந்தருளுவர் என்று தெரியலாகிறது. திருப்பாவையின் விசேஷார்த்தங்களை ஆசார்யபரமாக நிர்வஹிக்கும் கட்டளை ஆச்சர்யமாக இருக்கும். (ஸ்ரீ உ. வே. காஞ்சி பர. அ. ஸ்வாமியின் திருப்பாவை விசேஷார்த்தம் — 1957 என்ற நூலை ஸேவித்தால் இதனுண்மை விளங்கும்.) விரிவுக்கஞ்சி எம்பெருமானார் திருப்பாவையை ஆழ்ந்து நோக்கி அதிலிருந்து கிடைத்த ஒரு பொருளை கீதா பாஷ்யத்தில் பொறித்து வைத்துள்ளதை மட்டும் காட்டி ஸ்வாமிக்கு ஆண்டாள், அவர் ஸ்ரீஸூக்திகளிடத்து இருந்த விசேஷப்ரதிபத்தியைக் காட்டி நிற்கிறேன்.

"மாலே மணிவண்ணா" (திருப்பாவை-28) பாசுரத்தில் "மேலையார் செய்வனகள் வேண்டுவனகேட்டியேல்" என்ற சொற்றொடரைக் காணலாம். இங்கு, "மேலையார் செய்வனகள் கேட்டியேல்" என்றால் போதும். "சிஷ்டாசாரத்தைக் கேளாய்" என்ற பொருள் கிடைத்து விடும். வேண்டுவன என்ற சொல் அதிகமாகக் காண்கிறது.

"அரங்கர்மௌலி சூழ்கின்றமாலையைச் சூடிக்கொடுத்தவள் தொல்லருளால் வாழ்கின்ற வள்ளலிராமாநுசன்" என்று போற்றப்படும் நம் ஸ்வாமி பகவத்கீதையில் 3-21 "யத்யதாசரதி ச்ரேஷ்ட: தத்ததேவ இதரோஜநா:; ஸயத்ப்ரமாணம் குருதே லோகஸ்தத நுவர்த்ததே" என்ற ச்லோகத்தின் பாஷ்யத்தில் ஸ யத் ப்ரமாணம் குருதே என்று தமக்கு முன்பு பாஷ்யமிட்டவர்கள் பிரித்துப் பொருள் கொண்டதுபோல் கொள்ளவில்லை. ஸ-ச்ரேஷ்டர் - பெரியோர்கள்; யத் ப்ரமாணம் குருதே-யாதொன்றைப்ரமாணமாகக் கொள்ளுகிறார்களோ? அது தன்னையே லோகமும் ப்ரமாணமாகக் கொள்ளுகிறது என்பது ஸாமான்யமாக யாரும் கூறும் பொருள். ச்லோகத்தின் முன்பாதியில் யத்யதாசரதி ச்ரேஷ்டத்: என்றிருப்பதால், பின்பாதியும் ச்ரேஷ்டர்களான பெரியோர்களின் அநுஷ்டானத்தையே கூறுவதாகக் கொண்ட நம்ஸ்வாமி,

"சிஷ்டர்கள் தாங்கள் அநுஷ்டிக்கிற கருமத்திற்கு எவ்வளவு அவதி வைத்துக் கொள்ளுகிறார்களோ அவ்வளவு அவதியையே பிறரும் வைத்துக் கொள்ளுகிறார்கள்" என்று யத்ப்ரமாணம் என்பதை ஓரேபதமாகக் கொண்டு அர்த்தமருளிச் செய்தார். லோகத்தவர் ச்ரேஷ்டரான பெரியோர் ஆசாரத்தையே பின்பற்றுகின்றனர் என்று மட்டும் கொள்ளாமல் அவர்கள் அந்தந்த ஆசாரத்தை எந்தெந்தஅளவில் அநுஷ்டிப்பர்களோ (எந்தவிதமாக அநுஷ்டிப்பர்களோ) அப்படியே லோகத்தவரும் என்ற ரஸகனமானதும் உயர்ந்ததுமான அர்த்தத்தைக்காட்டியருளினார். விசேஷ தர்மாநுஷ்டானத்தைப்பின் சென்றே ஸாமன்யதர்மாநுஷ்டானம் என்பது நம்ஸம்ப்ரதாயத்தில் மிகவும் முக்யமானதொன்று (இதை விவரிக்க இந்த வ்யாஸம் இடமன்று). ஆண்டாள் ப்ரயோகித்த **வேண்டுவன** என்ற சொல்லிலிருந்து கிடைத்த அர்த்தமிது: எந்த கருமங்களுக்குப் பலன் ஒன்றுமில்லாமல் அநுஷ்டிக்காவிடில் பாபம் மட்டும் ஸம்பவிக்குமோ அக்கருமங்களைமட்டும் செய்துதலைக்கட்டுவர் நம் பெரியோர்; வேண்டாதனவற்றை விட்டு **வேண்டுவன** செய்வர் என்பது தாத்பர்யம்.

திருப்பாவை ஜீயர் திருவடிகளே சரணம்

ooooooooooooooooooooooooooooooooooo oooooooooooooooooooooooooooooooooooooo

**ஸ்ரீரங்கம் கரிசைலமஞ்ஜநகிரிம் தார்க்ஷ்யாத்ரி ஸிம்ஹாசலெள**

**ஸ்ரீகூர்மம் புருஷோத்தமஞ்ச பதரீநாராயணம் நைமிசம் |**

**ஸ்ரீமத்த்வாரவதீம் ப்ரயாக மதுராயோத்யாகயா : புஷ்கரம்**

**ஸாளக்ராமகிரிம் நிஷேவ்யரமதே ராமாநுஜோயம் முநி : ||**

என்பது எம்பெருமானார் விஷயமான ப்ரஸித்தமான முக்தகம். ஸ்வாமிக்கு அபிநிவேசமுடைய ஸ்தலங்கள் இதில் கோர்வையாக சொல்லப்பட்டுள்ளன. கோயில் திருமலை முதலான தென்னாட்டு திவ்யதேசங்களுடன் வடநாட்டில் ஸ்வாமி மங்களாசாஸனம் பண்ணியருளிய ஸ்தலங்களும் இந்த ச்லோகத்தில் குறிக்கப்பட்டுள்ளன. ஸ்ரீரங்கத்திலிருந்து வடக்கில் திருவஷ்டாக்ஷரத்தின் அவதாரபூமியான பதரீநாராயணக்ஷேத்ரம் வரை ராமாநுஜார்ய திவ்யாஜ்ஞா கார்யகரமாவதை இது பேசுகிறது. இவற்றில் புருஷோத்தமம் என்பது (பூரி) ஜகந்நாதக்ஷேத்ரம். இங்கு எம்பெருமானார் மடமொன்றுள்ளது (எம்பார் மடம் என்றும் வ்யவஹாரமுண்டு). இங்கு ஸன்னதியில் சீர்திருத்தம் பண்ணுவதற்கு ஸ்வாமி உத்யோகிக்க, எம்பெருமான் ஸ்தலத்தாரிடம் உள்ள பக்ஷபாதத்தால் ஸ்வாமியை பெரிய திருவடி நாயனாரைக் கொண்டு ஸ்ரீகூர்மத்தில் எழுந்தருளிப் பண்ணிவிட்டதாக ஐதிஹ்யம். ஸ்வாது தமது திக்விஜய யாத்திரையில் இவ்விடங்களுக்கெல்லாம் சென்று புறசமயிகளை வாதில் வென்று ஜயஸ்தம்பம் நாட்டி வந்ததாக கோயிலொழுகு கூறுகிறது.

oooooooooooooooooooooooooooooooooooooo ooooooooooooooooooooooooooooooooooooooo



நாதமுனிகள், காட்டுமன்னார் கோவில்.



ஆளவந்தார், காட்டுமன்னார் கோவில்.

✲✲✲✲✲✲✲✲✲✲✲✲✲✲✲✲✲✲✲✲✲✲✲✲✲✲✲✲✲✲✲✲✲✲✲✲✲✲✲✲

ஸ்ரீ:

# பஞ்சாசார்ய பதாச்ரயர்

## ஆசார்ய வைபவம்)

Dr. V. V. ராமாநுஜர், M.A., Ph.D., பேராசிரியர், சென்னைப் பல்கலைக்கழகம்.

✲✲✲✲✲✲✲✲✲✲✲✲✲✲✲✲✲✲✲✲✲✲✲✲✲✲✲✲✲✲✲✲✲✲✲✲✲✲✲✲

**முன்னுரை :** பஞ்சாசார்யபதாச்ரயர் என்பது எம்பெருமானாருடைய திருநாமங்களில் ஒன்று. தாமே ஸர்வஜ்ஞராயிருந்து வைத்தும் பல ஆசார்யர்களிடம் அடிபணிந்து உபதேசங்கள் பெற்றவர் நம் ஸ்வாமி. இவர்களில் ஆளவந்தாருடைய சீடர்களான ஐவர் முக்கியமானவர்கள். ஆளவந்தாரிடம் நேரில் எதுவும் கற்க நம் ஸ்வாமிக்கு வாய்ப்பு இல்லாமல் போயிற்று. ஆளவந்தார் தாமே பெருமாள் கோயிலுக்கெழுந்தருளி தூரத்திலிருந்தே அப்போது யாதவப்ரகாசனிடம் மாணுக்காரயிருந்த இளையாழ்வாரை (ஸ்வாமியின் இயற்பெயர் இது) "ஆமுதல்வன் இவன்" என்று கடாக்ஷித்து, இவர் தர்சனப்ரவர்த்தகராம்படி அருள் பாலிக்கும்படி தேவப்பெருமாளிடம் அடிபணிந்து வேண்டிச் சென்றார் என்பது உலகறிந்த வரலாறு. "ஆளவந்தாரிடம் சேர்ந்திருந்தேனாகில் பரமபதத்துக்கு படிகட்டியிருப்பேன்" என்று ஸ்வாமி ஸாதித்தாகக் கூறுவர்.

**இளமைக்கல்வி :** அனைத்துலகும் வாழப்பிறந்த எதிராஜமாமுனிவரான நம் ஸ்வாமிக்கு சிறுபிள்ளைப்பருவத்தில் திருத்தகப்பனாரான ஸ்ரீபெரும்பூதூர் ஆசூரி ஸர்வக்ரது கேசவதீக்ஷிதர் ப்ரஹ்மோபதேசம் பண்ணி வேதமோதுவித்து ஸாமான்யசாஸ்த்ரங்களையும் கற்பித்தார். ஸ்ரீபெரும்பூதூரில் கோயில் கொண்டுள்ள மண்ணளந்த பெருமாளே ஸ்வாமிக்கு முதல் ஆசார்யன் என்று கர்ணபரம்பரைச் செய்தியொன்றுண்டு. அங்கு மணவாளமாமுனிகள் திருக்கோயிலில் இந்த எம்பெருமான் இன்றும் ஸேவை ஸாதிக்கிறார். இந்தப் பெருமான் திருமுன்பே இளையாழ்வாரின் முதற்கல்வி தொடங்கிற்று போலும்!

**யாதவப்ரகாசர் :** தகப்பனார் பரமபதமெய்தியபின் இளையாழ்வார் திருப்புட்குழியில் அக்காலத்தில் ப்ரஸித்தராயிருந்த யாதவப்ரகாசர் என்ற அத்வைத ஸன்யாஸியிடம் வேதாந்தம் பயின்றார் இளையாழ்வாருக்கும் யாதவருக்குமிடையே வேதவாக்யங்களுக்குப்பொருள் கொள்வதில் அடிப்படை வேற்றுமைகள் பல ஏற்பட்டுக் கடைசியில் இருவரும் பிரியும்படியாயிற்று. இதற்குப் பல ஆண்டுகள் கழித்து இளையாழ்வார் ராமானுசமுனிவராகி ஆசார்யபதம் வகிக்கையில் யாதவரும் இவருடைய சீடர் குழாத்தில் ஒருவராகி முக்கோல் பெற்று "கோவிந்த ஜீயர்" என்று புகழ் பெற்றார் என்பது வரலாறு.

**திருக்கச்சிநம்பி :** ஆளவந்தாருடைய சிஷ்யர்களில் திருக்கச்சிநம்பி ஒருவர். இவர் வைசிய குலத்தவர். தேவப்பெருமாளிடம் பேரன்புபூண்டவர். தினமும் பெருமாளுக்கு திருவாலவட்ட (விசிறி வீசுவது) கைங்கர்யத்தில் ஈடுபட்டு இரவில் பெருமாளுடன் தனியாக

பேசிக்களிப்பவர். நம்பி குழந்தையுள்ளம் படைத்தவர். திருக்கச்சிநம்பி தம் ஊரான பூவிருந்தவல்லியிலிருந்து காஞ்சீபுரம் செல்லும் போதும் திரும்பும் போதும் ஸ்ரீபெரும்பூதூர் வழியாகச் செல்வது வழக்கமாதலால் சிறுபிராயத்திலிருந்தே இளையாழ்வாருக்கு இவரிடம் அன்பும் மதிப்பும் வளர்ந்து வந்தது. காஞ்சீபுரத்தில் யாதவரிடமிருந்து விலகியபிறகு நம்பியின் நியமனப்படி சாலைக்கிணற்றினின்றும் தினமும் பெருமாளுக்குத் திருமஞ்சனம் கொணர்ந்து ஸமர்ப்பித்துக் கொண்டிருந்தார். அக்காலத்தில் இவர் நம்பியுடன் அடிக்கடி அளவளாவுவது வழக்கம். நம்பியையே தனக்கு நேர் ஆசார்யனாகக் கொள்ள இளையாழ்வார் ஆசைப்பட்ட போதிலும் தாம் அந்தணரல்லாமையால் நம்பி அதற்கு இசையவில்லை. "போனகம் செய்த சேடம் புனிதம்" என்ற ஆழ்வார் வாக்கின் படி நம்பியைத் தம் அகத்துக்கு உண்ண அழைத்து அவர் உண்ட மிச்சத்தைத் தாம் உண்ண நினைத்த நினைவும் ஈடேறவில்லை. நம்பியிடம் இளையாழ்வார் ஆசார்யப்ரதிபத்தி கொண்டிருந்தார் என்பதும் இவருடைய உள்ளக் கருத்துக்கள் உருவானதில் நம்பிக்கு ஒருமுக்யபங்கு உண்டு என்பதும் மறுக்கமுடியாது.

**பெரியநம்பி :** இளையாழ்வார் தேவப்பெருமாளுடைய நியமனப்படி ஆளவந்தாருடைய திருவடிமுதல்வராகிய பெரியநம்பியிடம் ஆச்ரயித்து பஞ்சஸம்ஸ்காரம் பெற்றார். இதற்கு முன்பே பெரியநம்பி ஆளவந்தாருடைய நியமனப்படி இளையாழ்வாரை ஸ்ரீரங்கம் அழைத்துச் சென்றதும், இவர்கள் ஸ்ரீரங்கம் சேர்ந்த போது பரமாசார்யருடைய சரமதிருமேனியையே (உயிரற்ற உடல்) ஸேவிக்க முடிந்தது என்பதும் ஆளவந்தார் திருவடிகளில் நேரில் ஆச்ரயிக்க இயலவில்லை என்பதும் ப்ரஸித்தமான சரித்திரம். பிறகே திருக்கச்சிநம்பியிடம் ஆச்ரயிக்கக் கோரியது. அந்த எண்ணமும் ஈடேராததால் திருக்கச்சிநம்பி மூலம் "பெரியநம்பியிடம் ஆச்ரயிப்பது" என்ற தேவப்பெருமாள் நியமனத்தை உலகறிந்த ஆறுவார்த்தைகளில் ஒன்றாகப் பெற்ற இளையாழ்வார், பெரிய நம்பியை நாடி திருவரங்கம் செல்ல, நம்பியும் இவரை நாடி பெருமாள்கோவிலேற (காஞ்சீபுரத்திற்கு) வந்து கொண்டிருக்க மதுராந்தகத்தில் இருவரும் ஒருவரையொருவர் ஸந்தித்து அங்கேயே பெரிய நம்பியிடம் "தீயில் பொலிகின்ற செஞ்சுடராழி திகழ் திருச்சக்கரத்தின் கோயிற்பொறியாலே ஒற்றுண்டு நின்று" என்கிறபடியே திருவிலச்சினை பெற்று த்வயமந்த்ரத்தையும் அதன் உட்பொருளையும் உபதேசமாகப் பெற்றார். பின்னர் இருவருமாகப் பெருமாள் கோவிலையடைந்தார். இளையாழ்வாரும் தமது இல்லத்திலேயே பெரியநம்பி தம் குடும்பத்துடன் தங்கியிருக்க வசதிகள் பண்ணிவைத்து அவரிடம் திவ்யப்ரபந்தங்களையும் ஸம்ப்ரதாயார்த்தங்களையும் கற்றுவந்தார். சிலமாதங்கள் சென்றவாறே, இளையாழ்வாருடைய மனையாட்டிக்கும் நம்பியுடைய தேவியருக்கும் கிணற்றடியில் நீரெடுக்கும் முகமாக ஒரு சண்டை மூள, இதை வளரவிடக்கூடாதென்று அஞ்சிய நம்பி, தம் மனைவியுடன் திருவரங்கம் சென்றடைந்தார். ஆசார்யர் திருவரங்கம் சென்றது காலம் தாழ்த்தே இளையாழ்வாருக்குத் தெரிந்தது. தெரிந்தபின் மிகவும் மனம் நொந்தார்.

இந்நிகழ்ச்சிக்குச் சிறிது காலத்துக்குப் பின் இளையாழ்வார் மனைவாழ்க்கையை வெறுத்து, துறவறத்தில் மனம் நாட, தேவப்பெருமாளையே ஆசார்யனாகக்கொண்டு அவரிடமே த்ரிதண்ட காஷாயங்களைப்பெற்று "முக்கோல் பகவர்" என்றழைக்கப்படும் ஸ்ரீ வைஷ்ணவ ஸந்யாசியாயினார். இவருக்குத் துறவு நல்கும் ஸ்ரீ வைஷ்ணவத் துறவி அப்போது யாருமில்லாததால் தேவப்பெருமாளிடமே உத்தமாச்ரமம் பெற்றார் போலும். அச்சமயத்தில் இளையாழ்வாருக்கு ராமாநுசமுனி என்ற பெயர் தேவப்பெருமாளால் இடப்பட்டது. ராமாநுச முனிவரிடம் முதலில் சீடர்களாக ஆச்ரயித்தவர்கள் ஸ்வாமியின் மருகரும் வாதூலகுலதிலகருமான முதலியாண்டானும், விரக்தாக்ரேஸரான கூரநாத (ஸ்ரீவத்ஸாங்கமிச்ரர்)ரும் ஆவர். இப்படி ஸ்வாமி முக்கோல் பிடித்த முனியாக விளங்கிக்கொண்டிருக்கையில் ஆளவந்தார் ஸ்தானத்தில் ஆசார்யபதம் வகிக்கத்தகுந்தவர் இவர் ஒருவரே என்று ஆழ்வார் திருவரங்கப் பெருமாளரையர் பெருமாள் கோவிலுக்கெழுந்தருளி பேரருளாளனைப் பாட்டினால் உகப்பித்து ராமாநுசனை வரப்ரதானமாகப்பெற்றுத் திருவரங்கம் அழைத்துப்போய் திருவரங்கச் செல்வத்துக்கும் ஸ்ரீவைஷ்ணவ தர்சனத்துக்கும்

நிர்வாஹகராக ஆக்கிவைத்தார். பெரிய பெருமாளும் தம் உபய விபூதி ஐச்வர்யத்தையும் இவருக்கு உடைமையாக்கி வைத்து மகிழ்ந்தமையால் நம் தர்சனத்தில் இவர் உடையவர் ஆனார். 'பெரியார்க்காட்பட்டக்கால் பெறாத பயன் பெறுமாறு'' என்கிறபடியே பெரிய பெருமாள் தேவரீருக்காக அடியேனை வாழ்வித்தருளினார்'' என்று உடையவரும் தம்மாசார்மரான பெரிய நம்பியிடம் விண்ணப்பித்து ப்ரீதரானார்.

பெரிய நம்பிக்கும் ராமாநுசனுக்கும் மிகநெருங்கிய ஆன்மீக உறவும், அளவு கடந்த பரஸ்பர அன்பும் இருந்தது. பெரிய நம்பியின் குமாரத்தியான அத்துழாயைத் தமது தங்கையாகப் போற்றி வந்ததும், அவளுக்குச் சீதனவெள்ளாட்டியாக பெருங்குலத்தோன்றலான முதலியாண்டானை அனுப்பித் தந்ததும், ஆண்டான் அவ்வேலையை மகிழ்ச்சியுடன் சிரமேற்கொண்டு பணிபுரிந்ததும் இங்கு விரித்தால் பெருங்கதையாகும். தம் சீடருடைய தூய உள்ளத்தை பளிங்குபோல் கண்டு உணர்ந்தவர் நம்பி. ஒரு சமயம் உடையவர் பிக்ஷைக்காக எழுந்தருளும் போது திருப்பாவையை அநுஸந்தித்துக்கொண்டுவர பெரிய நம்பியுடைய திருமாளிகையருகில் வரும்போது ''உந்துமதகளிற்றன்'' என்ற பாசுரத்தை ஸேவிப்பதாய் நேர்ந்தது.

பந்தார்விரலி ! உன்மைத்துனன்பேர் பாட
செந்தாமரைக்கையால் சீரார் வளையொலிப்ப
வந்து திறவாய் !

என்ற அடிகளைச் சொல்லிக்கொண்டு நம்பி திருமாளிகை வாயிலில் நின்றார். அப்போது அத்துழாய் பந்து விளையாடிக்கொண்டிருந்தவள் கையில் பந்துடன் இட்டவளையொலிக்க வந்து கதவைத் திறக்க, பாசுரத்தில் ஊன்றியிருந்த நெஞ்சினரான ஸ்வாமி, நப்பின்னையே வந்து நிற்பதாய்த் தெண்டனிட்டு அப்படியே மோஹித்து எழுந்திராமல் இருக்க, அத்துழாய் பயந்து தன் தகப்பனாரிடம் ஜீயர் மோஹித்திருப்பதைத் தெரிவித்தாள். அத்துழாய் நின்ற நிலையைக்கண்டவர் உடையவருடைய உள்ளத்தை நன்கறிந்தவராதலால் உடையவரைத் தூக்கி அணைத்து ''உந்துமதகளிற்றன் அநுஸந்தானமோ ? திருப்பாவை ஜீயரே!'' என்று உகந்து அத்துழாய்க்கும் விஷயத்தை விளக்கிக்கூறினார். ''இப்பாசுரம் எம்பெருமானார் உகந்தது'' என்று முதலிகளும் உகந்திருப்பார்கள்.

இந்த அபூர்வச்சீடரை பெரியநம்பி தம் சீடராகவே எண்ணவில்லை. தமக்கு ஆசார்யராகவே மதித்துப்போற்றினார். நித்யமும் பெருகிவந்த தம் சீடர்குழாத்தின் நடுவே நாயகராக உடையவர் எழுந்தருளும்போது பெரியநம்பி பல சமயங்கள் தெண்டனிட்டதுண்டு. உடையவரும் இதுகண்டு ஒன்றுமே சொல்லாமல் காணக்கண்ணிட்டுச் செல்வது வழக்கம். தம் ஆசார்யர் தெண்டனிட்டதால் தனக்கு அபசாரமாகுமே என்று விலக்கியதில்லை. இப்பரிமாற்றத்தின் உட்கருத்தை அறியவேண்டி உடையவரை அவர் சிஷ்யர்கள் வினவியதற்கு ''நம்பியையே கேளுங்கள்'' என்று நியமிக்க, அவர்களும் நம்பியைக் கேட்டதற்கு ''ஆளவந்தாரும் முதலிகளுமாக எண்ணி தெண்டனிட்டேன்'' என்றார். உடையவரும் தம் சிஷ்யர்களை நோக்கி, ''அவர் நினைவிருந்தபடியைக் கண்டீர்கள், எனக்கு ஸ்வரூபஹானி என்று தடுத்தேனாகில் ஆசார்யனிட்ட வழக்காய் அவன் மனமுகப்பதையே நோக்கும் பாரதந்தர்யத்திலிருந்து நழுவினேனாவேன். ஆசார்யன் நினைவைப் பின் செல்வதொழிய சிஷ்யனுக்கு வேறு காரியமில்லை. ஆயினும் விநயம் பாவிப்போமாகில் தெண்டனை ஸ்வீகரித்தோமாவோம்; ஆகையாலிறே பேசாமலிருப்பது'' என்றருளிச்செய்தார்.

ஒரு ஸமயம் ஸ்ரீரங்கத்தில் சிஷ்யர்களுக்கு நல்லுரைகள் கூறிக் கொண்டிருக்கையில் திருக்கச்சிநம்பியை நினைத்து, கோஷ்டியில் ''பெருமாள் கோவிலுக்குச் சென்று திருக்கச்சி நம்பி நலனை ஆராய்ந்து வருவார் யாரேனுமுண்டோ ?'' என்று கேட்டபோது ''நான் போகிறேன்'' என்று ஒருவரும் கடுக எழுந்திருக்கவில்லை. இச்செய்தியை அறிந்த பெரிய

நம்பி மறுநாள் விடியற்காலையில் உடையவர் மடமே வந்து "பொருளாளனைத் தொழுதுவர நினைவாயுள்ளேன்" என்று விடைகொண்டு, காஞ்சிபுரம் சேர்ந்து தேவப்பிரானையும் திருக்கச்சி நம்பியையும் ஸேவித்து, நம்பியுடன் மகிழ்ச்சியுடன் அளவளாவி உடனே ஸ்ரீரங்கம் செல்வதாகப் புறப்பட்டார். நம்பியும் "திருநாள் அணித்தாயிற்று; இருந்து ஸேவித்துவிட்டு எழுந்தருள வேண்டும்" என்று வேண்ட, பெரியநம்பியும், "நாம் வந்த காரியம் ஆயிற்று; திருநாளுக்கு இருக்கவொண்ணாது; புறப்படவமையும்" என்ன, நம்பிக்கு ஒன்றும் விளங்காமல் போகவே "நமது உடையவருக்கு உமது நினைவாக இருந்து, உமது நலனறிந்து வருவாருண்டோ? என்று கோஷ்டியில் கேட்க, ஒருவரும் உடனே எழுந்தாரில்லை. நாம் சென்று வருவோம் என்று வந்தேன். வந்த காரியமாயிற்று. விடை தந்தருளவேணும்" என்று உடனே ஸ்ரீரங்கத்துக்குப் பயணமானார். (இந்த ஐதிஹ்யம் திருவிருத்தம் 8-வது பாசுரத்தின் நம்பிள்ளை ஈட்டில் காண்க).

ஆளவந்தாருக்கு மாறநேர்நம்பி என்றொரு ப்ரிய சிஷ்யருண்டு. இவர் தாழ்ந்த குலத்தைச் சேர்ந்தவர். இவருடைய அந்திம காலத்தில் உடம்பில் ரணம் கண்டு மிகவும் ச்ரமப்பட்டுக் கொண்டிருந்தவர் தம் உறவினரை அவைஷ்ணவர்களாதல் நாடவில்லை. தாம் மட்டும் தனியாக ஒரு சிறு குடிலில் வாழ்ந்து வந்தார். ப்ராஹ்மணோத்தமரான பெரியநம்பி இவருக்குத் தினமும் ஸ்னானம் செய்வித்தும் உணவு கொண்டு சென்று உண்பித்தும் உதவி வந்தார். "அடியேன் ஆசார்யன் திருவடி அடைந்தால் இவ்வுடலை உறவினரிடம் காட்டித்தர வேண்டா" என்று இவர் பெரியநம்பியை வேண்டிக்கொண்டிருந்ததால், மாறநேர்நம்பி பரமபதமெய்தியபின் அவருடைய புனிதமான திருமேனியை உத்தமர்களுக்குச்செய்யும் முறையில் பெரியநம்பி திருப்பள்ளிப்படுத்தினர் (அடக்கம் செய்தார்). உடையவரும் தம்மாசார்யரை அணுகி "இக்காரியத்தை உத்தமரான தேவரீரே செய்ய வேணுமோ? சீடர்களில் யாரையாவது ஏவிக் கார்யம் கொள்ளலாகாதோ?" என்று மிக விநயத்துடன் வினவ, நம்பியும் "மாறநேர் நம்பி மிகவும் உத்தமமான பாகவதர், ஆளவந்தாருடைய விசேஷ க்ருபைக்குப் பாத்திரமானவர். சக்ரவர்த்தி திருமகனும் உயர்த்த ஆசாரசீலருமான பெருமாள் (ஸ்ரீராமன்) ஒரு கழுதுக்கு (ஜடாயுவுக்கு) உயர்ந்த முறையில் ஈமச்சடங்குகளைச் செய்து முடித்தது தெரியீரோ? ஒழுக்கத்தில் உயர்ந்த க்ஷத்ரியரான தர்மபுத்திரர் கீழ்வருணத்தவரான விதுராழ் வானுக்கு அந்திமச்சடங்குகளைச் செய்யவில்லையா? நமது மாறநேர்நம்பி ஜடாயுவுக்கோ விதுரருக்கோ குறைந்தவரா? அடியேன் பெருமாளிலுமோ, தர்மபுத்ரனிலுமோ உயர்ந்தவனு? மேலும் அந்திதொழ (ஸந்த்யாவந்தனம் பண்ண) ஆளிடுவாருண்டோ? பாகவதர் பெருமை தெரிவிக்கும் "நெடுமாற் கடிமை" திருவாய்மொழி, நாம் கற்று ஒழுகுகைக்கன்றி வெறும் கடலோசையாகவோ? இதெல்லாம் அடியேன் சொல்லித்தான் தேவரீர் உணரவேண்டுமோ?" என்று பதிலிறுத்தார். இது கேட்ட ராமாநுஜரும் நம்பிபக்கல் இன்னும் கனத்த பக்தியுடையவர் ஆனார்.

அவ்யபதேச்ய (பெயர் சொல்லக்கூடத் தகுதியற்ற) னை சோழ அரசன் ராமாநுசரை அரசவைக்கு அழைத்தபோது, "ஏதோ தீங்கு விளைய இருக்கிறது" என்று உணர்ந்து கூரத் தாழ்வான் காஷாயமணிந்து ராமாநுஜ வேஷதாரியாய்ச் சென்றபோது, மிகவும் தளர்ந்திருந்த போதிலும் பெரியநம்பியும் ஆழ்வானுடன் சென்றார். அரசவையில் சிவனே உயர்ந்ததெய்வம் என்று ஓலையில் ஒப்பமிட்டுத் தரும்படி நிர்ப்பந்திக்க, ஒவ்வாததால் ஆழ்வான் அரசனுடைய கட்டளைப்படி கண்ணிழந்ததும், ஏவலாளர்கள் பண்ணின உபத்ரவம் தாங்காமல் பெரியநம்பி உயிரிழந்ததும் உலகமறிந்த வரலாற்றுண்மைகள். ஆழ்வான் ஆசார்யனுக்காகவும் தரிசனத்துக் காகவும் கண்ணிழந்தார். தம் ப்ரிய சிஷ்யரைக் காக்கும் பணியில் பெரியநம்பி உயிரையே இழந்தார். இவர்களுக்கு எம்பெருமானாரிடம் இருந்த பரிவின் பெருமையை அளவிட்டுக்கூற இயலாது.

**திருக்கோட்டியூர் நம்பி :** தாமே ஆசார்யராய் அமர்ந்திருந்தாராயினும் ராமானுஜருக்குக் கல்விப்பசி அடங்கவில்லை. தாம் செய்துதலைக்கட்டுவதாக ஆளவந்தாருக்கு ஸத்யப்ரதிஜ்ஞை

செய்து கொடுத்த பணிகளைச் செவ்வனே செய்து முடிக்கத் தம்மை ஸித்தப்படுத்திக்கொள்வதில் நோக்குடன், பெரிய நம்பிபால் சென்று, தம் கல்வியைத் தொடர்ந்து நடத்தவேண்டுமென விண்ணப்பித்தார். நம்பியும் மீண்டுமொருமுறை த்வயத்தையே உபதேசித்து அதனர்த்தங்களை விரிவாக அருளிச்செய்து, திருக்கோட்டியூர் நம்பியிடம் சென்று மற்ற ரஹஸ்யப்பொருள்களை அறியுமாறு நியமித்தார். அதன்படியே ராமாநுஜர் திருக்கோட்டியூருக்கு நடந்து அங்குள்ளாரை,* "நம்பி திருமாளிகை எது?" என்று வினவ, அவர்களும் "அதோ தெரியும் கூரை' என்று காட்டக்கண்டு, இவரும் ஊர்க்கோடியிலிருந்தே தொழுவதும் எழுவதுமாய் நம்பி திருமாளிகையையடைந்து அவரைக்கிட்டித் தாம் வந்த காரியத்தை விண்ணப்பிக்க, நம்பியும், "யாருக்கென் செல்லுகேன்" என்று வாளாவிருந்து விட்டார். உடையவரும் பெரும் ஏமாற்றத்துடன் திருவரங்கம் திரும்பும் படியாயிற்று. உடையவர் முதல் தடவை வந்து சென்ற பிறகே நம்பியின் பெருமை அவ்வூராருக்குத் தெரிந்ததென்பர். நம்பி பின்பொரு முறை ஸ்ரீரங்கம் வந்து ரங்கநாதனைத் தொழுதபோது அரங்கனே உடையவருக்கு ரஹஸ்யார்த்தங்களை ப்ரஸாதிக்கும்படி நியமித்தும் அவர் மனமிரங்கவில்லை. பலதடவைகள் திருக்கோட்டியூர் சென்று நம்பியைப் பணிந்தாராயினும் அவர் உடையவர் அறியவிரும்பியதைச் சொல்லவேயில்லை. இப்படிப் பதினெட்டு தடவை உடையவர் திருக்கோட்டியூர் சென்று திரும்பியதாக சரித்திரம். இந்நிலையில் திருக்கோட்டியூரிலிருந்து ஒரு பாகவதர் உடையவரைக்காண வென்று திருவரங்கம் வந்தார். அவர் திரும்பியபோது, "பொன்னாழிக் கையாருக்குப் பூந்துழாய் முடியாருக்கு இங்கு என் ஆவி ஈடழித்தல் தகவன்றென்றியம்பீரே" என்ற ஆழ்வார் ஸ்ரீஸூக்தியை நம்புயிடம் தனக்காக விண்ணப்பம் பண்ணும்படி சொல்லியனுப்பினர். நம்பி தம்மை அலைக்கழித்ததனால் இவருடைய ஊற்றம் சிறிதளவும் குறையவில்லை. நம்பிபேரில் குறை ஏதும் தோன்றவுமில்லை.

திருக்கோட்டியூர் நம்பியும் தம்மூர் பாகவதர் கொண்டுவந்த செய்தியைக்கேட்டு உகந்து, உடையவர் ஒரு மாதம் உபவாஸமிருந்து தமக்கு ரஹஸ்யார்த்தங்களை அறிய ஊற்றமுண்டு என்று காட்டவேணும் என்று நியமிக்க, அப்படியே திருக்கோட்டியூர் வந்து ஸௌம்ய நாராயணன் ஸன்னிதியில் நீரும் அருந்தாமல் பட்டினியே கிடந்தார். சிலநாள் சென்றவாறே இட்ட கால் இட்ட கையாய் மிகவும் மெலிந்துபோக, பெருமாள் தீர்த்தம் மட்டும் அருந்தலாம் என்று நம்பி அநுமதிக்க, அப்படியே தினமும் சிறிதளவே அருந்தி ஒரு மாத உபவாஸத்தைப் பூர்த்தி செய்தபின், "தண்டும் பவித்திரமுமாய் அவர் ஒருவர் மட்டுமே வருவது" என்று நம்பி நியமித்தார். உடையவரும் முதலியாண்டானையும் கூரத்தாழ்வானையும் அழைத்துக்கொண்டு நம்பி திருமாளிகையேறச் சென்று தெண்டனிட்டு நிற்க, அவரும், "உம்மைத்தனியாக வல்லவோ வரச் சொன்னது?" என்று கேட்க, இவரும் "தேவரீருடைய நியமனப்படியே தண்டும் பவித்திரமுமாகவே வந்துள்ளேன். இந்த முதலியாண்டானே த்ரிதண்டம்; ஆழ்வான் பவித்ரம்" என்று பதிலிறுக்க, நம்பியும் மகிழ்ச்சியுடன் நலந்தரும் சொல்லான பெரியதிருமந்திரத்தின் ஆழ்ந்த பொருள்களை உபதேசித்தருளி, "யாருக்கும் சொல்லாதே கொள்வீர்—நம்மாணையை மீறிச் சொன்னால் நரகம் புகுவீர்" என்று எச்சரித்து ஆணையுமிட்டார்.

இப்படி வெகு ப்ரயாசைப்பட்டு நம்பியிடமிருந்து பெற்ற செம்பொருளை உடையவர் மறுநாள் தெற்காழ்வார் (நரசிங்கப்பெருமான்) திருவோலக்கத்தில் ஸ்ரீவைஷ்ணவர்களுக்கு விவரமாக அருளிச்செய்தார். ஆசார்யனிட்ட ஆணையை மீறிப் பெருமாள் கோஷ்டியிலுள்ள ஸ்ரீவைஷ்ணவர்களுக்கு திருமந்திரத்தின் சீரிய பொருள்களை அவர்கள் உய்யும் பொருட்டுப் பெருங்கருணையுடன் உபதேசித்தார்.

*நம்பி தாம் ஒரு திண்ணையிலே ஒருவருமறியாதபடி பகவத்குணாநுஸந்தானம் பண்ணியிருப்பர். எம்பெருமானார் எழுந்தருளி "நம்பி மடமேது?" என்றுகொண்டு தெண்டனிட்டவாறே, அங்குள்ளார், "எம்பெருமானார் நம் திருக்குருகைப்பிரான் அகத்தை நோக்கித் தெண்டனிட்டார்" என்ற பின்பிறே நம்பியுடைய ப்ரபாவம் அங்குள்ளாரறிந்தது. (நாச்சியார் திருமொழி 12-2 'நாணிப்பினியோர்' பாசுரவ்யாக்யானத்தில் காணும் ஐதிஹ்யம்)

இந்த நிகழ்ச்சியைக்கேட்டறிந்த ஆசாரியரும் உடையவரை அழைத்து "ஆசார்ய நியமனத்தைக் கடந்து ஏன் நடந்து கொண்டீர்?" என்று கோபத்துடன் கேட்க, இருவரும் வணக்கத்துடன் "ஸம்ஸாரிகள் படும் துன்பம் கண்டுச் சொன்னேன். தேவரீருடைய திருவடிகளை நெஞ்சில் கொண்டு சொன்னதைக் கேட்டவர்கள் அத்திருவடி ஸம்பந்தத்தால் உய்வு பெறுவரன்றோ? இப்படிப் பலர் வாழ்ச்சி பெற அடியேன் ஒருவன் ஆசார்யாஜ்ஞையை மீறியதால் நரம்புக்கால் என்னவாய்விடும்?" என்று விண்ணப்பித்தார்; நம்பியும் 'இந்தக் கருணையுள்ளமும், பரஸம்ருத்தியே விரும்பும் (பிறர் வாழவேணும் என்ற ஆசை) விசால ஹ்ருதயமும் நமக்கில்லையே' என்று தம் சிஷ்யனை ஆசீர்வதித்து "அவரோ நீர்? எம்பெருமானேரே!" என்று கொண்டாடினர். பாரத யுத்தத்தில் இருசேனைகளின் நடுவே தேர்த்தட்டிலிருந்து மெய்ம்மைப் பெருவார்த்தையை அருளிச் செய்த ஸ்ரீபார்த்தஸாரதியான கீதாசார்யனே? என்றபடி. அதுமுதல் உடையவர் எம்பெருமானார் ஆயினர். எம்பெருமான் ஆர்? எனில் எம்பெருமானாரே ஆவர். எம்பெருமானையொத்த, ஏன்? அவரிலும் மிக்கக் கருணையுள்ளம் படைத்தவர் இவர் ஒருவரே. கருணைக் கடல் என்றபடி. தன்னிடமுள்ள நீரையெல்லாம் பொழிந்து தன்னையே இல்லை செய்து விடும் மேகம் போன்றவர் இவர் என்பதை,

**காரேய் கருணை இராமாநுச! இக்கடலிடத்தில்**

**ஆரே அறிபவர் நின்னருளின் தன்மை?**

என்று அமுதனார் போற்றி மகிழ்ந்தார்.

அந்த நாளில் ஸம்பிரதாயத்தின் சீரிய பொருள்களை பொருளின் சீர்மையைக் கருதி மறைத்துப் போந்தனர் ஆசார்யர்கள். ஒரு ஆசார்யர் பலபடியாக சோதித்து ஒரு சிஷ்யனுக்கு மட்டுமே உபதேசிப்பது என்று ஒரு வரம்பு கட்டி வைத்துக்கொண்டு ஒழுகினர். ராமாநுஜரின் கருணையுள்ளம், தன்னைத் திருக்கோட்டியூர் நம்பி சோதித்த அளவுக்கு—இதில் ஒரு சிறுபங்களவு கூட—சோதிக்க இடம்தரவில்லை. தம்மிடம் ஆசையுடன் வந்து கேட்டவர்க்கெல்லாம் தமக்குப் பூர்வர்கள் இட்டு வைத்த வரம்பை அறுத்து உபதேசம் செய்தார். மணவாளமா முனிகளும் உபதேசரத்தினமாலையில்

**ஓராண் வழியாய் உபதேசித்தார் முன்னோர்**

**ஏரார் எதிராசர் இன்னருளால்-பாருலகில்**

**ஆசையுடையோர்க்கெல்லாம் ஆரியர்காள்! கூறுமென்று**

**பேசி வரம்பறுத்தார் பின்.**

என்ற பாசுரத்தில் ஆசையுடவராய்த் தம்மை அண்டினதையே பற்றுசாகக் கொண்டு உபதேசித்த, தம்மவரை உபதேசிக்கச் செய்த, இன்னருளைப் போற்றி மகிழ்ந்துள்ளார். திருக்கோட்டியூர் கோவில் கோபுரத்திலேறி நின்று வழிப்போக்கருக்கெல்லாம் செம்பொருள்களை வாரியிறைத்து விட்டார் உடையவர் என்ற பாரமரக்கூற்றுக்கு ஆதாரமே கிடையாது.

"தயைக ஸிந்து" என்று ஆழ்வான் தான் பணித்த "யோநித்யமச்யுத" என்ற ப்ரஸித்தமான உடையவர் தனியனில் தம் ஆசார்யரைப் போற்றுகிறார். நம் அருளிச் செயல் வ்யாக்யானங்களிலும் எம்பெருமானுடைய உபதேச முறை பேசப்பட்டுள்ளது. இதிலிருந்தும் தெளிவு பெறலாம்.

"முன்புத்தை ஆசார்யர்கள் பகவத்விஷயம் சொல்லும் போது நாலிரண்டு பேருக்காயிறுச் சொல்லுவது; அது தானும் அவர்கள் படியறிந்தால் சொல்லுவது; அங்ஙனன்றிக்கே

நசியுடையார் என்று தோற்றினவாறே சொல்லுவர் எம்பெருமானுர்." (சிறியதிருமடல்-அதுகேட்டுக்காரரர்...).

**சொல்லென்னச் சொன்னுள்** (திருநெடுந்தாண்டகம்—11.) "நெடு நாள் அநுவர்த்தித்துக் கேட்க வேண்டும் வார்த்தையை, ஏவச் சொன்னுள் (சொல்லாய்! என்று கேட்டதும் சொன்னுள்.) எம்பெருமானுரையும் கீதோபநிஷதாசார்யனையும் போலேயும் காணும் இக்கட்டுவிச்சி வைபவம் இருப்பது. செவிதாழ்த்தார்க் கெல்லாம் (ஆசையுடையோர்க்கெல்லாம்) வார்த்தை சொல்லிப் போந்தார் உடையவர்; ருசியைப் பிறப்பித்து வார்த்தை சொல்லிப் போந்தான் கீதோபநிஷதாசார்யன்."

இப்படிக் கேட்டவர்க்கெல்லாம் சொல்லுங்கோள் என்று நியமித்த எம்பொருமானுரும் ரஹஸ்யங்களை ஏடுபடுத்தவில்லை என்பதும் குறிக்கத்தக்கது. தாமருளிச் செய்துள்ள பாஷ்யங்களில் அங்குமிங்கும் குறிப்பாகக் காட்டிவைத்தார். "சார்வேதமநெறி" திருவாய்மொழி(10-4)க்கு ஈட்டின் ப்ரவேசத்தில் காணும் ஸ்ரீஸூக்திகள் வருமாறு :

ஆளவந்தார் அருளிச்செய்ததாகத் திருமாலையாண்டான் பணிப்பது; "ப்ரபத்தி விஷயமாக வாய்த்து (அமைந்தது) வீடுமின் முற்றவும்; உடையவரும் அப்படியே ப்ரபத்தி விஷயமாக அருளிச் செய்து கொண்டு போந்து, பாஷ்யமருளிச் செய்த பின்பு, ரஹஸ்யோபாயத்தை வெளியிடவொண்ணுது என்று வீடுமின் முற்றத்தையும் பக்தி விஷயமாக்கி அருளிச்செய்தார்."

திருக்கோட்டியூர் நம்பி ராமாநுசரை எம்பெருமானுரே! என்றழைக்க, இது உடையவருக்கு ஒரு திருநாமமாயிற்று. மேலும் பரமவைதிகமான இந்தத் தரிசனம் எம்பெருமானுர் தரிசனம் என்று அழைக்கப்பட வேண்டும் என்று நம்பி நியமித்தார். "எம்பெருமானுர் தரிசனமென்றே இதற்கு நம்பெருமாள் பேரிட்டு நாட்டிவைத்தார்" என்ற பெரியஜீயர் திருவாக்குப்படி இதுவே நம்பெருமாளின் திவ்யாஜ்ஞை என்றும் அறியலாகும்.

இதற்குப்பிறகு எம்பெருமானுரை அழைத்து பகவத்கீதையின் இறுதியில் பகவான் அருளிச்செய்துள்ள சரமச்லோகத்தின் உட்பொருள்களைத் தாமே உவந்து உபதேசம் பண்ணினுர். நம்பியநுமதி கொண்டு இப்பொருளைத் தம் ப்ரிய சிஷ்யர்களான ஆழ்வானுக்கும் ஆண்டானுக்கும் உபதேசித்தருளினுர் உடையவர்.

"எம்பெருமானுர் அவதார புருஷர்; உலகம் வாழப் பிறந்தவர்; நாதமுனிகள் தொடங்கிய ஆசார்யர்கள், இப்படி ஒரு மஹா புருஷர் தோன்றி ஸர்வோத்தாரகராய் விளங்கப் போகிறுர் என்று அறிந்து போற்றிய பவிஷ்யதாசார்யர்" என்று திருக்கோட்டியூர் நம்பி அறிந்திருந்தார். ரஹஸ்யங்களை அவருக்கு உபதேசிக்கவேண்டும் என்று ஆளவந்தாரும் நம்பெருமாளும் அவருக்கு ஆணையிட்டிருந்தனர். அப்படி இருந்தும் நம்பி உடையவரை வெகுவாகச் சோதித்தே உபதேசம் செய்தார். உடையவர் ஒரு மாதம் உபவாஸமிருந்தபோது அவரிடம் பரிவாலே பலர் நம்பியிடம் இப்படி ஒரு சோதனை வேண்டாம் என்று முறையிட்டபோது "ஒன்றும் குறையில்லை; இங்கிருந்தாராகில் அடியேனிடம் உபதேசம் பெறுவர்; இன்றியேல் ஆளவந்தாரிடமே அடைந்து பெறுகிறுர்; எப்படியும் இந்த அர்த்தங்களைக் கட்டாயம் கேட்டே தீருவர்" என்று அருளிச்செய்ததாக ஒரு ஐதிஹ்யமுண்டு. இவ்வளவு அறிந்திருந்தும் உடனே உபதேசியாதது அர்த்தத்தின் சீர்மை ஒன்றிலேயே நம்பி நோக்காயிருந்ததே காரணமாகும். ஸர்வஜ்ஞராகையாலே மேலே நடக்கவிருப்பதெல்லாம் அறிந்த நம்பி, உடையவர் புகழ் ஹிமாலயமலையளவுக்கு ஓங்கும் என்றே ரஹஸ்யங்களை உபதேசிக்கும் விஷயத்தில் அக்காலத்து வரம்புகளை இந்த மஹா புருஷர் விஷயத்திலும் மீறவில்லை என்றும் அறியவேண்டும்.

பின்பொருகால் எம்பெருமானுர்காலக்ஷேபகோஷ்டியில் ஆத்மஸ்ருபத்தைப்பற்றிய ஆராய்ச்சி ப்ராப்தமாக, இதை ஆசார்யரான திருக்கோட்டியூர் நம்பி வாயிலாக வெளியிட

வேண்டுமென்று பார்த்து ஆழ்வானை அழைத்து "இந்தவிலக்ஷண அர்த்தத்தை நம்பி பாடே சென்று பெற்று வாரும்" என்று நியமித்தார். ஆழ்வானும் திருக்கோட்டியூர் சென்று நம்பி பக்கல் விண்ணப்பம் பண்ணி ஆறுமாதம் ஸேவித்திருந்தும் நம்பி ஒன்றும் சொல்லாமலிருக்கவே, தம்மாசார்யரான உடையவர் பிரிவைச்சகியாது ஸ்ரீரங்கம் செல்ல நம்பியை அநுமதி கேட்க, நம்பியும், "அடியேனுள்ளான் உடலுள்ளான் என்று ஆழ்வார் பணித்தது கண்டாயே" என்று சொல்லியனுப்பினார். ஆழ்வானும் பெருநிதி கண்டதுபோல் மகிழ்ந்து இதைக்கொண்டு உடையவர் திருவடிகளில் விண்ணப்பம் செய்தார். இங்கு ஆத்மாவையும் சரீரத்தையும் பேதப் படுத்தி ஆத்மாவை அடியேன் என்று சிறப்பித்ததால் சேஷத்வமே ஆத்மாவுக்கு அந்தரங்கமாக நிருபிக்கப்பட்ட ஸ்வரூபம் என்று வெளியிட்டாராயிற்று.

பெரியநம்பியைப்போலவே திருக்கோட்டியூர நம்பிக்குத் தம் சிஷ்யரான எம்பெருமானாரிடத்தில் அளவு கடந்த ப்ரேமை இருந்தது. ஒரு ஸமயம் ஸ்ரீரங்கத்தில் சிலர் உடையவருக்கு விஷமிட்டு அவரை முடிக்க முற்பட்டதால் அவர் பட்டினியே கிடக்கிறார் என்று கேள்விப்பட்டு நம்பி பதைபதைக்கும் வெய்யிலில் ஓடோடியும் வந்து ஸ்ரீரங்கம் அடைந்த செய்தி கேட்ட உடையவர், நம்பியை எதிர் கொண்டழைக்கச் சென்று திருக்காவே க்கரையில் தெண்டனிட்டு வரவேற்றார். ஆசார்யன் நியமித்தால் ஒழிய தெண்டனிட்ட சிஷ்யன் எழுந்திருப்பது கூடாது என்ற மரியாதை நடையாடியிருந்த காலம் அது. நம்பி நியமிக்காததால் சூடேறிய ஆற்று மணலில் உடையவர் கிடந்ததைக்காணச் சகியாத கிடாம்பியாச்சான் என்பவர் அவரைப் பரிவுடன் "இது என்ன சிஷ்யாசார்ய க்ரமமோ? கருமுகை மாலையை வெய்யிலில் இட்டு வதக்குவாருண்டோ?" என்று வாரியெடுக்க, நம்பியும் மகிழ்ந்து, "உம்மைப்போலே பரிவரையே தேடினேன். இன்று முதல் நீரே நம் உடையவருக்குத் திருமடைப்பள்ளி கைங்கர்யத்துக்குக் கடவர். ஒரே பிக்ஷையாக நடக்கட்டும்" என்று நியமித்தார். அதன்படி ஆச்சானும் தம் ஆசார்யருக்கு திருமடைப்பள்ளி கைங்கர்ய மேற்று பக்தியுடன் நடத்தி வந்தார்.

நாயனாராச்சான்பிள்ளை ஸாதித்துள்ள சரமபர்வநிர்ணயம் என்ற க்ரந்தத்தில் திருக்கோட்டியூர் நம்பிக்கும் பெரிய நம்பி போலவே உடையவரிடம் ஆசார்யப்ரதிபத்தி இருந்தது என்பதை விளக்கமாகக் காணலாம். அங்குள்ள சில பங்க்திகள் :

"திருக்கோட்டியூரிலே உடையவர் எழுந்தருளி நம்பிபக்கலிலே சரமச்லோகம் கேட்கிற போது, தஞ்சமான அர்த்த விசேஷங்களை எல்லாம் அருளிச்செய்து,

"தேவரீரைப் பலகாலும் துவளப்பண்ணினத்தைத் திருவுள்ளத்திலே கொள்ளாதே கிடீர். அர்த்தத்தின் சீர்மையை வெளியிட வேண்டிச் செய்தோமித்தனை. தேவரீர் லோகஸம் ரக்ஷணார்த்தமாகத் திருவவதரித்தருளிற்று. நாதமுனிகளுக்குத் தஞ்சமான விஷயம் தேவரீர். இப்படிப்பட்ட மஹாநுபாவனோட்டை ஸம்பந்தமுண்டாகப் பெற்றோமென்று மார்பிலே கைபொகட்டு உறங்கலாம்படிக்கு உடலாயிருக்கிறது. எங்களாசார்யரான ஆளவந்தார், தேவரீரே தர்சநப்ரவர்த்தகராக வேணுமென்று பேரருளாளன் ஸந்நிதியிலே ப்ரபத்தி பண்ணியருளித் திருநாட்டுக்கெழுந்தருளுகிற போது "இந்த மஹாநுபாவனோட்டை நாலு நாளாகிலும் கலந்து பரிமாறப் பெற்றோமில்லையே" என்று இழவோடே எழுந்தருளினார். ஆகையாலே இத்தர்சநம் எம்பெருமானார் தர்சநம் என்று தேவரீர் திருநாமத்தினாலே நாள்தோறும் கொழுந்து விட்டு விளங்கப் போகிறது." என்றருளிச்செய்தார்"

**திருமலையாண்டான் :** ஒரு முறை திருக்கோட்டியூர் நம்பி திருவரங்கம் வந்து, தம்முடன் ஆளவந்தாரிடம் சிஷ்யராயிருந்து கற்றவரான திருமாலையாண்டான் என்பவரை, எம்பெருமானாரிடம் அழைத்துவந்து, "இவரிடம் திருவாய்மொழியின் அர்த்தங்களைக் கேளும்" என்று நியமித்தார். அப்படியே கேட்டு வரும்போது சில இடங்களில் ஆளவந்தார் பணித்தாராக ஆண்டான் கூறிய அர்த்தங்களை விட்டு, "இப்படியாகாதோ?" என்று

மாற்றுயோசனைகளை எம்பெருமானார் அருளிச்செய்ய, ஆண்டான் கோபித்து, பாடம் சொல்வதையே நிறுத்திவிட்டார். இதையறிந்த திருக்கோட்டியூர் நம்பி கோயிலேற வந்துத் திருமாலையாண்டானிடம் "திருவாய்மொழி நடக்கிறதோ? என்று வினவ, அவரும், "ஆளவந்தார் காட்டிய பொருள்களை நான் சொல்லிவர, இவர் விச்வாமித்ர ச்ருஷ்டியாய்ச் சில பல அர்த்தங்களைச் சொல்லிகிருரே" என்று வருத்தப்பட்டார். நம்பியும் உடையவர் சொன்ன அர்த்தங்களைக் கேட்டு,

*"நீரிவருக்கு அஜ்ஞாதஜ்ஞாபநம் பண்ணுகிறேமென்று இராதே கொள்ளும். இவர்க்கு ஆளவந்தார்க்குத் தோற்றின அர்த்தமொழிய விபரீதார்த்தம் தோற்றாது. ஸாந்தீபனி பக்கலிலே க்ருஷ்ணன் வேதாத்யயநம் பண்ணினாப்போலே காணும் உம்முடைய பக்கலிலே இவர் திருவாய்மொழி கேட்கிறது" என்று அருளிச்செய்து, விட்டதருவாய் தொடங்கி உடையவர் மடத்திலே திருகோட்டியூர் நம்பியும் திருமாலையாண்டானும் பெரியநம்பியும் கூட எழுந்தருளியிருந்து திருவாய்மொழி வியாக்யானம் நடத்துவியாநிற்க, "பொலிக பொலிக" (5-2-1) வந்தவாறே, "கலியும் கெடும்" என்ற இடத்திலே திருக்கோட்டியூர் நம்பி உடையவரை ஏறவும் இறங்கவும் பார்க்க, உடையவரும் அத்தைக்கண்டருளி, "இதுக்குப்பொருள் ஏது?" என்று கேட்க, "தேவரீர் திருவவதரித்து இதனுடைய அர்த்தத்தை வெளியிட்டுக் கொண்டு எழுந்தருளியிருக்கச் செய்தே இதுக்கு அர்த்தம் கேட்க வேணுமோ? ப்ரபன்னகுலோத்தாரகரான தேவரீரே இதுக்குப் பொருள்; அஸ்மதாதிகளைக் கரையேற்றுகைக்காகவன்றோ நித்யவிபூதியில் நின்றும் இங்கே எழுந்தருளிற்று" என்று அருளிச் செய்தார். இத்தைக் கேட்டிருந்த திருமாலையாண்டானும் ஹர்ஷபுளகித காத்ரராய், "இனி நான் ஆளவந்தாரையறியேன்; எல்லாப் பேறும் தேவரீரே; தேவரீரோடு உண்டான ஸம்பந்தமே அடியேனுடைய பேற்றுக்கு ஸாதனம்" என்றருளிச் செய்தார். (*இவை சரமபர்வநிர்ணயத்திலுள்ள பங்க்திகள்)

மேலே திருவாய்மொழி பாடம் ஆசார்யன் யார், சீடன் யார் என்ற பாகுபாடில்லாமல் "போதயந்த; பரஸ்பரம்" என்ற கணக்கில் நடந்தது. ஒரு சமயம் ஆண்டான் உடையவரிடம் "ஆளவந்தாரிடம் தேவரீர் ஒரு வார்த்தையும் பேசியதில்லை; அப்படியிருக்க அவர் திருவுள்ளக் கருத்தெல்லாம் தேவரீருக்கு விளங்குகைக்கு ஹேது என்?" என்று வினவ, "ஆளவந்தாருக்கு அடியேன் ஏகலவ்யனன்றோ?" என்று பதிலிறுத்ததாக ஐதிஹ்ய முண்டு. (இவர்களுள் எழுந்த பொருள் வேறுபாடுகளை வேறு கட்டுரையில் காண்க.)

**பெரியதிருமலைநம்பி** : பெரியதிருமலைநம்பி எம்பெருமானாருக்கு மாதுலர் (தாய் மாமன்) ஆவர். இவர் ஆளவந்தாருடைய திருவடிகளில் ஆச்ரயித்து ஆன்மீக உணர்வைப் பெற்றுப் பின்னர் திருமலையில் அப்பனுக்கு ஒழிவில் காலமெல்லாம் உடனாய் மன்னி வழுவிலா அடிமை செய்து வாழ்ந்தவர். இவர் தினமும் அப்பனுக்கு திருவாராதனத்துக்காக ஆகாச கங்கையிலிருந்து நீரமுது கொண்டு வந்து ஸமர்ப்பிக்கும் கைங்கர்யத்தை மேற்கொண்டிருந்தார். (ஒரு ஸமயம் அப்பன் ஒரு பாலகனாய் வந்து இவருடைய திருமஞ்சன குடத்தை ஓட்டை செய்து நீரைப் பருகி லீலா ரஸமநுபவித்த வரலாறு இம்மலரில் வேறு இடத்தில் பேசப்பட்டுள்ளது காண்க). ஞானபக்திகளில் மிகப் பெருத்த இவர், உடையவர் திருமலையப்பனை முதன் முறையாக மங்களாசாஸனம் பண்ண எழுந்தருளியபோது, எம்பெருமானுடைய தீர்த்தம் முதலான ப்ரஸாதங்களுடன் திருமலையினின்றும் இறங்கிவந்து எதிர்கொண்டழைக்க, "இதற்கு வேறு சிறுவர் யாருமில்லையோ? தேவரீரே எழுந்தருளவேணுமோ?" என்று உடையவர் கேட்டதற்கு "திருமலையில் வீதிகள்தோறும் பார்த்ததில் என்னிலும் சிறியர் ஒருவரையும் காணேன்" என்றனராம்.

இவரிடம் உடையவர் ஒரு வருஷ காலம் ஸ்ரீராமாயணத்தின் ஆழ்ந்த உட்கருத்துகளை எல்லாம் கேட்டறிந்தார். தினமும் திருமலையில் தம் கைங்கர்யங்களை முடித்துக் கொண்டு அடிவாரத்திற்கு இறங்கிவந்து உடையவருக்குப் பாடம் சொல்லிவிட்டு இரவு அப்பனைத் திருவடி

தொழ மேலே சென்று விடுவாராம் இவர். காளத்திசைவரில் ஒருவராக இருந்த கோவிந்தப் பெருமாளை (ராமாநுஜரின் சிறிய தாயார் குமாரர் - பிறகு தர்சனத்தில் எம்பார் என்று ப்ரஸித்தராய் விளங்கியவர்) உடையவர் நம் தர்சனத்துக்கு மீட்டுத் தரவேண்டும் என்று நம்பியை வேண்டியிருந்தார். நம்பியும் அப்படியே மீட்டுத் தம்மிடமிருத்தி அறிய வேண்டுவன பலவையும் அறிவித்து ராமாநுசனுக்கு உதகபூர்வமாக தானம் பண்ணியருளினார் என்று ப்ரஸித்தம்.

எம்பெருமானாருக்கும் பராசரபட்டருக்கும் சக்ரவர்த்தி திருமகனிடம் தனித்த பக்ஷபாதம் உண்டு என்று அறியலாகிறது. அமுதனாரும்,

படிகொண்டகீர்த்தி இராமாயணமென்னும் பத்திவெள்ளம்
குடிகொண்டகோயில் இராமாநுசன—

என்று போற்றுகிறார். ஸ்ரீராமாயணத்தில் நம்பியிடம் விபீஷண சரணாகதி கட்டத்தைக் கேட்டுக் கொண்டிருக்கும் போது பெருமாளும் இளையபெருமாளுமான இருவிக்ரஹங்கள் தென்மதுரையிலிருந்து ஒரு பக்தரால் உடையவரிடம் சேர்க்கப் பட்டன என்றும் உடையவரும் மிகப்ரீதராய் பிராட்டியுடனும் திருவடியுடனும் சேர்த்து திருமலையில் திருவேங்கடமுடையான் கோவிலில் ப்ரதிஷ்டிரப்பித்தார் என்றும் திருமலை ஒழுகு என்ற வரலாற்று நூல் கூறுகிறது.

**திருவரங்கப்பெருமாளரையர் :** ராமநுஜர் ஆழ்வார்களின் அருளிச்செயல்களில் மூவாயிரத்தைப் பெருமாள்கோவிலில் பெரியநம்பியிடம் ஓதிக்கற்றார். திருவாய்மொழி ஆயிரத்தை (மூலப்பாசுரங்கள்) திருவரங்கப்பெருமாளரையரிடம் கற்றார். இவர் ஆளவந்தாருடைய சிஷ்யர்களில் முதல்வர். அன்னாருடைய குமாரர் என்றும் சொல்வர். இவரே தேவப்பெருமாள் திருமுன்பே பாடி இராமாநுசரை வரப்ரதானமாக திருவரங்கத்துக்குப் பெற்றுவந்தவர். பரமாசாரியர் ஸாதித்த சிலசீரிய அர்த்தங்களை இவரிடம் பெறும்படி பெரிய நம்பி நியமிக்க, உடையவரும், இவருக்குப் பாலமுது காய்ச்சிக் கொடுப்பது, நீராடும் போது கூட இருந்து உதவுவது போன்ற குற்றேவல்களைச் செய்துவந்தார். இவைகளில் உகந்த அரையர், "வாரீர் எம்பொருமானாரே! உமக்கு அவச்யம் அறியவேண்டிய சீரிய அர்த்தமொன்று சொல்லுகிறோம் கேளீர்" என்று ஆசாரியன் பெருமையை உணர்த்தினார். அரையர் சொல்லியது ;

குருரேவ பரம்ப்ரஹ்ம குருரேவ பரம்தநம்
குருரேவ பர:காமோ குருரேவ பராயணம் |
குருரேவ பராவித்யா குருரேவ பராகதி:
யஸ்மாத் ததுபதேஷ்டாஸௌ தஸ்மாத் குருதரோகுரு : ||

என்று சொல்லுகிறபடியே, *தீமனம் கெடுத்தும் *மருவித்தொழும் மனமே தந்தும், *அறியாதன அறிவித்த ஆசார்யனே உபாய உபேயம் என்று விச்வஸித்து, *ஆசார்யஸ்ஸஹரி ஸ்ஸாக்ஷாத் சரரூபீ நஸம்சய : என்றும், *பீதகவாடைப் பிரானார் பிமரகுருவாகி வந்து என்றும் சொல்லுகிறபடியே உறங்கும் பெருமாள் தானே உலாவும் பெருமாளாய் வந்தார் என்றிரும்" என்பதே.

**எம்பெருமானாரின் உத்தாரகத்வம் ;** பின்னர் உடையவரை அரையர் அழைத்தருளி, *"நாம் உமக்குச் சரமோபாய ரஹஸ்யத்தைச் சொன்னோமேயாகிலும் இது முக்யமாக விலைச்

செல்லுகிறது உம்முடைய பக்கலிலே தான். இதுக்கு நிதானம் நாதமுனிகளாகையாலே நீரே ஸர்வோத்தாரகராகக் குறையில்லை'' என்றருளிச்செய்தார்.

*இப்படி ஐவரும் கூட உடையவர்க்கு ஆசார்யர்களாக இருந்தார்களேயாகிலும் தாங்கள் தஞ்சமாக அறுதியிட்டிருப்பது உடைவரிடத்தில் உத்தாரகத்வத்தையிறே. திருக்கோட்டியூர் நம்பி (உடையவர் திருவடிகளிலே ஆச்ரயிப்பித்த தம் குமாரத்தி) தேவகி நாச்சியாரைத் தமது அந்திமதசையிலே அழைத்தருளி, "பெண்ணே ! நம் ப்ரயாணத்தில் நீ நினைத்திருப்பது என் ?" என்ன, "அய்யரே ! எங்களாசார்யரான எம்பெருமானாரோடு உண்டான ஸம்பந்தத்தாலே தேவரீருக்குப் பேறு முற்படப் பெற்றதே என்று நினைத்திருக்கின்றேன்'' என்ன, அவரும் "வளர்த்தனுல் பயன் பெற்றேன்'' என்று ஆளவந்தார் ப்ரஸாதலப்தமான (பவிஷ்யதாசார்ய) விக்ரஹத்தை ஸாதித்து, உள்ளிற் கருத்தும் வெளியாம்படி "எம்பெருமானார் திருவடிகளே சரணம்'' என்று திருநாட்டுக்கெழுந்தருளினார். இத்தால் எம்பெருமானாரிடத்திலே நிஸ்ஸம் சயமாக உத்தாரகத்வத்தை அறுதியிட்டார் என்னுமிடம் ஸித்தமாயிற்றிறே. (* இவை சரமபர்வ நிர்ணயத்தில் உள்ளவை).

**எம்பெருமானார் திருவடிகளே சரணம் :** உடையவருடைய ஆசார்யர்கள் தங்கள் குமாரர் களை எம்பெருமானார் திருவடிகளில் ஆச்ரயிப்பித்தனர். எம்பெருமானாருடைய உத்தாரகத்வத்தை யறிந்த ஸகல பூர்வாசார்யர்களும் தம் சிஷ்யர்களுக்கு எம்பெருமானார் திருவடிகளையே தஞ்சமாகக் காட்டித்தந்தனர். "எம்பெருமானார் திருவடிகளே சரணம் என்றிரும்'' என்பது முக்ய உபதேசமாக ஆயிற்று. தம்மிடம் மிகவும் பற்றுதலுள்ள ஒரு ஊமை ஸ்ரீவைஷ்ணவரை எம்பெருமானார் ஒரு அறையினுள் அழைத்துப்போய் கதவைத்தாளிட்டுக் கொண்டுத் தம் திருவடிகளைக்காட்டி ஸமிஞ்ஞையால் "இதைத் தஞ்சமென்றிரும், பேறு தப்பாது'' என்று உபதேசித்தார். இதை மறைந்திருந்து பார்த்த கூரத்தாழ்வான் நாமும் ஒரு ஊமையாய்ப் பிறவாமல் போனேமே - வித்வானாய் வளர்ந்து கெட்டோமே - ஒன்றும் தெரியாத வ்யக்தியா யிருந்தால் எம்பெருமானார் இதுபோல் இரங்கியருள்வரே ! என்று அருளிச் செய்தது ப்ரஸித்தம். தம் திருவடிகளுடைய உத்தாரகத்வத்தை த்தாமே காட்டித்தந்ததை உணர்க.

**ஆசார்ய வைபவம்:** ஒருஸமயம் உடையவர் விபீஷணசரணாகதியையும் பெருமாள் அபயப்ரதானம் பண்ணியருளியதையும் விளக்கி அருளிச்செய்து கொண்டிருக்க, கோஷ்டி யிலிருந்த பிள்ளையுறங்காவில்லி தாஸர் எழுந்திருந்து அழுதகண்ணினராய் நின்று, "பகவானைச் சரணம் பற்றவேணும் என்று தன் மனைவி, பிள்ளை, சொத்துக்கள், உறவினர் எல்லாவற்றையும் விட்டு "ஸர்வலோக சரண்யனை சரணமாகப் பற்றினேன்'' என்று வந்து நிலத்தில் கால் பாவாமல் ஒருபிடிப்புமின்றிக்கே நின்ற விபீஷணனையும் "இவன் கொல்லத் தகுந்தவன்'' என்று கல்லும் தடியுமாக நின்ற ராமகோஷ்டிக்கு அடியேன் போன்ற நித்யஸம் ஸாரியா ஆளாப் போகிறேன் ?'' என்று கேட்டாராம்.

அதற்கு ஸ்வாமி எம்பெருமானார் தந்தருளிய பதில் : "பிள்ளாய் ! அஞ்சவேண்டா; பகவத்ஸாம்ராஜ்யத்தை நான் பெற்றேனாகில் என்ஸம்பந்தத்தையிட்டு நீ பெறுவாய்; நம்மாசார்யரான பெரியநம்பி பெற்றாராகில் நான் பொறுவேன். இப்படி ஆசார்யஸம்பந்தத்தை யிட்டுப்பார்த்தால் குலபதியும் பரமாசார்யருமான நம் சடகோபர் "அவாவற்று வீடு பெற்ற'' என்று தம் திருவாக்காலேயே அருளிச் செய்துள்ளமையால் அவர் பெற்றது ஸித்தம். அப்படியே நமக்கும் ஸித்தம் என்றிருப்பாய். எம்பெருமானும் நித்யஸம்ஸாரிகளும் (ஆசார்ய பரம்பரா ஸம்பந்தமாகிற) ஒரு சங்கிலித்துவக்கிலல்லவா இருப்பது? கழுகு உண்ணில் வாழையும் உண்ணுமே. விபீஷணனோடு நாலுபேர் வந்தனரே; அவர்களை விலக்கியா விபீஷணனை அங்கீகரித்தனர் ? ஆனபின்பு நான் பெற்றேனாகில் (என்னைப்பற்றிய) நீயும் பெறுவாய்-அஞ்சாதேகொள். "ஏத்தியிருப்பாரை வெல்லுமே மற்று அவரைச் சார்ந்திருப்பார்

தவம்" என்றன்றோ திருமழிசைப்பிரான் திருவாக்கு! பகவானை ஏத்தியிருக்கும் ப்ரதமபர்வநிஷ்டர் தவத்தை வெல்வதன்றோ (அதற்கு உயர்ந்ததன்றோ) அசார்யனாலே பேறு என்ற சரமபர்வ நிஷ்டர் தவம்? ஏத்தியிருந்தார். ஸ்ரீபரதாழ்வான்-அவரைச் சார்த்தியிருந்தார் ஸ்ரீசத்ருக்நாழ்வான்; ஏத்தியிருந்தார் நம்மாழ்வார்-அவரைச்சார்த்தியிருந்தார் ஸ்ரீமதுரகவிகள்; ஏத்தியிருந்தார் பெரியாழ்வார்-அவரைச்சார்த்தியிருந்தார் ஆண்டாள். நான் பெற்றேனாகில் நீ நிச்சயம் பெறுவாய். அஞ்சவேண்டாம்" என்று அபயப்ரதானம் பண்ணியருளினுர்.

**முடிவுரை :** நம் நிலையைப் பார்க்கப்புகுந்தால், எம்பெருமானுர் திருவடிகளே நமக்கு உபாயமும் உபேயமும் ஆகவேணும். எம்பெருமானுரே நமக்கு உத்தாரக (ஸம்ஸாரத்தினின்றும் கரையேற்றும்) ஆசார்யராவர். நமக்கு வாய்த்த குரவர் எம்பெருமானுர் ஸம்பந்தத்தை உண்டாக்கித்தரும் உபகாரகர். இதுவே யதீந்த்ரப்ரவணரான மணவாளமாமுனிகள் நமக்கு உபகரித்துள்ள பரமார்த்தம்.

எந்தை திருவாய் மொழிப்பிள்ளை இன்னருளால்
உன்தன் உறவை உணர்த்தியபின்-இந்தவுயிர்க்
கெல்லா வுறவும் நீயென்றே எதிராசா!
நில்லாத துண்டோ?என் னெஞ்சு.

இந்தவரங்கத் தினிதிரு நீ என்றரங்கர்
எந்தை எதிராசர்க்கீந்தவரம்-சிந்தை செய்யில்
நம்மதன்றோ? நெஞ்சமே! நற்றாதை சொம் புதல்வர்
தம்மதன்றோ? தாயமுறைதான்?

என்பன மாமுனிகளின் பாசுரங்கள். (ஆர்த்திப்ரபந்தம், 58,60). "உம்முடைய ஸம்பந்த ஸம்பந்திகளுக்கெல்லாம் உமது பேறுதப்பாது" என்று அரங்கன் ஒரு பங்குனி உத்திரத் திருநாளிலே எம்பெருமானுருக்கு வரமளித்தான் எதிராசன் நமக்கு ஸர்வ விதபந்து. ஆகையால் இந்தவரமான நிதி முறைப்படி நம்மைச் சேருமாதலால் பேறு தப்பாது. **எம்பெருமானுர் திருவடிகளே சரணம்** என்பதற்கு மேல் உயர்த்த மந்திரம் நமக்கு வேறு இல்லை. நம் ஆசார்யர்கள் காட்டித்தந்துள்ள இந்த அர்த்தத்தில் திடமான அத்யவஸாயம் உண்டாக வேண்டும் என்று பங்கயமாமலர்ப் பாவையைப் போற்றிப் பணிவோமாக.

வாழி எதிராசன் பொன்னடிகள்!
எம்பெருமானுர் திருவடிகளே சரணம்.

oooooooooooooooooooooooooooooooooooooooooooooooooooooooooooooooo

திருவாய்மொழியில் மாறனடி பணிந்துய்ந்தவரான ராமானுசனுடைய ஈடுபாடு விலக்ஷணமானது. இதற்கு எடுத்துக்காட்டான பல ஐதிஹ்யங்களில் ஒன்று: 9-8-1 அறுக் நம் வினை-ஈடு -குறுக்கும்-எம்பெருமானுர் திருவடிதொழ எழுந்தருளா நிற்க, "திருநாவாய் எத்தனையிடம் போரும்?" என்று எதிரே வருகிருர் சிலரைக்கேட்டருள, "குறுக்கும்" என்றுர்களாய், அதைக் கேட்டு, இப்பாஷையாலே (அந்நாட்டில் நடையாடும் சொல்) யருளிச் செய்வதே ஆழ்வார்! என்று போரவித்தராயருளினுர்.

oooooooooooooooooooooooooooooooooooooooooooooooooooooooooooooooo

ஸ்ரீ:

# ராமாநுஜோ விஜயதே யதிராஜ ராஜ:

Dr. V. V. ராமாநுஜம், M.A., Ph.D., பேராசிரியர், சென்னைப் பல்கலைக்கழகம்.

**முன்னுரை :** ராமாநுஜோ விஜயதே யதிராஜ ராஜ: என்பது எம்பெருமானாருடைய விஜய பரம்பரைகளை அநுஸந்திக்கும் "தாடீபஞ்சகம்" என்ற ஸ்துதியின் முடிவான பாதம். எம்பெருமானார் வீதியில் எழுந்தருளும் போது அவருடைய சிஷ்யர்களான 12000 ஸ்ரீவைஷ்ணவர்களும் 700 ஜீயர்களும் இந்தத் துதியை அநுஸந்தித்து வருவர் என அறிகிறோம். ராமாநுஜோ விஜயதே யதிராஜ ராஜ: என்று இப்பெரிய கோஷ்டி முடிக்கமிட்டால் கேட்க எப்படி இருக்கும் ? நினைத்துப்பார்க்கவே இயலவில்லை. புளகாங்கிதமடைகிறோம். எம்பெருமானாருடைய சிஷ்ய கோடிகளில் ஆண், பெண் இருபாலாரும் உண்டு. எல்லா வருணத்தவரும் உண்டு. அரசரும் உண்டு; ஆண்டியும் உண்டு. "பாகவதஸமதர்மம்" உண்மையில் செயல்பட்ட ஸமூஹம் அது. இப்பரந்த ஸமூஹத்தில் ஒரு சிலரைப்பற்றியே நாம் அறியமுடிகிறது. உடையவரும் இந்த சிஷ்யர்களும் எப்படி பரிமாறிக் கொண்டனர் என்பதை குருபரம்பரை வரலாறுகளிலிருந்தும் திவ்யப்ரந்த வ்யாக்யானங்களில் காணும் ஐதிஹ்யங்களிலிருந்தும் காணலாம். இவற்றில் சிலவற்றை இங்கு பேசிமகிழ்வோம்.

**ராமாநுஜருடைய ப்ரதான சிஷ்யர்கள்:** இளையாழ்வார் ஸந்யாஸ ஆச்ரமம் தெற்று ராமாநுஜ முனிவராக விளங்கியபோது முதல்முதலில் இவரிடம் உபதேசம் பெற்று சிஷ்யர்களாகச் சேர்ந்தவர்கள் முதலியாண்டானும் கூரத்தாழ்வானும். முதலியாண்டான் ராமாநுஜருடைய ஸஹோதரி குமாரர் கல்வி கேள்விகளில் தேர்ந்தவர். "முதலியாண்டானையொழிய ஸந்யஸித்தோம்" என்று ஸ்வாமி ஆச்ரமம் வாங்கிக்கொண்டபோது கூறியதாக சரித்திரம். பாகவதர்களில் தலைவர் இவர் என்பதற்கு இந்த நிகழ்ச்சி எடுத்துக்காட்டு. **பாதுகே யதிராஜஸ்ய** என்று தொடங்கும் இவரைபபற்றிய தனியன். இன்றும் எல்லாக் கோவில்களிலும் யதிராஜ பாதுகைகளுக்கு முதலியாண்டான் என்றே திருநாமமாகக்காண்கிறோம். மேலும் முதலியாண்டானை தமக்கு த்ரிதண்டமாக அபிமானித்திருந்தார் ஸ்வாமி. முதலியாண்டானுடைய இயற்பெயர் **தாசரதி** என்பது. இவர் சக்ரவர்த்திதிருமகனுடைய அம்சம் என்பர். இவர் அவதாரஸ்தலம் பச்சைவாரணப்பெருமாள் கோவில் (இப்போது பேட்டை என்று வ்யவஹாரம்).

கூரத்தாழ்வான் கூரமாநகர் (அக்காலத்தில் மாநகராய் இருந்திருத்தல் வேண்டும்) என்ற ஊரில் பெரிய தனிகரும் பரமபாகவதருமான ஆழ்வார் என்பவருடைய குமாரர். இவர் நம்மாழ்வாரைப் போல பகவத்குணங்களில் ஈடுபட்டவராகையால் இவரை ஸம்ப்ரதாயத்தில் ஆழ்வான் என்பது.

இவருடைய இயற்பெயர் திருமறுமார்பன் (ஸ்ரீவத்ஸாங்கன்) என்பது. திருத்துழாய் முளைக்கும் போதே மணத்துடன் விளங்குமாப் போல இவரும் ஞானபக்திகளுடன் பிறந்தவர்

என்று அறிகிரேம். உடையவருக்குச் சமமான வித்வத்ஸம்பந்நர். இவரை பவித்ரமாக மதித்திருந்தார் ஸ்வாமி. வேதாந்த விசாரங்களுக்கு இவரை உசாத்துணையாகக் கொண்டிருந்தார் எம்பெருமானுர். இவரும் பகவதம்சமாகப் பிறந்தவர் என்பது நம் பெரியோர் துணிவு. ராமாவதாரத்தில் இளையபெருமாளிடம் இடைவிடாத கைங்கர்யம் கொண்டான் எம்பெருமான். இளையபெருமாள் இளையாழ்வாராக வந்தவதரித்த போது எம்பெருமான் ஆண்டானுகவும் ஆழ்வானுகவும் வந்தவரித்து ஸ்வாமிக்கு அத்தாணிச் சேவகம் புரிந்து இன்புற்ருன் என்பது ரஹஸ்யம். சிஷ்யலக்ஷணத்தை லோகத்தார் அறிய வெளியிட்டனன் என்னலாம்.

இவர்களுக்கடுத்தபடியாக ஸ்வாமிக்கு மிகவும் அணித்தாக இருந்தவர் எம்பார் என்னும் முக்கோல் பகவர். இவர் இயற் பெயர் கோவிந்தப் பெருமாள் என்பது. பிறப்பில் இளையாழ்வாருடைய சிறியதாயார் குமாரர். இளையாழ்வாருடன் யாதவப்ரகாசனுடைய வேதாந்தப் பள்ளியில் பயின்றவர். யாதவன் காசியாத்ரை என்று சாக்கிட்டு இளையாழ்வாரை முடித்து விடுவதாக எண்ணியிருந்த சூழ்ச்சியை தமது அண்ணருக்கு ரஹஸ்யமாக அறிவித்து காசியாத்ரா கோஷ்டியிலிருந்து விலகும்படி தூண்டி அவர் உயிர்தப்ப உதவிய மஹானுபாவர். இவர் கர்ம வசத்தால் சைவராகி காளத்திச் சைவர்களுக்குத் தலைவராய் இருந்தபோது ராமாநுஜர் இவரைத் திருத்திப்பணி கொள்ளவேணும் என்று தன் அம்மானுன பெரியதிருமலை நம்பியை வேண்ட, அவரும் அப்படியே செய்து தமக்கு அந்தரங்கராகக்கொண்டிருந்தார். ராமாநுஜர் திருப்பதி சென்று நம்பியிடம் ஓராண்டுகாலம் ஸ்ரீராமாயணத்தின் உட்பொருள்களை அறிந்த பின்னர் தம் தம்பி முறையினரான கோவிந்தரை உதக பூர்வமாக தானமாகப் பெற்றுவந்தார். இவர் ராமாநுஜருக்கு நிழலும் அடிதாறுமாக இருந்தவர். ராமாநுஜ பதச்சாயா என்று தொடங்கும் இவரைப் பற்றிய தனியன்.

இன்னும் பலருண்டு. யஜ்ஞமூர்த்தி என்று ப்ரஸித்தரான அத்வைத ஸந்யாசி ராமாநுஜரிடம் வேதாந்தவாதத்தில் தோற்று அவருடைய சிஷ்யராகி அருளாளப்பெருமாளெம்பெருமானுர் என்ற வைணவத்துறவியானுர். இவர் கல்வி கேள்விகளில் மிகச்சிறந்தவர். ராமாநுஜரை குருவாக ஏற்றபின் அவரிடம் மிகவும் அன்புபூண்டு ஒழுகியவர். கிடாம்பியாச்சான் என்பவர் ஸ்வாமிக்கு திருமடைப்பள்ளி கைங்கர்யம் செய்து பிக்ஷை ஸாதிப்பார். இவரும் சிறந்த வித்வானே. உடையவரிடம் "தேவு மற்றறியேன்" என்று மதுரகவி நிஷ்டையைக் கடைபிடித்தவர் ஆந்த்ர பூர்ண ரென்னும் வடுகநம்பி. பிள்ளை உறங்காவிலிதாஸர் என்பவர் வேட குலத்தைச் சேர்ந்த சிஷ்யர். மிகத்தூய உள்ளமும் குருபக்தியும் படைத்தவர். இவருடைய இல்லாள் பொன்னுச்சியார் என்ற பேரழகி. இவளும் ஸ்வாமியிடம் சிறந்த பக்தியுள்ளம் கொண்டிருந்தாள். இவர்களைப்பற்றி நமக்குக் கிடைத்துள்ள இன்சுவையான சில சரித்திரங்களை அநுபவிக்கலாம். மேலே விரிவுக்கஞ்சமல் இருக்க இயலாமையால் ராமாநுஜருக்கும் இவர்களுக்குமிடையே நிலவிய உறவை மட்டும் வலியுறுத்திக்காட்டி இதர விஷயங்களை அதிகமாகக் கூருமல் விடுக்க வேண்டியுள்ளது.



**தண்டும் பவித்திரமும்:** "ஆசாரியன் சிச்சனுருயிரைப்பேணுமவன்" என்கிறபடியே தமது சிஷ்யர்களுடைய ஆத்மீய வாழ்ச்சியிலேயே பெருநோக்குடையவர் ராமாநுஜர். அரும்பெரும் பாடுபட்டுத் திருக்கோட்டியூர் நம்பியிடம் திருமந்த்ரார்த்தம் பெறச்சென்றபோது கூடவே ஆழ்வானையும் ஆண்டானையும் அழைத்துச் சென்று, ஆண்டானை த்ரிதண்டமாகவும் ஆழ்வானைப் பவித்திரமாகவும் கொண்டு உபதேசத்தை மூவருமாகப்பெற்றனர். விலக்ஷண ஸம்பந்தமான நம்பி ஸம்பந்தமும் செம்பொருளை ச்ரமமின்றியே அவரிடமிருந்தே அறியப்பெருகையும் உடையவருடைய திருவருளால் ஆண்டானுக்கும் ஆழ்வானுக்கும் கிடைத்தன. முதலியாண்டானுடைய ஒரு திருவாக்கு—

"ஒருமலையில் நின்றும் ஒருமலையில் தாவும ஸிம்ஹசரீரத்தில் ஜந்துக்களைப்போலே உடையவர் ஸம்ஸாரலங்கநம் பண்ண அவரோடுண்டான குடல்துடக்காலே நாம் உத்தீர்ண ராவுதோம்"
[ஸ்ரீமத் ரஹஸ்யத்ரயஸாரம்—அதிகாரிவிபாகாதிகாரம்].

**ஆழ்வானுக்கு மட்டும் சரமச்லோகார்த்தம் :** பின்னர் எம்பெருமானார் சரமச்லோகார்த்தம் கேட்டபோது திருக்கோட்டியூர் நம்பி நியமனத்தால் தனியாகவே சென்றார். அதை ஆழ்வானுக்கு மட்டுமே உபதேசிக்க அநுமதி பெற்று வந்து உபதேசித்தார். இவ்விஷயத்தில் ஆழ்வானிடம் ஸ்வாமிக்கு ஒரு வித்வத்பக்ஷபாதம் காண்கிறது. திருவிருத்தத்தில் "ஈனச்சொல்" (99) பாசுர வ்யாக்யானத்தில் ஒரு ஐதிஹ்யம் கூறப்பட்டுள்ளது காண்க :

ஞானப்பிரானை அல்லாலில்லை :—ஒரு விசை திருக்கோட்டியூர் நம்பி திருநாளுக்கு (ஸ்ரீரங்கம்) நடந்தவிடத்து இவ்வார்த்தை அருளிச்செய்வதாக ஒரு ஏகாந்த ஸ்தலத்தே எம்பெருமானாரையும் கொண்டுபுக்காராய், திருப்பணி செய்வாரொருத்தன் அங்கே உறங்கிக் குறட்டை விடாநிற்க, அவனைக்கண்டு, "அநர்த்தப்பட்டோம்" என்று அவ்விசைக்குத் தவிர்ந்து பிற்றைவிசையிலே இத்தை நம்பி அருளிச்செய்யக் கேட்டருளி, ஆழ்வான் (தமது) அகத்திலே அமுது செய்திருக்கிறவளவிலே உச்சிவெய்யிலிலே வந்து புகுந்து, "நம்பி 'இவ்வார்த்தை ஒருவருக்கும் சொல்லாதே கொள்' என்று அருளிச்செய்தார்; உனக்கிது சொல்லாதிருக்க மாட்டேனிறே" என்று, ஸஹகாரி நைரபேக்ஷ்யத்தை அருளிச்செய்தாரிறே.

**"அடியேனுள்ளான்" :** ஒரு ஸமயம் கோஷ்டியில் ஜீவனுடைய அந்தரங்கஸ்வரூப ப்ரஸ்தாவம் வர, ஆழ்வானை, இதைத்திருக்கோட்டியூர் நம்பியிடம் கேட்டுவாரும் என்று நியமிக்க, ஆழ்வானும் நம்பியிடத்தே ஆறு மாதம் காத்திருந்து "அடியேனுள்ளான்" என்று பாசுரத்துணுக்கை இந்த அர்த்தமாகப் பெற்று வந்தது ப்ரஸித்தம். சேஷத்வமே ஜீவனின் அந்தரங்க நிரூபகம் என்ற சீரியபொருளை ஆசார்யமுகேந வெளியிட வேண்டும் என்று இப்படிச் செய்த .

**எம்பார்பற்றிய ஒரு நிகழ்ச்சி:** "முன்னோர் மொழிந்த முறைதப்பாமல் கேட்டுப் பின்னோர்ந்து தான் அதனைப்பேசுகை" என்பது ஸதாசர்ய சரித்திரம். இதை உடையவர் (ஸர்வஜ்ஞராயிருந்து வைத்தும்) மேலே சொன்னபடி அநுஷ்டானத்தில் காட்டினார். எம்பார் சரித்ரத்தில் ஒரு ரஸமான நிகழ்ச்சி இங்கு ஸ்மரிக்கத்தக்கது. பெரியாழ்வார் திருமொழி சாற்றுப் பாசுரமான "வேயர்தங்கள்" முடிவில் "சாயைபோலப் பாடவல்லார்" என்னும் சந்தைக்கு எம்பாரைச் சிலர் பொருள் கேட்க, "இதை உடையவர் ஸ்ரீபாதத்தில் அடியேன் கேட்டதில்லை. கேட்டுச் சொல்லலாம் எனில் ஸ்வாமி திருக்கோட்டியூர் எழுந்தருளியுள்ளார். ஆகிலும் இப்போதே சொன்னேனாக வேண்டும்" என்று சொல்லி உடையவர் திருவடி நிலைகளைத் தம் முடிமேல் இட்டுக்கொண்டு ஆசார்யனை ஸ்மரித்து "இப்போது உடையவர் அருளிச்செய்த பொருளைக் கேளீர்; பாடவல்லார்—சாயைபோலத்தாமும் அணுக்கர்களே" என்றருளிச் செய்தார். இத்திருமொழியைப் பாடவல்லார் நிழல்போல எம்பெருமானுக்கு நெருக்கமுடையவராய் எப்போதும் பிரியாமல் வாழ்வார்கள் என்றபடி. எந்த அர்த்தத்தையும் ஆசார்யமுகேன வெளியிட்ட இவர்கள் பாங்கு அநுபவிக்க வேண்டியதொன்று.

**ஆண்டானுக்கு ஸ்வரூப சிக்ஷை :** முதலியாண்டான், தாமும் சரமச்லோகார்த்தமறிய வேண்டும் என்று உடையவரை ப்ரார்த்தித்தபோது, "நம்பி பாடே கேளும்" என்று அனுப்பிவிட, அவரும் திருக்கோட்டியூர் சேர்ந்து நம்பியிடம் ஆறுமாதம் காத்திருந்து தம் தைந்யமெல்

லாம் தோற்றும்படி நம்பியை வேண்ட, "நம்மிராமாநுசனடியானைப் போலிருந்தாய்! உனக்கு வேண்டுவதென்?" என்று கேட்ட, ஆண்டானும், சரமச்லோகார்த்தம் உபதேசிக்கவேணும் என்று வேண்ட, ஆபிஜாத்யம் (குலம்), ஐச்வர்யம், வித்யா (கல்வி) விஷயம் பற்றிய பெருமையுண்டு என்ற எண்ணம் அகன்றால் எம்பெருமானரே இரங்கியருள்வர்; அங்கேயே சென்று கேளும்" என்று அனுப்பிவிட்டார். இந்த முக்குறும்பும் விலகியவராய் ஆண்டான் உடையவரிடம் சென்று நிற்க, அவரும் "நம் ஆண்டான் திருக்கோட்டியூர் நம்பியிடம் ஸ்வரூப சிக்ஷை பெற்று வந்திருக்கும்படியைக் காணீர்!" என்று சொல்லி மகிழ்ந்து உடனே அர்த்தத்தை உபதேசித்தருளி "இப்போதே தண்டும் பவித்திரமும் கைபுகுரப்பெற்றோம்" என்று ப்ரீதரானர். ஆழ்வானுக்கு மட்டுமே உபதேசம் பண்ணியது குறையாயிருந்தது போலும். ஆண்டானுக்கும் சொல்லி மனநிறைவு பெற்றார் என்றறிக.

இத்த ஸ்வரூபசிக்ஷை திடமாகப் படிந்துள்ளதா என்பதை அத்துழாய்க்கு இவரைச்சீதன வெள்ளாட்டியாய் அனுப்பி பரீக்ஷிக்கவும் செய்தார். ஸ்வாமி நியமித்ததும் உடனே ஆண்டான் அத்துழாயின் புக்ககம் சென்று அங்கு ஒரு பணிப்பெண் செய்யும் பணிகளை மிகுந்த மனநிறைவுடன் செய்தது உலகமறிந்த வரலாறு ஆகையால் அதை இங்கு விவரிக்கவில்லை.

**"பணிமானம் பிழையாமே"** இவ்விடத்தில் கிடாம்பியாச்சான் விஷயமான ஒரு நிகழ்ச்சியும் அநுஸந்தேயம். 4-8-2 "மணிமாமை" பாசுர ஈட்டில்:

"பணிமானம் பிழையாமே அடியேனைப்பணிகொண்ட"—உடையவர் எழுந்தருளியிருக்கிற மடத்திலே ஸ்ரீவைஷ்ணவர்கள் அமுது செய்யா நிற்க, ஆச்சான் தண்ணீரமுது பரிமாறுகிறவர் ஓரருகே சாயநின்று பரிமாறினர். அத்தை உடையவர் கண்டு ஓடிவந்து முதுகிலே மோதி, 'நேரே நின்றன்றோவுடோ பரிமாறுவது' என்றார். ஆச்சானும், "பணிமானம் பிழையாமே அடியேனைப் பணிகொண்ட" என்று பணித்தான் என்பதே அது.

**ஸ்ரீபாஷ்யத்துக்கு உசாத்துணை:** உடையவர் இரண்டு தடவை வடக்கே எழுந்தருளியதாக வைகிக்க குருபரம்பரையும் இதரவரலாறுகளும் இடமளிக்கின்றன. முதல்முறை காச்மீரம் சென்று போதாயனபகவான் அருளிச்செய்த வ்ருத்திக்ரந்தம் என்ற நூலைப்பெற்று அதிலுள்ள கருத்துகளைத் தழுவியே தாம் ஸ்ரீபாஷ்யம் எழுதவேண்டும் என்ற நோக்கத்துடன் சென்றது. இரண்டாம் முறை திக்விஜயார்த்தமாக எழுந்தருளி ஸிம்ஹாசலம், புருஷோத்தமம், ஸ்ரீகூர்மம் நைமிசாரண்யம் முதலான திவ்யஸ்தலங்களை மங்களாசாஸனம் செய்தருளிப் பல வித்வான்களைத் திருத்திப்பணிகொண்டு சாரதாபீடத்தில் ஸரஸ்வதியிடம் பாஷ்யகாரர் என்ற பிருதைப்பெற்று வந்தது. இருமுறைகளிலும் ஆழ்வானைத் தமக்கு உசாத்துணையாக அழைத்துச் சென்றிருத்தல் வேண்டும்.

**செங்கோலேந்தியவர் பெருமை:** இச்சமயங்களில் உடையவர் ஸ்ரீரங்கஸ்ரீயை மங்காமல் ரக்ஷிக்க ஆண்டானை நியமித்துச் சென்றதாக கோயிலொழுகு கூறும். ஆண்டானுக்கு சேனைமுதலியாருடைய செங்கோலைத்தந்ததாக வரலாறு. இதனால்தான் தாசரதி முதலியாண்டானகப் போற்றப்பெற்றார் என்பது பெரியோர் திருவாக்கு. "விஷ்வக்ஸேனோ யதிபதிரபூத் வேத்ரஸாரஸ் த்ரிதண்ட:" என்று பின்னர் தேசிகன் பணித்தது, இதைப்பற்றயே என்றும் கொள்ளலாம். ஸ்வாமியின் த்ரிதண்டஸ்தாநீயரான முதலியாண்டான் விஷ்வக்ஸேனருடைய செங்கோல் பெற்று அரசாண்ட பொருத்தத்தை உணர வேண்டும்.

**ஆழ்வான் போதாயன வ்ருத்தியை நெஞ்சில் கொண்டதும், ஸ்ரீபாஷ்யத்தை ஏடுபடுத்தியதும்:** போதாயன வ்ருத்திக்ரந்தம் ஓரே ஒரு பிரதியே உள்ளது; அதுவும் காச்மீரத்தில் ஒரு நூலகத்தில் என்றறிந்த ஸ்வாமி அத்தேச அரசனைக்கிட்டி அநுமதிபெற்று, க்ரந்தசோதனர்த்தமாக எடுத்து வந்தபோது, அத்தேச வித்வான்கள் பொறுமல் சில நாட்களுக்குள் பறித்துச் சென்றதாக

சரித்திரம். ஸ்வாமிக்கு அந்த க்ரந்தத்தின் ஒரு பாகத்தையே ஸேவிக்க அவகாசமிருந்தது. பெரும் பகுதியை ஸ்வாமி தூங்கும்போதும் மற்றய ஸமயங்களிலும் ஆழ்வான் ஸேவித்து நெஞ்சில் தேக்கிக் கொண்டார். க்ரந்தம் பறிபோனதறிந்து ஸ்வாமி மிகவும் சோகித்தபோது "அடியேன் ஸேவித்து முடித்துள்ளேன். இங்கே விண்ணப்பம் செய்யவோ? இரண்டாற்றின் நடுவே செய்யவோ? நியமிக்க வேண்டும்" என்று ஆழ்வான் ஸ்வாமியிடம் வேண்ட, அவரும் மகிழ்ந்து, பயணகதியாகக் கடுக ஸ்ரீரங்கம் சேர்ந்து ஆழ்வான் துணைகொண்டு ஸ்ரீபாஷ்யத்தை அருளிச் செய்து முடித்தார். ஸ்வாமி ஸாதிப்பதும் ஆழ்வான் எழுதுவதுமாக இக்கார்யம் நடந்தது. ஆழ்வான் தமக்கு இசையாத இடங்களில் எழுதக்கூடாது என்று ஸ்வாமி நியமித்திருந்தார். ஒரு இடத்தில் ஆழ்வான் எழுதாமல் வாளாவிருந்திட, ஸ்வாமி கோபித்து "நீரே எழுதும்" என்று ஆழ்வானை வெறுத்துப்பேசி எழுந்து சென்றதாகவும், பிறகு தாமே தாம் சொன்ன விஷயத்தை ஆராய்ந்து மாற்றிச்சொன்னதாகவும் ஆழ்வான் உடனே பட்டோலை கொண்டதாகவும் (எழுதியதாகவும்) சரித்திரம்.

ஆழ்வானிடம் மற்ற முதலிகள் "ஸ்வாமி உம்மை வெறுத்து விட்டாரே" என்று அநுதாபமாய் சில வார்த்தை சொல்ல, "ஆசார்யனிட்ட வழக்காயிருப்பதே பணி; எறிந்தவன் தானே தன் ஸொத்தை எடுத்துக்கொள்வான்" என்று ஆறியிருந்தார். இங்கு பாஷ்ய விஷயம் ஜீவாத்மாவைப் பற்றிய விசாரம் என்றும், பாஷ்யகாரர் ஜீவனின் பகவச்சேஷத்வத்துக்கு ப்ரதான்யம் தராமல் ஜ்ஞாத்ருத்வத்தையே ப்ரதானமாகும்படி பங்க்திகளைச் சொன்னாதலால் ஆழ்வான் எழுதவில்லை என்றும், பின்னர் பகவச்சேஷத்வமே அந்தரங்கநிருபகம் என்று பொருளை மாற்றிச் சொல்லவே எழுதினார் என்றும் பெரியோர்கள் பணிப்பர். [இவ்வர்த்தத்தை ஆழ்வானை அனுப்பி திருக்கோட்டியூர் நம்பி மூலமாக வெளியிட்டதாக முன்னமே சொன்னோம். அந்தசரித்ரம் ஸ்ரீபாஷ்யமருளிச் செய்வதற்கு முந்தியதாகில் இப்போது சொன்ன நிகழ்ச்சிக்கு இடமில்லை. ஸ்ரீபாஷ்யமருளிச்செய்து ஆத்மஸ்வரூபத்தை நிஷ்கர்ஷித்த பிறகு இந்த அர்த்தத்தை நம்பி மூலமாக வெளியிட ப்ரஸக்தியில்லை. இவ்விஷயத்தில் அடியேன் கூறக் கூடிய ஸமாதானம் ஒன்றுமில்லை. பெரியோர் வாய் கேட்டுணர்க.]

**மேல் நாட்டில் ஆண்டான் பணி :** சோழ அரசன் "சிவாத்பரதரம் நாஸ்தி" என்று யாவரையும் எழுத்திடும்படி நிர்ப்பந்தித்து ராமாநுஜரை தன் ஸபைக்கு அழைத்தபோது ஆழ்வான் தம் ஆசார்யருடைய வேஷத்தைப்பூண்டு சென்று த்ர்சனத்துக்குத் தம் தர்சனத்தை (கண் பார்வையை) த்யாகம் செய்த சரித்திரம் யாவருமறிந்ததே. எம்பெருமானார் ஆண்டானையும் மற்ற முதலிகளையும் அழைத்துக்கொண்டு மேல் நாட்டில் ஸஞ்சரித்ததும் அறிந்தவிஷயம். அங்கு சாலபுரி என்ற ஊரில் எல்லாரும் இதரமதஸ்தர்களாய் ஸ்வாமியை அநாதரித்திருந்ததால் அவ்வூரார் தீர்த்தமெடுக்கும் ஊருணியில் முதலியாண்டானைத் தம் திருவடிகளை விளக்கிவரும்படி நியமித்தார். ஆண்டானும் அப்படியே செய்ய, ஸ்ரீபாததீர்த்தப்ரபாவத்தால் எல்லாரும் திருந்தி ராமாநுசனடியாராக ஆயினர். பிறகு திருநாராயணனை யாதவாத்ரியில் கோயில் கொண்டருளப் பண்ணி ப்ரதிஷ்டிப்பித்து மற்ற இடங்களில் முதலியாண்டானைக்கொண்டு "பஞ்சநாராயணர்" என்ற 5 கோவில்களை ப்ரதிஷ்டிப்பித்தார்.

**அர்ச்சையில் ஆண்டானுடைய ஈடுபாடு :** முதலியாண்டானுக்கு அர்ச்சையில் மிகவும் ஈடுபாடு உண்டு. இதுவும் எம்பெருமானார் சிக்ஷையினால்தான் என்று அறியவேண்டும். ஒரு ஸமயம் உடையவர் "தமருகந்தது எவ்வுருவம்" என்ற பொய்கையாழ்வார் பாசுரத்தை நெஞ்சினுள் அநுபவித்துக்கொண்டு திருவரங்கத்துத் திருவீதி ஒன்றில் பிக்ஷைக்காகச் சென்று கொண்டிருந்தார். அப்போது சில பிள்ளைகள் காலாலே கீறி, "உம்முடைய எம்பெருமான் திருமேனி" என்று காட்ட, தெண்டனிட்டருளினர். விளையாடுகிறவர்கள் திருவீதியிலேயிருந்து (மண்ணைக்கொண்டு) பெருமாளும் நாச்சியாரும் பெரிய திருமண்டபமும் கற்பித்துப் பெரிய திருப்பாவாடையும் அமுது செய்வித்து, "எம்பெருமானார்! ப்ரஸாதப்படும்" என்று மணலைக்

கையாலே முகந்தெடுக்க, தற்காலத்திலே எழுந்தருளுகிற உடையவர் அவ்விடத்திலே அது கேட்டருளித் தெண்டனிட்டு அவர்களெடுத்த ப்ரஸாதத்தைப் பாத்திரத்திலே ஏற்ருர். [இந்த பங்க்திகள் தமருகந்தது எவ்வுருவம்—முதல் திருவந். 44. பாசுர வ்யாக்யானத்திலிருப்பவை]. உடையவர் காட்டிய மெய்ப்பாட்டை முதலியாண்டான் அறிந்து அதன்படி ஒழுகியவர் ஸந்நிதிகளை ப்ரதிஷ்டை செய்தது மிகவும் பொருந்தும். **யச்சீலோ ஸ்வாமி தச்சீலோ தாஸ:** என்ற வசனத்துக்கேற்ப ஆண்டானுடைய சரித்திரமும் இருந்தது. திருவாய்மொழியில் (3-6-9) "தஞ்சமாகிய" என்ற பாசுரம் "நெஞ்சினுல் நினைப்பான் யவன் அவனுகும் நீள்கடல் வண்ணனே" என்று முடியும். இந்த பாதத்துக்கும் பூர்வர்கள் நாம் நெஞ்சினுல் நினைப்பவனுக நீள்கடல் வண்ணன் (பரமபத நாதன்) ஆகிருன் என்று பொருள் கொண்டனர். நீள்கடல் வண்ணன் அர்ச்சாவடிவம் கொள்கிருன் என்றபடி. ஆண்டானே, "அங்குத்தைக்கு உகந்தருளின நிலத்தை விபூதியாக நினையாதே இங்குத்தைக்கு அவ்விடத்தை விபூதியாக நினையுங்கோள்" என்று பணிக்கும். (இவை ஈட்டிலுள்ள பங்க்திகள்). அர்ச்சா எம்பெருமானே நீள்கடல் வண்ணனுகிருன் என்று ஆண்டானுடைய பக்ஷம். "பரமபதநாதனுக்கு அர்ச்சையை விபூதியாகக்கொள்ள வேண்டாம் அர்ச்சா எம்பெருமானுக்கு அவனை பூவிதியாகக் கொள்ளுங்கோள்" என்ருர் முதலியாண்டான். அங்கில்லாத எளிமை இங்குதான் உண்டு. திருக்குணங்கள் பூர்ணப்ரகாசமடைவது இங்குதான். இதுவே உயர்ந்தது. இந்த உயர்த்தி விண்ணுட்டில் கிடையாது என்ற திட அத்யவஸாயம் முதலியாண்டானது என்று உணர்க.

**திருவாய்மொழியில் ஆண்டான் ஈடுபாடு:** எம்பெருமானுர் பகலெல்லாம் வேதாந்தம் நிர்வஹித்து இரவிலே திவ்யப்ரபந்தம் அது ஸந்திப்பது வழக்கம். ஒருநாள் திருப்பள்ளிக்கட்டிலிலே ஏறியருளி திருவாய்மொழியில் ஒரு பாட்டை அநுஸந்திக்க, அதைக்கேட்ட அளவிலே முதலியாண்டான் மோஹித்தார். அதைக்கண்டு உடையவர், "வேதம் வால்மீகி பகவான் வாயிலாக ஸ்ரீராமாயணமாய் வந்ததுபோல ஆழ்வார் வாயிலாகத் திருவாய்மொழியாய் வந்து அவதரித்ததன்றே? அத்தைக் கண்டன்றே இவர் பரவசானுர்" என்றருளிச் செய்தாராம்.* இங்கு வேதம் என்றது வடமொழி வேதமான ச்ருதிகளை. அதுவே ஸ்ரீராமாயணமாகவும் திருவாய்மொழியாகவும் அவதரித்து, சக்ரவர்த்தித்திருமகன் வால்மீமிராமாயணத்தைத் தன் குமாரர்கள் வாயிலாகக் கேட்டது போல, ராமாம்சபூதரான இவர், படிகொண்ட கீர்த்தி இராமாயணமென்னும் பக்தி வெள்ளம் குடிகொண்ட கோயிலான ராமாநுசன் வாயிலாக ஸ்ரீராமாயணத்தின் அபராவதாரமான திருவாய்மொழியைக் கேட்டுப் பரவசரானதில் வியப்பில்லை. உடையவர் இங்கு ஸ்ரீராமாயாணத்துக்கும் திருவாய்மொழிக்கும் ஸாம்யம் சொன்னது ஆண்டானது அவதார ரஹஸ்ய ஸூசகமாகவே என்பதை உணர்க.

**ஆழ்வான் அரங்கன் ஸேவை வேண்டாமென்றது:** உடையவர் மேல்நாட்டில் திருநாராயணபுரத்தில் வாழ்ந்திருந்த காலத்தில் ஆழ்வான் (கண்பார்வை இழந்தவர்) நம் பெருமாளைத் திருவடி தொழவேண்டி கோவிலுக்குச் சென்ருர். சோழராஜன் அக்காலத்தில் ராமாநுசனடியார் யாரையும் கோவிலுள் புக்கு அரங்கனைத்தொழ அநுமதிக்கவேண்டாம் என்று ஆணையிட்டிருந்தது ஆழ்வானுக்குத்தெரியாது. ஸந்நிதிவாசலில் இந்த ஆணையை ஆழ்வானிடம் வாயில் காப்போன் சொல்லி, "நீர் ஒருவர்க்கும் விரோதியில்லை. உள்ளே புக்குத் தொழும்" என்றனன். இதைக்கேட்ட ஆழ்வான் "ராஜாவினுடைய கட்டளையை மீறி உள்ளே புகுந்தனுகில் எம்பெருமானுர் ஸம்பந்தத்தை அறுத்துக் கொண்டவனுகிறேன். அப்படி ஆசார்ய ஸம்பந்தத்தை விலக்கிக்கொண்டு பெருமாளைத் திருவடி தொழுது ஆகவேண்டுவதில்லை" என்று உள்ளே புகாமலே திருமாலிருஞ்சோலைக்கு எழுந்தருளினுர். (இது திருப்பாவை 15. "எல்லே" பாசுர வ்யாக்யானத்தில் உள்ள ஐதிஹ்யம்).

* ஸ்ரீ உ. வே. ஆழ்வார் திருநகரி T. ராமகிருஷ்ணய்யங்கார் ஸ்வாமியின் **முதலியாண்டான்** என்னும் க்ரந்தத்தில் பக்கம் 83 காண்க.

**எம்பெருமானாரிடம் திருமாலிருஞ்சோலையழகர் பற்று:** திருமாலிருஞ்சோலை அழகரைக் கிடாம்பியாச்சான் புகுந்து தொழுது நிற்க, "ஒன்று சொல்லிக்காணாய்" என்று பெருமாள் நியமனமாக, "அபராதஸஹஸ்ரர பாஜநம்" என்று தொடங்கி ஆளவந்தார் திருவாக்கைச் (ஸ்தோத்ர ரத்நம்-48) சொல்லி **அகதிம்** என்ன, அழகர் அவர் பேச்சைத் தடுத்து, "நம்மிராமாநுசனையுடையையாயிருந்து **அகதிம்** என்னப் பெறாய்" என்றருளிச் செய்தாராம். எம்பெருமானார் திருவடி ஸம்பந்தம் பேற்றுக்குடலாயிருக, அந்த ஸம்பந்தமுடைய ஒருவர் தம்மை அகதி (புகலற்றவன்) என்று சொல்லிக்கொண்டது பெருமாளுக்கு அஸஹ்யமாயிற்று. பரமாசார்யர் வாக்காக இருப்பினும் ஆச்சான் சொன்னபோது எம்பெருமானாருடன் உறவையறுத்துச் சொன்ன சொல்லாக எம்பெருமான் கொண்டான் போலும்! (இது திருப்பாவை 23 "மாரிமலை" பாசுரவ்யாக்யானத்திலுள்ள ஐதிஹ்யம்).

**ஆழ்வானை பெருமாள்கோயில் அழைத்துச் சென்றமை:** எம்பெருமானார் ஸ்ரீரங்கத்தை விட்டு விலகியிருக்கக் காரணமாயிருந்த சோழவரசன் க்ருமிகண்டனாய் மாண்டு, எம்பெருமானாரும் திருவரங்கம் சேர்ந்து ஆழ்வானை முதல் முன்னம் வந்து கண்டு கண்டோமே என்ற இன்பத்தைவிட பார்வையை இழந்தாரே என்ற துக்கமே மிகையாக இருக்க, மிகவும் க்லேசித்து ஆழ்வானை கண் பார்வை பெறுதற்காக தேவப்பெருமாளைக் குறித்து ஒரு துதி விண்ணப்பம் செய்யுமாறு பணித்தார். ஆழ்வானும் அப்படியே செய்ய அதைக் கேட்டு, "இப்பாசுரங்கேட்டால் பெருமாள் இரங்காமை இல்லை. உன் முகத்தைக் காட்டிக்காணாய்"* என்று பார்த்தருளி, ஆழ்வானை நிர்ப்பந்தமாய் பெருமாள் கோவிலுக்கு அழைத்துச் சென்று தேவப்பெருமாள் திருமுன்பே விண்ணப்பம் செய்யும்படி நியமித்தார். மேலே நடந்தவை ப்ரஸித்தமென்று விட்டுவிடுகிறேன்**

**ஆழ்வானுடைய அந்திமதசையில் சரித்திரம்:** உடையவர் மேல்நாட்டிலிருந்து திரும்பிய பிறகு ஆழ்வான் வெகுகாலம் இவ்வுலகில் இருக்கவில்லை. ஒருநாள் நம்பெருமாளிடம் "கூவிக் கொள்ளும் காலம் இன்னமும் குறுகாதோ?" என்று வேண்டி மேல்வீடு தந்ததாக வரம் பெற்று, அப்பேற்றை நோக்கி ஆழ்வார் திருவரங்கப்பெருமாளரையர் திருமாளிகையிலே சயனித்திருப்பதாக உடையவர் அறிந்தார். ஆழ்வானுடைய பிரிவு தமக்கு ஸஹியாது; பெருமாளை வேண்டினால் ஆழ்வானைத் தம்முடன் விட்டுவைப்பார் என்று திருவுள்ளங்கொண்டு† பஞ்சுக்கொட்டன் திருவாசலளவும் எழுந்தருளி. "பெருமாளுக்கு விண்ணப்பம் செய்தால் அப்படியே பெருமாளும் செய்தருளுவர்; நாமடியாகப் பெருமாள் இரண்டு வார்த்தை யருளிச் செய்தாராக ஒண்ணாது" என்று மீண்டு ஆழ்வானிருக்கிறவிடத்தேற எழுந்தருளினர்.

ஆழ்வானைக்கண்டு "நாமிருக்க, நீர் இப்படிப் பெருமாளை வேண்டுவதே?" என்று மனமுடைந்து சொல்ல, ஆழ்வானும் "முறை முறை எதிர்கொள்ள" என்று நம்மாழ்வார் திருவாக்கு. தேவரீர் அங்கெழுந்தருளும்போது எதிர்கொள்ள முன்பே அடியேன் செல்ல வேண்டினேன்" என்ன "அடைவில்லாத தேசத்திலே நீர் ஒரு அடைவு தேடுவதே" என்றருளிச்செய்தார்.

**ஆழ்வானுடைய பிரிவில் உடையவர் இரங்கல்:** ஆழ்வான் பரமபதித்தபோது தாம் துறவியாயிருந்தும் ராமாநுசர் துக்கம் தாளாமல் பெரிதும் அழுததாகத்தெரிகிறது. "ஒரு மகள் தன்னையுடையேன்" (பெரியாழ்வார் திருமொழி 3-8-4) வ்யாக்யானத்தில் பங்க்திகள்: ஆழ்வான் திருநாட்டுக்கெழுந்தருளின போது உடையவர் விச்லேஷம் பொறுக்கமாட்டாமல் "ஒரு மகள் தன்னையுடையேன்" என்றும் "உலகம் நிறைந்த புகழால் திருமகள் போல வளர்ந்தேன்" என்றும், "செங்கண்மால்தான் கொண்டு போனான்" என்றும் அருளிச்செய்தார் என்று ப்ரஸித்த

* திருவாய்மொழி 4-7-5 "அப்பனே" ஈடு—ஏழையேன் நோக்குவனே என்றவிடத்தில் ஐதிஹ்யம்

** "தேவப்பெருமாளும் ராமாநுஜரும்" என்ற வ்யாஸத்தில் காண்க.

† பெரியாழ்வார் திருமொழி 4-4-7 "குருந்தமொன்று" வ்யாக்யானத்திலுள்ள ஐதிஹ்யம்.

பிறே. "உபமாநமசேஷாணாம் ஸாதூநாம் யஸ்ஸதாபவத்" என்கிறபடியே ஸாதுக்களுக்கெல்லாம் உபமான பூமியாகச் சொல்லலாம்படி இருக்கையாலே உலகம் நிறைத்த புகழ் உள்ளது ஆழ்வானுக்கேயிறே" என்பன.

**ஆழ்வானுடைய திருமொழி காலக்ஷேபம்:** ஆழ்வான் திருவாய்மொழி நிர்வஹிப்பது பரம விலக்ஷணமாய் இருக்கும். பாசுரங்களின் அநுபவத்தில் நம்மாழ்வாரைப்போல் இவரும் கண்ணும் கண்ணீருமாய் பரவசராய் இருப்பராம். நீரைத்துடைக்க பல ஓலியல்கள் (தளுவம்) வேண்டியிருக்குமாம். இப்படி பாசுராநுபவத்தில் ஆழ்ந்தமை பற்றியே இவருக்கு ஆழ்வான் என்று திருநாமமாயிற்று. ஆழ்வான் காலக்ஷேபத்துக்குக் கிடாம்பியாச்சான் சென்று கேட்டு வருகையில் ஒருநாள் எம்பெருமானாரிடம் காலம் தாழ்த்து வரநேர்ந்தது. அப்போது ஆச்சானுக்கும் உடையவருக்கும் நடந்த ஸம்பாஷணையை *வ்யாக்யான பங்க்தியடைவில் கீழே காண்க:

உடையவர்: ஏன் நீ அன்று வைக்கிறாய் ?

ஆச்சான்: ஆழ்வான் பாடே திருவாய்மொழி கேளா நின்றேன்.

உ: இன்று என்ன திருவாய்மொழி நிர்வஹித்தான் ?

ஆ: பிறந்தவாறும்.

உ: அதில் சொன்ன விசேஷமென் ?

ஆ: ஒன்றும் விசேஷமில்லை.

உ: ஆகில் நீ கேட்டபடி என் ? அவன் சொன்னபடி என் ?

ஆ: நிர்வஹிப்பதாக ஆரம்பித்து இயல் சொல்லி அநந்தரம் ஆழ்வாருடைய பாரவச்யத்தை அநுஸந்தித்து நெடும்போது கண்ணும் கண்ணீருமாயிருந்து, "இவ்வாழ்வார் ஒருவரே ! இவர்க்கோடுகிற பாவ வ்ருத்திக்கு தாமுகந்து பாசுரமிடுகையாவதுஎன் ? இற்றைக்கு விடாதே ? என்று விட்டான்.

உ. என்ன பரமசேதனனோ ! (*இவை திருவிருத்தம் 99 "ஈனச்சொல்" வ்யாக்யான அவதாரிகையில் காண்பவை.)

**எம்பெருமானாரும் எம்பாரும்:** எம்பாரைப்பற்றி இக்கட்டுரையில் முன்னமேயே குறிப்பிடப்பட்டுள்ளது. திருப்பதியிலிருந்து உடையவருடன் வரும்போது ஆசார்யரான திருமலை நம்பியின் பிரிவு ஸஹியாமல் இவர் உம்பு வெளுக்க, உடையவரும் "நம்பியை ஸேவித்து வாரும்" என்று அனுப்பினார். ஆனால் நம்பியோ, "விற்ற பசுவுக்குப் புல்லிடுவாரார்? பேயனைப் போகச் சொல்லுங்கோள்" என்று முகம் கொடாமலே திருப்பி அனுப்பிவிட்டார். எம்பாரும் அதுமுதல் உடையவரையே எல்லாமாகக் கொண்டு அவர் திருவடி நிழலாக அவரைப் பிரியாமல் வாழ்ந்து வந்தார்.

இப்படி இருக்கையில் க்ருஹஸ்தராயிருந்தும் மனைவியிடம் பற்றில்லாமல் இருந்தமையால் இவருடைய தாயார் "குலம் விளங்கும்படி க்ருஹஸ்த தர்மத்தைக் கடைப்பிடிக்கும்படி கோவிந்தனுக்கு நியமிக்கவேணும்" என்று உடையவரிடம் வேண்டினார். எம்பெருமானாரும் அப்படியே நியமிக்க, கோவிந்தர் ஒரு இரவு மனைவியுடன் இருந்து அந்தர்யாமி ப்ரகாசிக்கையில் வேறு எதற்கும் இடமில்லாமல் இருந்து காலையில் வந்து ஆசார்யனைத் தெண்டனிட்டு உள்ளது உள்ளபடி விண்ணப்பிக்க, அவருடைய வைராக்யத்தைப் போற்றி அப்போதே அவருக்கு ஸந்யாஸ ஆச்ரமம் ப்ரஸாதித்து எம்பெருமானார் என்ற தம் பெயரையும் இட்டார். ஆச்ரமத்தை மகிழ்ச்சியுடன் ஏற்ற கோவிந்தர் ஆசார்யன் பெயரை (பக்தர்களின் திருநாமமாயிருந்தது

என்று) ஏற்கத் தயங்க, அப்பெயரைச் சற்று குறுக்கி எம்பார் என்றாக்கிப் புதிய துறவிக்குச்
சூட்டினார். இந்தத்திருநாமத்தை எம்—பார் என்று பிரித்து, இவர் எம்பெருமானாரின் நிழலான
மையால் ஒதுங்கக் குளுர்த்தியானவர் என்ற பொருளைக்கொண்டு மத்விச்ரமஸ்தவி என்று போற்றி
னார் ஆழ்வான் குமாரரும் எம்பார் திருவடியுமான பராசரபட்டர்.

எம்பெருமானாரிடத்தில் மிகவும் ஈடுபட்டவர் எம்பார். எம்பெருமானார் வடிவழகை இவர்
ஒரு பாசுரத்தில் பாடியிருப்பதை இம்மலரில் வேற்றிடத்தில் காண்க. இப்பாசுர இறுதியில்
"இல்லையெனக்கெதிர்-இல்லையெனக்கெதிர்-இல்லையெனக்கெதிரே" என்று, முன்னம் திருமழி
சைப்பிரான், "என்மதிக்கு விண்ணெலாமுண்டோ விலை?" என்றது போல ஸாத்விகச் செருக்
குடன் பேசுகிறார். ஒரு ஸமயம் இவருடைய ஞானபக்தி வைராக்யங்களை மற்றய முதலிகள்
கொண்டாட, இவரும் அவர்களுடன் சேர்ந்து "ஒக்கும்! ஒக்கும்'" என்று தலை துலுக்கித்
தம்மைத் தாமே சிலாக்கித்தார். நைச்சியம் காட்டாது இப்படி நடந்துகொண்டது ஏன்? என்று
உடையவர் கேட்க, "மிகவும் கேடு கெட்ட நிலையிலிருந்த அடியேனை மிகவும் பரிச்ரமப்பட்டுத்
திருத்தி தேவரீருக்கு அணுக்கராய் இருத்தி ஸம்ஸாரத்திலிருந்து உயர்த்தி அருளிற்று.
அடியேனைக் கொண்டாடினால் அது ஸ்வாமி பெருமையைப் பேசுவதே யன்றி எவ்விதத்திலும்
அடியேனிடம் ஒட்டாது" என்று சொல்ல அதுகேட்டு உடையவரும் உகந்தார்.

ஒருநாள் எம்பெருமானார் எம்பெருமானுடைய பரத்வமே பிடித்து ஸௌலப்யத்தளவும்
செல்ல உபபாதித்தருள, அத்தைக்கேட்டு எம்பார் கண்ணும் கண்ணீருமாய் வித்தராயிருக்க,
அவரைப்பார்த்தருளி, "அவனுடைய ஸௌலப்யத்தைச் சொன்னவாறே நாட்டார் 'இத்தனை
எளியவனோ?' என்று கைவிட்டுப் போனார்கள் பாக்யஹானியாலே. 'அறப் பெரியவன் இப்படி
எளியனாவதே!' என்று நெருங்குகைக்குடலாயிற்று உமக்கொருவர்க்கும்" என்றருளிச் செய்தா
ராம். (நாச்சியார் திருமொழி 11-6 கைப்பொருள்கள் வ்யாக்யானத்தில் காணும் ஐதிக்யமிது.)

திருவரங்கத்தில் எம்பெருமான் திருமுன்பே உய்ந்தபிள்ளை என்ற அரையர் பெரியாழ்
வார் திருமொழி பாடி ஆடாநிற்க, 'மெச்சூது சங்கம்" (2-1-1) பாசுரத்தில் ஆப்பூச்சி காட்டு
கின்றான் என்ற இடத்தில், திருவோலக்கத்திலே அத்தூதன் என்று பெருமாளைக் காட்டுவது,
அப்பூச்சி என்று கண்ணையிறுத்துக்கொண்டு வருவதாய் அபிநயிக்க, உடையவர் பின்னே
ஸேவித்தெழுந்தருளியிருந்த எம்பார் திருக்கைகளைத் திருத்தோள்களோடு சேர்த்துக்காட்ட,
அவரும் அப்படியே அபநயித்துக் கொண்டுவர. 'இதுக்கடி ஏன்?' என்று விசாரித்துப் புரிந்து
பார்த்தருளி "ஸ்ரீகோவிந்தப் பெருமாள்! இருந்தீரோ?" என்றருளிச் செய்தார் என்று ப்ரஸித்
தம். (இவை மணவாளமாமுனிகள் வ்யாக்யான பங்க்திகள்.)

அப்பூச்சி காட்டுகையாவது கண்ணையிறுத்துவது முதலான சேஷ்டைகளால் சிறுபிள்ளை
யான கண்ணன் சிறுவர்களைப் பயமுறுத்துவது. இப்படி அரையர் அபிநயிக்க, எம்பார் பார்த்
தருளி, கண்ணன் கண்ணைக்காட்டி பயமுறுத்தவேண்டா; திருவாழி திருச்சங்கங்களைக் காட்டி
யிருப்பன் என்றதை அரையருக்கு ஸூசனையாகக் காட்டுவதற்காகத் தம் கைகளைத் தோள்க
ளுடன் சேரவைத்துக் காட்ட அரையரும் அப்படியே அபிநயித்தார். இப்படி அரையர் தம்
அபிநய முறையை மாற்றியதற்கு நிதானம் என்ன என்றாராய்ந்த உடையவர் எம்பார் காட்டி
யிருப்பர் என்று எண்ணித் திரும்பிப்பார்த்து, "எம்பாரே! நீரிங்கு இருக்கிறீரோ?" என்றாராம்.
இப்படி இன்னும் சில இடங்கள் உண்டு. எம்பாருடைய அருளிச்செயல் நிர்வாஹங்களும்
ரஸனையும் ஈடுபாடும் மிக உயர்ந்தவையாயிருக்கும்.

எம்பெருமானார் தமக்கடுத்தபடி தர்சந நிர்வாஹ ஆசார்யராக பராசரபட்டரை நியமித்
தருளினார். பட்டர் பிறந்த சில நாட்களில் குழந்தையைக் காணவேண்டுமென்று உடையவர்
ஆழ்வான் திருமாளிகைக்கு வந்தபோது எம்பார் குழந்தைகளை (பட்டரும் சீராமப்பிள்ளையும்

இரட்டைகள்) எடுத்துவந்து காட்டினர். எடுத்து வரும்போது ரக்ஷைக்காக த்வயாநுஸந்தானம் பண்ணிவந்ததை ஸர்வஜ்ஞரான உடையவர் அறிந்து "இவர்கள் நலனுர்கு நீரே கடவர்; இவர்களுக்கு நீரே ஆசார்யர்" என்று நியமித்தருளினர். பட்டருக்கு ஆசார்யரானமையால் ஓராண்வழி ஆசார்ய பரம்பரையில் எம்பெருமானுர்-எம்பார்-பட்டர் என்ற க்ரமம் வந்தது.

நம்பெருமாளிடத்து மட்டற்றப் பரிவு இவருக்கு முதலியாண்டானைப் போலவே உண்டு. ஒரு ஸமயம் பெருமாள் திருவிழாகண்டருளி தீர்த்தவாரி ஆகி ஆஸ்தானம் சேர்ந்தவாறே, ஆண்டானும் எம்பாரும் ஒருவரையொருவர் ஸந்திக்க நேர, "அஹங்கார மமகார தூஷித ராயிருப்பார் பத்துக்கோடிப்பேர் நடுவே அதிஸுகுமாரரான திருமேனியைக் கொண்டு பத்து நாள் எழுந்தருளி அபாயமின்றி ஆஸ்த்தானத்துக்கு புக்கருளப்பெற்றது கண்டதே!" என்று ஒருவரையொருவர் தெண்டனிட்டுத் தழுவிக்கொண்டதை நஞ்சீயர் தாமே நேரில் கண்டதாக அருளிச் செய்வர். அர்ச்சாமூர்த்தியை இங்ஙனம் பரிந்து நோக்கும் மனது நம்போல்வாருக்குப் புரிவதே அரிது. (திருவாய்மொழி ஈடு 6-4-10 விண்மிசைத்தாமமே புக என்ற இடத்து வ்யாக்யானம்).

**அருளாளப்பெருமாளம் பெருமானுர்.** இவர் எம்பெருமானுருக்கு சிஷ்யரான வரலாறு முன்னமேயே கூறப்பட்டுள்ளது. இவரிடம் ராமாநுஜருக்குத் தனி அன்பும் மதிப்புமுண்டு. இவருக்கென்று தனியாக மடம் கட்டி அதில் இவரைக் குடியேற்றிவைத்தார். தம்மிடம் ஆச்ரயிக்க வந்த அநந்தாழ்வான், எச்சான், தொண்டனுர் நம்பி என்பவர்களை இவரிடம் ஆச்ரயிக்கப் பண்ணினர். தம்மைப்போல் இவரும் சிஷ்யஸம்பத்துடன் விளங்கவேண்டும்; ஸ்ரீவைஷ்ணவர்கள் இவரை ஆசார்யராய்ப் போற்றவேண்டும் என்ற திருவுள்ளத்துடன் செய்த கார்யமிது. ஆனல் அருளாளப் பெருமாள் "குருவியின் கழுத்தில் பனங்காயைக் கட்டியதுபோல் உங்களை அடியேனிடம் காட்டியருளினர் உடையவர். எக்காலும் "எம்பெருமானுர் திருவடிகளே தஞ்சம் என்றிருங்கோள்" என்று அவர்களுக்கு நல்லுரை ஈந்தார்: இவர்களில் அநந்தாழ்வான் உடையவர் நியமனப்படி திருமலையில் நந்தவனம் ஏற்படுத்தி அப்பனுக்கு புஷ்பகைங்கர்யம் பண்ணியிருந்து அநந்தாண்பிள்ளை என்று புகழ்பெற்று உடையவரால் மிகவும் கொண்டாடப்பட்டவர். தேவப்பெருமாளுக்கும் திருக்கச்சிநம்பிக்கும் இருந்த நெருங்கிய தொடர்பு திருவேங்கடமுடையானுக்கும் அநந்தாழ்வானுக்குமிடையே இருந்தது. திருமலையில் உடையவர் அநுமதிகொண்டு அவருடைய அர்ச்சைத் திருமேனியை ப்ரதிஷ்டித்தவர் இவரே.

ஒரு ஸமயம் திருவரங்கத்துக்குப்புதிதாக வந்தவர் சிலர் "எம்பெருமானுர் மடமெங்கே?" என்று கேட்க, அங்குள்ளோர் "இங்கு இரண்டு எம்பெருமானுர் மடங்கள் உண்டு. ஒன்று அருளாளப் பெருமாளம் பெருமானுருடையது; மற்றது உடையவரது. எதைக் கேட்கிறீர்கள்?" என்று வினவ, அவர்களும் உடையவர் மடத்தை அறிந்து அங்கு சென்றனர். இந்நிகழ்ச்சியை அறிந்த அருளாளப் பெருமாள் "அனர்த்தப்பட்டோம்! உடையவரைப் பிரிந்து தனி இடத்தில் வாழ்ந்ததால் அன்றோ அவருக்கு எதிர்த்தட்டாய் நம்மைப் பேசும்படியாயிற்று?" என்று மிகவும் க்லேசித்து தமது மடத்தைத் தரைமட்டமாக இடித்துத்தள்ளி உடையவர் திருவடிகளில் சென்று படிந்து அடியேனை இங்குத்தைக்குப் பிரியாது ஆட்செய்யும்படி அநுக்ரஹிக்க வேண்டுமென்று வேண்டி உடையவருடைய மடத்திலேயே அவருக்கு அணுக்கராய்த் தங்கிவிட்டார். உடையவரும் இவரைத் தமது திருவாராதன எம்பெருமானை தேவப்பெருமாளுக்கு நித்யதிருவாராதனம் ஸமர்ப்பிக்கும்படி நியமித்து தம்முடனேயே இருக்கும்படி அநுக்ரஹித்தார்.

திருமலை அநந்தாழ்வானுடைய வம்சத்தினர் "அநந்தாண்பிள்ளை என்ற ப்ரஸித்த ஆசார்யபுருஷர்களாய் விளங்குவதுபோல, அருளாளப் பெருமாளுடைய மற்றொரு சிஷ்யபரம்பரையினரும் புகழ்பெற்ற ஆசார்ய புருஷர்களாய்த் திகழ்கின்றனர். இவர்கள் "விஞ்சிமூரார்" என்றழைக்கப்படும்வர்கள். அருளாளப் பெருமாருளம் பெருமானுருக்கு காஞ்சி திருப்பாடகத்திலும், ஸ்ரீவில்லிபுத்தூரிலும் அர்ச்சைத்திருமேனி ப்ரதிஷ்டை உள்ளது.

**வடுகநம்பியும் ராமாநுஜரும்.** வடுகநம்பி அல்லது ஆந்த்ரபூர்ணர் என்னும் ஆசார்யர் நம்மாழ்வாரிடம் மதுரகவிகள் போன்று தேவுமற்றறியேன் என்று உடையவரையே தம் தெய்வமாக மதித்துப் போந்தவர். இவர் அவதாரஸ்தலம், இளமைச் சரித்திரம் எதுவும் நமக்குத் தெரியக்கிடைக்கவில்லை. இவரைப்பற்றிய சில இன்சுவையான நிகழ்ச்சிகள் குருபரம்பரை நூல்களில் கண்டு அநுபவிக்கலாம்.

இவருக்குத்திருவாரதனம் உடையவருடைய ஸ்ரீபாதுகைகள். ஒரு ஸமயம் உடையவர் தம் திருவாராதனப் பெருமாளை கூட எழுந்தருளப் பண்ணிக்கொண்டு வரும்படி இவரை நியமித்து, இருவருமாக சென்றுகொண்டிருந்தனர். அப்போது தமது பாதுகையும் திருவாராதன எம்பெருமானும் ஸமமாக ஒரே மூட்டையில் இருக்கக்கண்ட உடையவர், இப்படிக்கட்டிவைத்த வடுகரைக் கோபிக்க, வடுகரும் "அடியேனுடைய எம்பெருமான் (திருவாரதனமான எதிராஜ ஸ்ரீபாதுகை) தேவரீருடைய எம்பெருமானுக்கு எந்தவிதத்தில் குறைந்தவர்?" என்று கேட்டாராம். உடையவர் இவருடைய ஆசார்ய பக்திக்கும் ஆசார்யன் எம்பெருமானிலும் உயர்ந்த தெய்வம் என்று கொண்டிருந்த அத்யவஸாயத்துக்கும்.(ஆழ்ந்தநம்பிக்கை) உகந்தாராம்.

ஒரு ஸமயம் உடையவர் அமுது செய்த ப்ரஸாதசேஷத்தை இவர் கேட்டுப் பெற்றுப் புசித்துக்கையைத் தம் முடியில் தடவிக்கொண்டார். இதைக்கண்ட உடையவர், "ப்ரஸாதப்பட்ட கையைக் கழுவ வேண்டாவோ?" என்று நியமிக்க, அப்படியே செய்தார். பின்பொருமுறை பெரிய பெருமாள் திருவோலக்கத்தில் ப்ரஸாத விநியோகத்தை ஸ்வீகரித்துப் பிறகு நீர்கொண்டு கையலம்பப்புக, உடையவர் தடுத்து, "பெருமாள் ப்ரஸாதம் ஸ்வீகரித்த பின்னர் கைஅலம்புவது ஸதாசாரமன்றோ?" என்று கடிந்தார். வடுகரும் அன்றைக்குத் தேவரீர் நியமித்ததை இன்றைக்கும் செய்தேன் (அன்றைக்குத் தம் தேவரான உடையவர் ப்ரஸாதம் ஸ்வீகரித்து, ஸ்வாமிநியமனபபடி கை அலம்பினர்) இதில் தவறு யாது?" என்ன, "உமக்குத் தோற்றோம்" என்று உடையவர் அருளிச் செய்தாராம்.

பின்னும் ஒருநாள் இவர் உடையவருக்குப் பாங்காகப் பால் காய்ச்சிக் கொண்டிருந்த போது நம்பெருமாள் திருவீதியில் எழுந்தருள, உடையவரும் "வடுகா! பெருமாளை ஸேவிக்க வாராய்!" என்றழைக்க, இவரும், உமது பெருமாளை ஸேவிக்க வந்தால் அடியேனுடைய பெருமாளுக்குக் காய்ச்சும் பாலமுது பொங்கிப் பாழாகும். அடியேன் வரவில்லை. க்ஷமித்தருள வேண்டும்" என்று திருமடைப்பள்ளியிலே இருந்து விட்டார்.

பெரியாழ்வார் திருமொழி 4-4-1 "நாவகாரியம்" பாசுரவ்யாக்யானத்தில் பங்க்திகள்: நாவகாரியம்-நாவுக்கு அகாரியம் (பொய்சொல்லுகை போல)" உடையவர் எழுந்தருளியிருக்கிற காலத்திலே வடுகநம்பியருகே ஒரு ஸ்ரீவைஷ்ணவர் எழுந்தருளியிருந்து "ஓம் நமோ நாராயணாய" என்று சொல்ல, இத்தைக்கேட்ட வடுகநம்பி 'நாவகாரியம்' என்று எழுந்திருந்து கடக்கப் போனார்" என்பவை. பெரிய திருமந்த்ரமும் அஸஹ்யமாம்படியன்றோ இவருடைய ஆசார்யபக்தியின் ஆழமிருப்பது! இவர் ஆண் டானையும் ஆழ்வானையும் "இருகரையர்" என்று பரிஹாஸம் தோற்றச் சொல்லுவராம். ஆசார்யன் ஒருகரை-எம்பெருமான் ஒருகரை. ஸம்ஸாரமாகிற வெள்ளத்தில் செல்லுமவனுக்கு ஒருகரைசேர வேணுமே.



பொய்யிலாத மணவாள மாமுனிகளும் ஆர்த்திப்ரபந்தத்தில்,

**உன்னை யொழிய ஒரு தெய்வம் மற்றறியா**
**மன்னுபுகழ்சேர் வடுகநம்பி-தன்னிலையை**
**என்தனக்கு நீதந்து எதிராசா! எநநாளும்**
**உன்தனக்கே யாட்கொள் உகநது.**

என்று எதிராஜனிடம் இவர் நிஷ்டை தமக்கும் அமைய வேண்டுமென வேண்டுகிறார்.

வடுகநம்பி உடையவர் வைபவத்தை "எதிராஜவைபவம்" என்ற ஸம்ஸ்க்ருத ச்லோக ரூபமாக சுருக்கமான க்ரந்தம் ஒன்றும், அஷ்டோத்தரம், மங்களாசாஸநம் முதலான உடையவர் விஷயமான ஸ்துதிகளும் பணித்துள்ளார்.

**உடையவருடைய அர்ச்சைத் திருமேனிகள்**

தம்முடைய திருவவதாரத்துக்கு முன்னமேயே அர்ச்சையாக ப்ரதிஷ்டிக்கப்பட்டு பூஜிக்கப் பெற்ற பெருமை ராமாநுஜர் ஒருவருக்கே உறியது. இவருடைய திருவவதாரத்தைக் காட்டிக் கொடுக்க ஆழ்வார் திருநகரியில் இரண்டு பவிஷ்யதாசார்ய விக்ரஹங்கள் தோன்றிய வரலாற்றை இம்மலரில் தனிக்கட்டுரையில் காண்க.

உடையவரின் விபவக் காலத்தில் முதல் முதல் அர்ச்சைத் திருமேனி அவரே ஏற்படுத்திக் கொடுத்தது திருநாராயணபுரத்தை விட்டு திருவரங்கம் வரும்போது அங்கு விட்டு வந்த ஐம்பத் திருவருக்காக. அத்திருமேனி **தமருகந்த திருமேனி**யாகும். இந்தத் திருமேனியில் தம் திவ்ய சக்தியைப் புகுத்தித் தம் சிஷ்யர்களுடன் இதன்மூலம் ஸம்பாஷித்துத் தாமே அவர்களுடன் இருப்பதாகக் காட்டியே திருவரங்கம் சென்றடைந்தார்.

முதலியாண்டான் திருக்குமாரர் கந்தாடையாண்டான் ஸ்வாமியை அநுவர்த்தித்து அவதாரஸ்தலமான ஸ்ரீபெரும்பூதூரில் ஒரு திருமேனியை ப்ரதிஷ்டைபண்ண அநுமதிகொண்டு ஸாமர்த்தியமுடைய ஒரு சிற்பியைக்கொண்டு விபவதிருக்கோலத்தை அப்படியே ப்ரதிபலிக்கும் படியாக ஒரு திருமேனியை நிர்மாணிக்க, உடையவர் உகந்து அத்திருமேனியைத் தழுவிக் கொண்டு திருப்ரதிஷ்டைக்கு ஒரு குருபுஷ்யத்தைத் தாமே நாளாக நியமிக்க, ஆண்டானும் அப்படியே ப்ரதிஷ்டை பண்ணுவிக்க அன்றையதினம் விபவத்திருமேனியில் வாட்டம் கண்டு திருக் கண்களில் நீர் பெருகிற்று என்று அறியலாகிறது. ஸௌந்தர்யமும் கம்பீரமும் வடிவெடுத்த இந்தத் திருமேனி எவ்வித கல்நெஞ்சையும் தன்பால் ஈர்க்கவல்லது. காஷாயசோபிகமநீய சிகாநிவேசம் என்ற ஆழ்வான் ஸ்ரீஸூக்தியான ச்லோகத்துக்கு விஷயம் இந்தத் திருமேனி. இதைத் **தாமுகந்த திருமேனி** என்பர் பெரியோர்.

எம்பெருமானுர் அவதார ஸமாப்தியாகித் தன்னுடைச்சோதிக்கு எழுந்தருளியபோது, அந்திமகாலத்தில் அவர் தங்கியிருந்த அரங்கனது வஸந்தமண்டபத்திலேயே திருப்பள்ளிப் படுத்தும்படி பெருமாள் நியமனமாயிற்று. ஞானியைத் திருமேனியோடு உகக்கும் என்கிற படியும் இப்படி நியமனம். கந்தாடையாண்டான் அங்கேயே ஸன்னிதிகட்டி மூலவரையும் உத்ஸவரையும் உடனே ப்ரதிஷ்டிப்பித்தார். இந்தத் திருமேனி **தானுன திருமேனி** என்று கொண்டாடப்படுகிறது.

திருமலையில் கோயில் கொண்டெழுந்தருளியிருக்கும் அர்ச்சைத்திருமேனியும் ஸ்வாமியின் விபவகாலத்திலேயே அவரநுமதிகொண்டு அநந்தாழ்வானல் ப்ரதிஷ்டை பண்ணப்பட்டது. இந்தத்திருமேனி **அநந்தாழ்வானுக்கான திருமேனி** என்று குலாவப்படும்.

பின்னர் பெருமாள்கோவில் முதலான பல திவ்யதேசங்களிலும் சிஷ்யர்கள் அர்ச்சைத் திருமேனிகளை ப்ரதிஷ்டிப்பித்து திருநக்ஷத்ர உத்ஸவங்களை நடத்திக் கொண்டாடத் தலைப்பட்டனர். இப்படி அர்ச்சாமூர்த்தியாய் நம்மிடையே இருந்துகொண்டு நம்மை வாழ்வித்தருளுகிறார் எம்பெருமானுர். ராமாநுஜோ விஜயதே யதிராஜராஜ:

எம்பெருமானுர் திருவடிகளே சரணம்.



ஸ்ரீ :

# ஸ்ரீ கூரேச விஜயம்

ஸ்ரீமதுபயவே. மஹாவித்வான் ப்ரதிவாதிபயங்கரம் அண்ணங்கராசாரியர் ஸ்வாமி



அவ்யபதேச்யனான சோழராஜன் "சிவாத் பரதரம் நாஸதி" என்று ஸ்ரீவைஷ்ணவர் பலரை ஓலையில் ஒப்பமிடும்படி நிர்ப்பந்தித்து, நாலூரானுடைய தூண்டுதல்பேரில் ராமாநுஜரை ஸபைக்கழைக்க, ஸ்வாமிக்குத் தீங்கேதும் நேராமலிருக்க கூரத்தாழ்வான் ராமாநுஜவேஷதாரியாய் பெரியநம்பியுடன் சோழன் ஸபைக்குச் சென்று ஸ்ரீமந்நாராயணனுடைய பரத்வத்தை ப்ரமாண யுக்திகள் கொண்டு உபன்யஸித்தருளினார். பிற்காலத்தில் ஆழ்வான் சோழஸபையில் செய்தருளிய வாதங்கள் ச்லோகரூபமான ஒருக்ரந்தமாகத் தொகுக்கப்பட்டது. இதைச் செய்தது யார் என்று திட்டமாகத் தெரியவில்லை. இந்த க்ரந்தம் ஸ்ரீபெரும்பூதூர் உடையவருடைய சித்திரைத் திருவாதிரைத் திருவிழாவில் ஆறுவது திருநாளன்று (வெள்ளை சாத்துப்படி) ஸ்வாமி திருமுன்பே ஸேவிக்கப்படுகிறது.

ஸ்ரீ உ.வே. மஹாவித்வான் காஞ்சீ பர. ப. அண்ணங்கராசாரியர்ஸாமி இந்த க்ரந்தத்தின் ஸாரமான வாதங்களைத் தமிழில் ஸ்ரீராமாநுஜன் 292ல் வெளியிட்டதை இங்கு வெளியிடலாகிறது.

**முன்னுரை:** ச்ரிய:பதியாய் அவாப்தஸமஸ்தகாமனாய் ஸ்ரீவைகுண்ட நிகேதனனாய் *பொங்கோதஞ்சூழ்ந்த புவனியும் விண்ணுலகும் அங்காதுஞ்சோராமே ஆள்கின்ற வெம்பெருமான்* என்கிறபடியே உபயவிபூதிநாதனான ஸர்வேச்வரன், "ஸர்வே வேத யத்பதமாமநந்தி" என்றும், "வேதைச்ச ஸர்வை ரஹமேவ வேத்ய:" என்றும் சொல்லுகிறபடியே ஸர்வவேதப்ரதிபாத்யனாய் தேவதாஸார்வபௌமனாயெழுந்தருளியிருக்கிறபடியை ஸ்ரீ பராங்குச பரகால யதிவராதிகளான நம் ஆழ்வாராசார்யர்கள் அமுதிலுமாற்றவினிய திவ்யஸூக்திகளாலே ராஜபாட்டையாக்கி தாங்களநுபவித்தும் பிறர்க்கு உபதேசித்தும் போந்த நல்லடிக்காலத்திலே,

"யதா யதா ஹி தர்மஸ்ய க்லாநிர்பவதி பாரத, அப்ப்யுத்தாந மதர்மஸ்ய" என்று கீதாசார்யனருளிச்செய்த கட்டளையிலே தர்மக்லாநி பிறக்கும்வழியிலே இந்த பரதேவதாபாரம்யத்தில் சில பாக்யஹீநர்களுக்கு விப்ரதிபத்தியுண்டாகி "சிவாத்பரதரம் நாஸ்தி" என்றெழுத்திட்டு அதற்குப் பல வைதிகோத்தமர்களின் இசைவைப் பெறவேண்டி,

செங்கோலுடைய திருவரங்கச் செல்வனாருடைய கைங்கர்ய ஸாம்ராஜ்ய துரந்தரராக எழுந்தருளியிருந்து உபயவேதாந்த ப்ரவர்த்தநப்ரவீணராக விளங்கிக் கொண்டிருந்த நம் ஸ்வாமி எம்பெருமானார் ஸந்நிதியிலே ஸந்தேசம் வரவிட்டவளவிலே, *மொழியைக் கடக்கும் பெரும் புகழான் வஞ்ச முக்குறும்பாங்குழியைக் கடக்கும் நம் கூரத்தாழ்வான் பெரியநம்பிகளுடனே மிக்க பெருஞ்சபை நடுவேயெழுந்தருளி, "சிவாத் பரதரம் நாஸ்தி" என்றதற்கு "த்ரோணமஸ்தி தத: பரம்" என்று கூசாதே கையெழுத்திட்டதுமன்றியே பரதேவதாபாரம்யத்தை பஹுமுகமாக உபந்யஸித்தருளி ஸ்ரீமந்நாராயணனே பராத்பரனென்னுமிடத்தை உபபாதித்தருளின படியை கூரேசவிஜயமென்னும் ப்ரபந்தமுகத்தாலே நம்முன்னோர்கள் முதலித்தருளினார்கள். அதில் [illegible] ஸித்தாந்தஸ்தாபநக்ரமங்கள் எங்ஙனேயென்னில்—

**பகவந்நாமத்தின் ப்ராதான்யமும் பெருமையும்:** ஸ்நாநாசமந ஸங்கல்பாதிகளில் கோவிந் தாதி திருநாமங்களே சொல்லப்படுகையாலும், வேதமோதுகையில் ஹரிபதத்தையே தொடங்குவ தனாலும், "பர்கோ தேவஸ்ய தீமஹி" என்று ஸவித்ருமண்டல மத்த்யவர்த்தியான நாராயணனு டைய திவ்யதேஜஸ்ஸே சிந்திக்கப்படுவதாலும், ப்ரணவார்த்தம் ஸ்ரீமந் நாராயணனே யாகை யாலும், பரமஸத்வஸமாச்ரயனான இப்பெருமானுக்கே ரக்ஷண க்ரியை அஸாதாரணமாகை யாலும், இவரே ஸர்வாதிகர். "ஸர்வதேவ நமஸ்கார: கேசவம் ப்ரதி கச்சதி" என்கையாலும், 'ப்ராயச்சித்தாந்யசேஷாணி" என்று தொடங்கி "க்ருஷ்ணாநுஸ்மரணம் பரம்" என்கையாலும் ஸகலவைதிக கர்மங்களுக்கும் ஸாத்குண்ய ப்ரதனானவிவனே பரதேவதை. ருத்ராஹாதியில் "அப உபஸ்ப்ருச்ய" என்று அசுத்திபரிஹாரார்த்தமாக அபாமுபஸ்பர்சனம் விதிக்கையாலும், அந்த ருத்ரன் தானும் *குறைகொண்டு நான்முகன் குண்டிகை நீர்ப்பெய்து—கறைகொண்ட கண்டத்தான் சென்னிமேலறைக் கழுவினனென்கிறபடியே ஸ்ரீபாத தீர்த்தத்தை வஹித்துப் புனிதனாகையாலும் ஸ்ரீமந்நாராயணனே பரதேவதை.

**ராமேச்வர விஷயம்:** சக்ரவர்த்தி திருமகனார் சிவபூஜை செய்தாரென்னுமிடம் ஸ்ரீராமா யணத்தில் சொல்லப்படாமையால் பொய்யேயாமித்தனை. தாமஸபுராணங்களில் சொல்லிற்று அநாதரணீயம். காசியில் ருத்ரன் ஸ்ரீராம நாமத்தை தாரகமந்த்ரமாகக்கொண்டு ஜபித்து உய்ந்தது ஸுப்ரஸித்தம். ராமேச்வரமென்பதை திருவடியான ஹநுமானுடைய ரோமேச்வர மென்பார்கள். அன்றியே ஸேதுரக்ஷார்த்தமாக தனது சேவகர்களில் ஒருவனை ருத்ரனை நிறுத்தி நியமித்தருளினனென்னவும் குறையில்லை. ப்ரஹ்மஹத்யாசாபத்தைப் போக்கி உஜ்ஜீ விப்பித்தருளினவனே பராத்பரன். *பிண்டியார் மண்டையேந்திப் பிறர்மனை திரிதந்துண்ணு முண்டியான் சாபந்தீர்த்தவொருவனே தைவமாகவுரியவன்.

வேதத்தில் நமகசமகங்கள் சிவபரமென்கை அஸம்பத்தம். அக்னிபரமென்றே பாஷ்யம் செய்தார்கள். "ஸர்வே வேதா யத்பதமாமநந்தி" என்றும், "வேதைச்ச ஸர்வைரஹமேவ வேத்ய:" என்றுமுள்ள ப்ரமாண கதிக்குச் சேராத வார்த்தைகள் கடலோசையோடொக்கும்.

**கண்ணன் கைலாசயாத்திரை சென்ற விஷயம்:** கைலாஸயாத்ரையில் கண்ணனுக்கு சிவன் வரமளித்தானென்கை ஒரு நடநமாத்ரம். இதை ஆழ்வார், *கள்வா வெம்மையுமேழுலகும் நின்னுள்ளே தோற்றிய இறைவவென்று, வெள்ளேறன் நான்முகனிந்திரன் வானவர் புள்ளூர்தி கழல் பணிந்தேத்துவரே* என்கிற பாசுரத்தினால் அநுஸந்தித்தருளினார். "க இதி ப்ரஹ்மணோ நாம ஈசோஹம் ஸர்வதேஹிநாம், ஆவாம் தவாங்கே ஸம்பூதௌ தஸ்மாத் கேசவநாமவாந்." என்று கேசவநாமமளித்த சிவனே இதில் ஸாக்ஷி.

வராஹபுராணத்தில், "மர்த்யோ பூத்வா பவாநேவம் மாமாராதய கேசவ, மாம் பஜஸ்வ ச தேவேச வரம் மத்தோ க்ருஹாண ச, யேநாஹம் ஸர்வபூதாநாம் பூஜ்யாத் பூஜ்யதரோபவம்." "தேவகார்யாவதாரேஷு மநுஷ்யத்வமுபேயிவான், த்வாமேவாராதயிஷ்யாமி மம த்வம் வரதோ பவ." என்கிற வாப்ரார்த்தனையையும் வரப்ரதாநத்தையும் மெய்ப்பிக்கவேண்டிக் கண்ணன் சிவனை வணங்கிற்று. அவதாரத்தில் மநுஷ்யபாவனையின் மெய்ப்பாட்டுக்குச்சேர தேவதாபித்ருகுருப்ரப்ருதிகளான மனிசர்களையும் வணங்குவதில் வருவதொரு ஹாநியில்லை யிறே. சிவனுடைய அபராவதாரமான அச்வத்தாமாவின் அபாண்டவாஸ்த்ரத்தினால் மாண்ட பரீக்ஷித்தைத் தன் திருவடிஸ்பர்சத்தினால் பிழைப்பூட்டிய பெருமானே பெருமானவன்.

**திருவாழியாழ்வான் நித்யம்—ஒரு தேவதையருளால் பெற்றதன்று:** ஆயிரம் கமலங்களைக் கொண்டு சிவனை யர்ச்சித்து பகவான் திருவாழியாழ்வானைப் பெற்றதாகச் சொல்லுமது தானும் கல்பனை. சக்கரம் நித்யமானதென்னுமிடம் ருக் யஜுஸ் ஸாம வேதங்களில் விசதம். பாஞ்ச ஜந்யத்தின் உத்பத்திபோல் சக்ரத்தின் உத்பத்தியும் அவதார விஷயம். சூலாயுதம் பெறுவதற் காக சிவன் ஆயிரம் செண்பகமலர்களைக்கொண்டு ஸ்ரீமந்நாராயணனை ஆராதித்தனனென்றும் அதில் குறைபுற்ற புஷ்பத்திற்காகத் தன் மூக்கையரிந்து ஸமர்ப்பித்து நிறைத்தனனென்றும்

பகவச்சாஸ்த்ரங்களிலே சொல்லிவைத்தது. சக்கரத்தில் நின்றும் சூலமுண்டாயிற்றென்றது அகஸ்த்ய ஸம்ஹிதை. சூலத்தை யமன் செய்தானென்றும் சொல்லிவைத்தது. சிவபுரியான காசி சக்கரப் படையினால் எரிந்தொழிந்தது.

**த்ரிபுறமெறித்தது:** சிவன் த்ரிபுரதஹநம் செய்தானென்பதும் பகவச்சக்தி விசேஷ ப்ரயுக்த மென்ற வேதத்திலும் மஹாபாரதத்திலும் வ்யக்தம். வேதத்திலே, "தேஷாமஸுராணாம் திஸ்ர புர ஆஸந்.........ருத்ரோ வை க்ரூர: ஸோஸ்யத்விதி" என்றவிடத்திலே "விஷ்ணும் தேஜநம்" என்று ஓதிற்று. மஹாபாரதத்திலே, "விஷ்ணுராத்மா பகவதோ பவஸ்யாமிததேஜஸ:, தஸ்மாத் தனுர்ஜ்யாஸம்ஸ்பர்சம் ஸ விஷேஹே மஹேச்வர:, என்று ஸ்பஷ்டமாகச் சொல்லி வைத்தது. தைத்திரீயாரண்யகத்திலே, தஸ்யேந்த்ரோ வம்ரிரூபேண தனுர்ஜ்யாமசினத் ஸ்வயம்...சிர உத்பிபேஷ" என்று சிவன் தலையறுப்புண்டானென்றது.

**புருஷோத்தமன் நாராயணன்:** புருஷோத்தமனென்றும் புராணபுருஷோத்தமனென்றும் ப்ரஸித்தனான ஸ்ரீமந்நாராயணன் மோஹிநீவேஷம் பூண்டது நாடகங்களில் பெண்வேடமணியும் க்ரமத்திலே சேரும். கீதாசார்யன் "திவ்யம் ததாமி தே சக்ஷு: பச்ய மே யோகமைச்வரம்" என்று அர்ஜுனனுக்கு திவ்யசக்ஷுஸ்ஸைக் கொடுத்துக் காண்பித்தருளின விச்வரூபத்திலே பல க்ஷுத்ர க்ரிமி கீடங்களோபாதி சிவனும் ஒரு வ்யக்தியாக நின்றொழிந்தமை அவிசால்யம். சிவனை உபாஸிப்பவர்களே உலகில் அதிகமாகக் காணப்படுகிறார்களென்பதும் வெள்ளி தங்கம் முதலியவை மிகவும் வருந்தியும் காணவரிதாயிருக்க, மண்ணும் கல்லும் எங்கும் நிரம்பியுள்ளன என்னுமாபோலேயாமத்தனை.

**வ்யாஸர் திருவாக்கு :** வேதவ்யாஸர் "உத்ருத்ய புஜமுச்யதே" என்று கைதூக்கிச்சொன்னது "வேதாத் சாஸ்த்ரம் பரம் நாஸ்தி நதைவம் கேசவாத் பரம்" என்றிறே. வேதங்களில் பலபுடைகளிலே ருத்ரன் "அஹமேவ பசூநாமதிபதிரஸாநி" என்றாப்போலே வரம் வேண்டினாப் போலே ஓரிடத்திலும் ஒருவர் பக்கலிலும் விஷ்ணு வரம் வேண்டினதாக ஓதிற்றில்லை. மாறாக "அக்னிரவமோ தேவதாநாம் விஷ்ணு: பரம:" என்று விஷ்ணுவின் பாரம்யத்தை முக்தகண்டமாகவும் சொல்லிற்று.

"கேநோபாயேந லகுநா விஷ்ணோர்நாமஸஹஸ்ரகம், பட்யதே" என்று கேட்ட பார்வதிக்கு "ஸ்ரீராமராமராமேதி ரமே ராமே மநோரமே, ஸஹஸ்ரநாம தத் துல்யம் ராமநாம வராநநே." என்று நிர்லஜ்ஜமாக பரமார்த்தமுரைத்தர் ருத்ரன் பக்கலிலே பாரம்யசங்கைக்கு அவகாசலேசமுமில்லை.

**காரணத்வம் பேசும் ச்ருதிகள் :** கிம் பஹுநா? "ஏகோ ஹ வை நாராயண ஆஸீந் ந ப்ரஹ்மா நேசாந:" என்று உபநிஷத்தில் ஸந்தேஹவிபர்யயங்களுக்கு இடமின்றியே சொல்லி வைத்தது. அவற்றின் ஸாராம்சங்களைத் திரட்டி "காணிலுமுருப்பொலார் செவிக்கினாத கீர்த்தியார், பேணிலும் வரந்தரமிடுக்கிலாத தேவர்"என்றும், "திருவில்லாத் தேவரைத் தேறேல்மின் தேவு" என்றும், "முண்டனீறன் மக்கள் வெப்புமோடியங்கியோடிடக் கண்டு நாணி வாணனுக் கிரங்கினானெம்மாயனே" என்றும், "சிலையினாலிலங்கை செற்ற தேவனே தேவனாவான்" என்றும் நம் ஆழ்வார்கள் அப்ரத்ருஷ்யமாக அறுதியிட்டருளினார்கள்.

இவ்வரிய பெரிய அர்த்த விசேஷங்களையெல்லாம் நம் ஸ்வாமி எம்பெருமானாருடைய திருவடி நிழலேயிருந்து கேட்டருளின நம் கூரத்தாழ்வான் தாழாதே சார்ங்கமுதைத்த சரமழை போலவும் கடல்வாய்ச்சென்று மேகங்கவிழ்ந்திறங்கிக் கதுவாய்ப்படநீர்முகந்தேறி யெங்கும் குடவாய்ப் படநின்று மழைபொழிந்தாப்போலவும் ராஜசபையிலே உபந்யஸித்தருளி தர்சனோத்தாரகராக எழுந்தருளியிருந்தபடி.

ஆழ்வான் திருவடிகளே சரணம்

oooooooooooooooooooooooooooooooooooooo oooooooooooooooooooooooooooooooooooooo

# ஸ்ரீவைஷ்ணவ வண்ணாத்தான்

எம்பெருமானார் திருவரங்கத்தில் தர்சனம் நிர்வஹித்தெழுந்தருளியிருந்த காலத்தில் நம்பெருமாளிடம் மிகவும் ப்ரதிபத்தியுள்ள ஒரு வண்ணான் பெருமாளுடைய திருப்பரிவட்டங்களைப் பரிவுடன் அழகாகத்திருத்தி (ஸலவை பண்ணி) ஸமர்ப்பிக்கும் கைங்கர்யத்தைச் செய்து வந்தான். இவன் கௌரவத்துடன் ஸ்ரீவைஷ்ணவ வண்ணாத்தான் என்று நம் ஆசார்யர்களால் அழைக்கப்படுகிறான். இவன் கைங்கர்யத்தில் எம்பெருமானாருக்கு பெருமுவப்பு இருந்தது. *ஒரு நாள் (இந்த) ஸ்ரீ வைஷ்ணவ வண்ணாத்தான் திருப்பரிவட்டங்களை அழகிதாக வாட்டி எம்பெருமானார்க்குக் கொண்டுவந்து காட்ட, போரத்ருப்தராய் இவனையும் கூட்டிக்கொண்டு பெருமாள் பாடேபுக்கு, "நாயந்தே! இவன் திருவரைக்கீடாம்படி இவற்றைத் தொட்டபடி பார்த்தருள வேணும்" என்று காட்ட, (பெருமாளும்) கண்டு, போரவுகந்தருளி, எம்பெருமானாரை அருள் பாடிட்டு, "இவனுக்காக கம்ஸனுடைய ஈரங்கொல்லி நம்திறத்தில் பண்ணின குற்றம் பொறுத்தோம்" என்று திருவுள்ளமானார். (*இது திருவாய்மொழி 4-3-5, 5-10-6 இருபாசுரங்களின் ஈட்டு வ்யாக்யானத்தில் காணும் ஐதிஹ்யம்). கம்ஸனுடைய ஈரங்கொல்லி என்பது அவனிடம் ராஜ சேவை பண்ணின வண்ணானை. விற்பெரு விழவு என்று கண்ணனும் பலராமனும் அக்ரூருடன் வந்தபோது இந்தவண்ணான் அவர்களுக்குத்தகுந்த உடைகளைக் கொடுத்து ஸத்கரிக்காமல் பருஷமாக வார்த்தை சொன்னான். அவனுடைய குற்றத்தை அந்தஜாதியில் பிறந்து கைங்கர்யபரனாயிருந்தவனுக்காகப் பொறுத்தார் பெருமாள். ச்ரத்தையுடன் தம் தொழிலைப் புரிந்தவர்களிடம் உடையவர் பரிந்து, ஊக்குவித்தது குறிக்கத்தக்கது.

துலுக்கர்களால் ஏற்பட்ட கலாபத்தின் விளைவாக நம்பெருமாள் பல பல ஆண்டுகள் திருவரங்கத்தைவிட்டு வெளியே எழுந்தருளி, வெகுகாலம் கழித்து செஞ்சியிலிருந்து ஒரு அரசனால் திருவரங்கத்துக்குக் கொண்டுவந்து சேர்க்கப்பட்ட வரலாறு கோயிலொழுகு என்ற நூலில் காணலாம். அப்போது, திரும்பிவந்த திவ்யமங்களவிக்ரஹம் நம்பெருமாள்தானா என்ற ஸந்தேஹம் பிறக்க, நிச்சயிக்கத்தகுந்த பெரியோர் யாருமில்லாமையால், அப்படி நிச்சயிக்கக்கூடிய வ்ருத்தர்களைத்தேட, மிகவும் வயதான அப்போதைய ஸ்ரீவைஷ்ணவ வண்ணாத்தான் இரண்டு கண்ணும் துளியும் பார்க்கும் சக்திஅற்றவனாக இருந்தவன், "நம்பெருமாளின் ஈரவாடை தீர்த்தம் அடிக்கடி உட்கொண்டபடியால் மறக்கப் போகாது; இவருக்குத் திருமஞ்சனம் பண்ணி ஈரவாடை தீர்த்தம் ஸாதியுங்கோள்" என்ன, ஸ்தலத்தாரும் அப்படியே செய்ய, அவனும் உட்கொண்டு, இவர் ஸாக்ஷாத் நம்பெருமாளேதான், வேறல்ல என்று நிச்சயமாகக்கூற, பெருமாளை அரங்கமாளிகையில் ப்ரதிஷ்டை கண்டருளப் பண்ணினர். இப்படிப்பரிவுள்ள ஒரு வண்ணாத்தானால் திருவரங்கச் செல்வன் நமக்கு (பின்புள்ளாருக்கு) நிதியாகக் காப்பாற்றப்பட்டான். (இது உடையவர் காலத்துக்கு மிகவும் பிற்பட்ட காலத்திய சரித்திரம்.

எம்பெருமானார் ஒருஸமயம் நம்மாழ்வாரைத் திருவடிதொழவென்று திருக்குருகூரான திருநகரிக்கு எழுந்தருளி அநுஷ்டானத்துக்காக தாமிரபரணிக்கு வர, அங்கு தன் தொழிலைச் செய்துகொண்டிருந்த வண்ணாத்தான் ஒருவன் ஸ்வாமியை தெண்டனிட்டு வணங்கி, "பராங்குச நம்பீ! காரிமாறு! குருகூர் நம்பி! சடகோபா! வகுளாபரணா!" எல்லாரும் வந்து ஸ்வாமியைக் கும்பிடுங்கோள்" என்று தன் புதல்வர்களை ஒவ்வொருவராகப் பெயரிட்டழைத்ததைக் கேட்டவர், "ஸம்ஸாரியாய் அடியேனும் பிள்ளைகளைப்பெற்று ஆழ்வாரின் இனிய பெயர்களையிட்டு வாய்நிரம்பக் கூப்பிட்டு அநுபவிக்கக் கொடுத்து வைக்காமல் இப்படிக் காவியுடுத்தி விட்டேனே!" என்று குறைவாளராக அருளிச் செய்தாராம்.

oooooooooooooooooooooooooooooooooooooo oooooooooooooooooooooooooooooooooooooo



‘‘ மாமேகம் சரணம் வ்ரஜ ’’ என்றருளிச் செய்த ஸ்ரீ பார்த்தஸாரதி எம்பெருமான், திருமஞ்சன அவஸரம். (இடது கோடியில்) திருமஞ்சனக்கட்டியம் ஸேவிப்பவர் நமது ஸபையின் ஸ்தர்பகரா்ன ஸ்ரீ உ. வே. காவல்கழனி அனந்தாசாரியார் ஸ்வாமி.

✲✲✲✲✲✲✲✲✲✲✲✲✲✲✲✲✲✲✲✲✲✲✲✲✲✲✲✲✲✲✲✲✲✲✲✲✲✲✲✲✲✲✲✲

ஸ்ரீ:

# "அஹமேவ பரம் தத்வம்"

ஸ்ரீ உ. வே. காவல்கழனி விஞ்சிமூர் அநந்தாசார்ய ஸ்வாமி

✲✲✲✲✲✲✲✲✲✲✲✲✲✲✲✲✲✲✲✲✲✲✲✲✲✲✲✲✲✲✲✲✲✲✲✲✲✲✲✲✲✲✲✲

அத்திகிரி அருளாளப்பெருமாள் இளையாழ்வாருக்குத் திருக்கச்சிநம்பிகள் மூலம் அருளிச் செய்த ப்ரஸித்தமான ஆறு வார்த்தைகளுள் "அஹமேவ பரம் தத்வம்" என்பது முதல் வார்த்தையாகும். தர்மி ஐக்யத்தால் "ஸ்ரீமந் நாராயணனே முழுமுதற்கடவுள்" என்பது இதன் பொருளாகும். ஸ்ரீ பார்த்தஸாரதியெம்பெருமான் அருளிச்செய்த "மாமேகம் சரணம் வ்ரஜ" என்ற கீதோபநிஷதிலும் இங்கு போல 'ஏவ', 'ஏகம்' போன்ற அவதாரணத்தினால் தன்னையே மேலான தெய்வமாகப் பற்றவேண்டுமென்று வலியுறுத்தியருளிச்செய்தான். "மாதவன் பேர் சொல்லுவதே ஓத்தின் சுருக்கு" என்கிறபடியே, ஸ்ரீமந்நாராயணனே ச்ருதிப்ரமாண ஸித்தமான பரம்பொருள்; "உளன் சுடர் மிகு சுருதியுள்" என்றருளிச்செய்தார் ஆழ்வார்.

"சிவாத்பரதரம் நாஸ்தி" என்று சோழராஜன் ஸ்ரீவைஷ்ணவர்களை எழுத்திட்டுக்கொடுக்கும்படி நிர்ப்பந்தித்தபோது அவனுடைய ஸபைக்கு ராமாநுஜருடைய வேஷத்தையணிந்து கொண்டுசென்ற கூரத்தாழ்வான், நாராயணபரத்வ ஸூசகமாக "த்ரோண மஸ்தி தத: பரம்" என்று எழுதி ஒப்பமிட்டார். சிவம் என்ற அளவை விட த்ரோணம் என்ற அளவு பெரிது என்று ஆழ்வான் எழுதிவைத்தார். ப்ரமாணங்கள், அதற்குகந்த யுக்திகள் இவைகொண்டு நாராயண பரத்வத்தை வெகுவாக எடுத்துச் சொல்லியும் (கூரேசவிஜயத்தில் இவை அநுபவிக்கப்பட்டன) பாபிகள் நிறைந்த அந்த ஸபையில் கார்யகரமாகாமல் ஆழ்வான் தன்கண்களையே இழக்கும்படியும், துணை சென்றிருந்த பெரியநம்பி தம்முயிரையே இழக்கும்படியும் ஆயிற்று.

நம்முடைய எம்பெருமானார் தரிசனத்தில் ஒத்துக்கொள்ளப்பட்ட பரதெய்வம் ஸ்ரீமந்நாராயணன் ஒருவனே. அவனுக்கு ஒத்த அல்லது மேம்பட்ட தெய்வமேதும் இல்லை. "நாட்டினான் தெய்வங்களாக அத்தெய்வ நாயகன்தானே" என்கிறபடியே எம்பெருமான் அருளால் சில தேவதைகள் தெய்வங்களாகப் போற்றப்படுகின்றன. இவற்றுள் சிவனும் பிரமனும் ப்ரதானர்கள். நான்முகனை (பிரமனை) நாராயணன் படைத்தான். நான்முகனும் தான்முகமாய்ச் சங்கரனை (சிவனை)த் தான் படைத்தான். இதனால் நாராயணனே ஆதிகாரணனான பரம்பொருள் என்பது குன்றிலிட்ட விளக்காய்த் தெரியும்.

இவ்விருவருக்கு மிடையே இவர்களுடன் ஸாம்யம் தோற்ற ஒரு அவதாரமெடுத்தான் எம்பெருமான். இதை ப்ரதமாவதாரம் விஷ்ணு என்பர். தன் படைப்புகளானவர்களுடன் ஸாம்யம் தோற்ற நின்றதனால் இவன் பெருமைக்குக் கொத்தை எதுவும் வராது. பெரியவன் எப்போதும் எந்த நிலையிலும் பெரியவனே. நம்மாழ்வார் திருவாய்மொழியில் இந்த மூவரும் ஸமம் போல் தோன்றும்படி பாசுரம் பாடுவதைப் பல இடங்களில் காணலாம். "கங்குலும் பகலும்" திருவாய்மொழியில் (7-2-10) "மூவுலகாளியே! என்னும்; கடிகமழ்கொன்றைச்சடையனே! என்னும்;

நான்முகக் கடவுளே! என்னும்; வடிவுடைவானோர்தலைவனே! என்னும்; வண் திருவரங்கனே! என்னும்" என்று பாராங்குச நாயகியின்படியைத் தாய்ப்பேச்சால் வெளியிடுகிறார். கடைசித் திருவாய் மொழியிலும் (10-10-1) "முனியே! நான்முகனே! முக்கண்ணப்பா!" என்று ஸாம்யம் தோற்ற விளிக்கிறார். இதனால் ஸாம்யமே ஆழ்வார் திருவுள்ளம் என்று பொருள்கொள்ளக் கூடாது. ஆழ்வார் திருவுள்ளம் ஸந்தேஹமெதற்குமிடமில்லாமல் "ஒன்றும் தேவும்" திருவாய் மொழியில் (4-10) விளங்குகிறது. "நின்ற ஆதிப்பிரான் நிற்க மற்றைத் தெய்வம் நாடுதிரே!" என்றும், "சிரங்களால் அமரர் வணங்கும் திருக்குருகூரதனுள் பரன் திறமன்றிப் பல்லுலகீர் தெய்வம் மற்றில்லை பேசுமினே" என்றும் பேசியுள்ளதைக் காண்க. முதல் திருவாய் மொழியில் ஆழ்வாருடைய ஸாரமான உபதேசம், எம்பெருமான் தன்னையொழிந்த எல்லாப் பொருள்களி லும் (சேதனம், அசேதனம் எல்லாவற்றிலும்) புகுந்து அவற்றை உள்ளனவாகச் செய்கிறான் என்பதே.

மேலே காட்டின "மூவுலகாளியே" என்ற இடத்துக்கு ஈட்டில் எம்பெருமானார் நிர்வாஹம் என்று காட்டப்பட்ட ஸ்ரீஸூக்தி: "த்ரைலோக்யத்துக்கும் கடவனான இந்த்ரனுக்கு அந்தர்யா மியாய் நின்று அவனுடைய அதிகாரத்தை நிர்வஹிக்கிறவனே! என்றும் அவர்களோடு இவ்வரு குள்ளாரோடு வாசியற எல்லார்க்கும் நிர்வாஹகனாயிருக்கிற சதுர்முகனாகிற தேவதைக்கு அந்தர் யாமியானவனே! என்றும்" என்பது. இங்கு ஆழ்வார் திருவுள்ளமாக ஈடு காட்டும் அர்த்தம்: "வடிவுடை வானோர் தலைவனே என்றத்தோடு, நான்முகக்கடவுளே என்றத்தோடு வாசியற்றிருக் கிறதாயிற்று இவர்க்கு; மயர்வறமதிநல மருளப்பெறுகையாலே ஸர்வநிர்வாஹகனென்று உணர்ந்திருக்குமவராயிற்று இவர்" என்று. ச்ருதியும் "ஸப்ரஹ்மா ஸசிவஸ் ஸேந்த்ரஸ் ஸோக்ஷர; பரமஸ்வராட்" என்று ஓதிற்று காண்க. (அவனே அவனும் அவனும் அவனும் அவனே மற்றெல்லாமும்—திருவாய்மொழி 9-3-2). ஒப்பாரும் மிக்காருமில்லாத மாமாயனான பரம புருஷன் ஸ்ரீமந்நாராயணன். இவனே பரம்பொருள். இவனே ஜகத்துக்கெல்லாம் முழுமுதற் காரணம்; இவனே ஸகல ஜகத்தையும் தரித்து ரக்ஷிப்பவன்; இவனே மஹாப்ரளய காலத்தில் ஜகத்தை அழித்து ஸூக்ஷ்மமாகத் தன்னுள்ளே கொண்டுத் தனி நிற்பவன். தன்னையொழிந்த எல்லாவற்றையும் ஆணையிட்டு நடத்தும் ஸ்வாமி, இதைவிட மேற்பட்ட பலன் கிடையாது என்னக்கூடிய பலனான மோக்ஷத்தைத் (பகவத்கைங்கர்யம் இதில் சேர்ந்தது) தரக்கூடிய வல்லமை இவனொருவனுக்கே உண்டு. இப்படிப்பட்ட முழுமுதற்கடவுளையே வணங்கியுய்யும்படி "காரணம் து த்யேய:" போன்ற வேதவாக்யங்கள் விதித்தன.

இப்படியாக, நாராயணனே பரம்பொருள்; பிறவி என்னும் பெரும்பிணியைத் தீர்க்கவல்ல மருத்துவன் இவன் ஒருவனே; தெய்வம் என்று பெயர் பூண்ட மற்ற எந்த தேவனும் இப்பிணி யைத் தீர்க்க (மோக்ஷம் தர) வல்லமையற்றவன் என்று பலபல ப்ரமாணங்கள், பரமாணத்துக்குச் சேர்ந்த யுக்தி, முதலியவற்றால் நிலைநாட்டினர் நம் ஆழ்வார்களும் அவர்களைப் பின் சென்ற ஆசாரியர்களும்.

எம்பெருமானார் தரிசனத்தில், மேலான பேறு எம்பெருமானை அவனுடைய விண்ணாட்டில் சென்றடைந்து அவன் திருவடிகளில் குற்றவேல் செய்து கிடப்பதே என்றும், இப்பேற்றைப் பெற அவனே மேலான ஆறு (உபாயம்) என்றும் நிஷ்கர்ஷித்து (முடிவுசெய்து) அதன்படி ஒழுக வேண்டும் என்ற விஷயம் மிகவும் வலியுறுத்தப்பட்டுள்ளது. இதில் ஆழ்ந்த நம்பிக்கை வேண்டும். இந்த நம்பிக்கையை மஹாவிச்வாசம் என்பர்.

எம்பெருமானார் திருவடி ஸம்பந்தமுடையவன் எவனாகிலும் இந்த மஹாவிச்வாஸம் உடையவனாயிருக்கவேணும். பெரியதிருமொழி 10-4-1 "சந்த மலர்க்குழல்" பாசுர வ்யாக்யானத் தில் நம் ஆசார்யர்கள் அருளிச் செய்வது:

எம்பெருமானார் ஸ்ரீபாதத்தில் அந்வயமில்லாதார், பகவத் விஷயத்தில் சொன்ன ஏற்ற மெல்லாம் அர்த்தவாதம் என்றிருப்பர்கள். அதுடையவர்கள் பகவத் ப்ரபாவத்துக்கு அவதியில்லாமையாலே, "சொன்னவை சிலசொன்ன வித்தனை; சொல்லாததுவே பெரிது" என்றிருப்பார்கள்.

மேலும் திருவாய்மொழி 4-10 (ஒன்றும் தேவும்) ப்ரவேசத்தில் ஈட்டில் எம்பார் வார்த்தை என்று காணும் வாக்யம்; "எம்பெருமானார் தர்சநஸ்தரில் எத்தனையேனும் கல்வியில்லாத ஸ்த்ரீப்ராயரும் தேவதாந்தரங்களை (இதரதெய்வங்களை) அடுப்பில் கல்லோபாதி (அடுப்பிலுள்ள கல்லுடன் ஒக்க) நினைத்திருக்கிறது"

"ஸ்ரீமந்நாராயணனை எம்பெருமானுக்கன்றி வேறு ஒரு தெய்வத்துக்கும் சேஷப்பட்டவன் (அடிமைப்பட்டவன்) அல்லேன். அவனொருவனுக்கே சேஷவஸ்து இந்த ஆத்மா" என்ற திடமான அத்யவஸாயம் (நம்பிக்கை) உடையவனாயிருக்கை அவச்யம். அநந்யசேஷத்வம் (அநந்யார்ஹசேஷத்வம் என்றும் கொள்க) என்ற லக்ஷணம் மேற்சொன்ன மனோபாவத்தை உட்கொண்டது. அநந்யசரணத்வம் (பகவானை விட்டு வேறு புகலற்றிருக்கை), அநந்யபோக்யத்வம் (பகவானே பரமப்ராயன், அடையத்தகுந்த போக்யவஸ்து என்றிருக்கை)" இவை யாவும் முக்யமான ஆத்மலக்ஷணங்கள். அவனைத்தவிற வேறு யாரும் அடிமை கொள்ளத்தகாதவனும் அவனுக்கே புஷ்பசந்தனங்கள் போல் (அசித்வத்) ஆளும்பொருள்களாய் (இதுவே பாரதந்த்ர்யம் என்பது) இருக்கவேண்டும் என்ற மனோநிலையும் இன்றியமையாதது. எம்பெருமானிடமிருந்து "இறையும் அகலகில்லேன்" என்று எப்போதும் பிரியாது அநபாயிநியாக உள்ள பிராட்டியும், அவனடியார்களான பாகவதோத்தமர்களும், அவர்களுள் தலையான ஆசார்யனும் எம்பெருமானுடன் சேர்த்துக்கொள்ள வேண்டியவர்கள். இவர்களிடம் எம்பெருமானிடம் போல் ஒழுக வேண்டும்.

ஆசார்யன் இந்தக் கொள்கைகளை நமக்குப் பெரிய திருமந்திரத்தின் சீரிய பொருள்களாகக் காட்டிக் கொடுக்கையால் அந்த வார்த்தையில் விச்வாஸம் மிகவும் அவச்யம். கண்ணிநுண் சிறுத்தாம்புக்கு பெரியவாச்சான் பிள்ளை அருளிச் செய்துள்ள வ்யாக்யானத்தின் அவதாரிகையில் பங்க்திகள்:

த்ரிபுராதேவியாரை, "ப்ராமண ப்ராபல்யாத்தாலேயோ எம்பெருமானே ஆச்ரயணீயன் என்று நீங்கள் பற்றிற்று?" என்ன, "அது ஒன்றுமன்று; எம்பெருமானார் காடிச்சால் மூலையில் தேவதையை ஆச்ரயித்தாராகில் அதுவே எங்களுக்கும் ஆச்ரயணீய வஸ்துவாகக் கடவது" என்றார்.

த்ரிபுராதேவி அகளங்கப்ரம்மராயன் என்று எம்பெருமானாருடைய சிஷ்யனான அரசனின் மஹிஷி. அவளை ஒருவர் "சாஸ்த்ர விசாரம் பண்ணி ப்ரமாணங்களின் பலம் கொண்டா நீங்கள் நாராயணனைப் பரதெய்வம் கொண்டிருக்கிறது என்று கேட்க, "அப்படி ஒன்றுமில்லை; எம்மாசார்யரான உடையவர் பரதெய்வமாகப் பற்றும் தெய்வமே எமக்கும் மேலான தெய்வம். அவர் காடிச்சால் மூலையில் தெய்வத்தைப் (பழையப்ரஸாதப் பானையை வைக்கும் ஈசானியதிக்குக்கான தெய்வம் ருத்ரன் என்றபடி) பற்றினாராகில் அதுவே நமக்கும் தெய்வமாகக் கடவது" என்று பதிலிறுத்ததாகக் கூறும் இந்த ஐதிஹ்யம். அந்த தெய்வத்தின் பேரைச் சொல்வது கூட அஸஹ்யமாய் காடிச்சால் மூலையில் தெய்வம் என்று சொல்வது குறிப்பிடத்தக்கது.

இனி இவ்விஷயத்தில் எம்பெருமானார் ஆசாரத்தையும் நினைவூட்டிக் கொள்வோம். திருவாய்மொழி ஈடு (10-2-1) வ்யாக்யானத்தின் அரும்பதவுரையில், "மறந்தும் புறம் தொழா மாந்தர் என்ற திருமழிசைப்பிரான் பாசுரத்தை உதாஹரித்து எம்பெருமானார் விஷயமான ஐதிஹ்யம் ஒன்று பேசப்பட்டுள்ளது. அது வருமாறு:

"ஒரு ஸமயம் நம்பெருமாள் புறப்பாடு கண்டருள்வதாக கிழக்கே எழுந்தருள அப்போது எதிர்பாராமல் பெருமழை வரவே கீழையூர் ஆலயத்திலே (சிவன்கோவிலுக்குள்) எழுந்தருளினார். பெருமாளுடன் கூட எழுந்தருளின எம்பெருமானார் வெளியிலேயே மழையில் நனைந்து கொண்டு முதலிகளுடன் எழுந்தருளியிருக்க, அங்கொருவன் வந்து "பெருமாள் உள்ளே எழுந்தருளினாரே; தேவரீர்களும் உள்ளே எழுந்தருளலாமே: மழையில் ஏன் நனைய வேண்டும்?" என்று அழைத்தான். இதற்கு உடையவர் "ஸர்வஸ்வாமியான எம்பெருமான் எங்கு வேண்டுமானாலும் புகுரலாம். அவனுக்கு அஸாதாரணமான மஹிஷி ஸ்தானத்திலுள்ளவர்கள் (தம்மையும் அங்கிருந்த ஸ்ரீவைஷ்ணவர்களையும் சொன்னபடி) வேற்றகம் புகுந்தால் "பரபுருஷகாமிநி" என்ற பழி வாராதா? மிக தோஷமாகுமே" என்று கூறி, மழைவிட்டு பெருமாள் வெளிவருந்தனையும் மழையிலேயே வெளியில் இருந்துவிட்டார்.

ஸ்ரீவைஷ்ணவர்கள் திருவாய்மொழி அநுஸந்திக்கையில் குருகூர்ச்சடகோபன் என்று திருநாமப்பாட்டில் வரும்போது கைகூப்பி வணங்குவது ஸம்ப்ரதாயம். நம் பெரியோர் அருளிச் செயல்களிலேயே போது போக்குவதாயிருப்பர். திருவாய்மொழிப் பாசுரங்களை சிவாலயங்களின் அருகில் (வெளியில்) அநுஸந்திக்க நேர்ந்தால் ஸாம்ப்ரதாயிகமான சடகோப நமஸ்காரமும் தவிர்க்கப்படுமாம். "ஆலயத்தருகில் சடகோபனும் த்யாஜ்யம்" என்றுமுதியோர் வாக்கு. ஆலயத்தைக் கும்பிட்டதாக ஆய்விடுமோ என்ற பயம். மறந்தும் புறம்தொழ மாந்தர்கள் அன்றோ?

"ஆழிமழைக்கண்ணா" பாசுரத்தின் ஆருயிரப்படி வ்யாக்யான ஸ்ரீஸூக்திகள்: "த்ரவந்தி தைத்யா: ப்ரணமந்தி தேவதா:" என்கிறபடியே பகவத்ஸமாச்ரயணம் பண்ணுவார்க்கு தேவதைகள் வந்து குடநீர் வார்க்கக் கடவரிறே" என்று ஆழ்வான். (ஸ்ரீவைஷ்ணவனுக்கு அர்க்ய பாத்ய ஆசமநீயங்கள் ஸமர்ப்பித்துப் பூசிப்பர் என்றபடி).

வராஹபுராணத்திலுள்ள கைசிகமாஹாத்மியத்தில் நம்பாடுவான் சரித்திரத்தில், ப்ரஹ்ம ரக்ஷஸஸின் கையில் சிக்கிய நம்பாடுவான் "பெருமாள் திருமுன்பு ஒரு பண்பாடி விட்டுக் கட்டாயம் வந்துவிடுகிறேன். அப்படி வராவிட்டால் பெரும் பாவங்கள் பல செய்தவனாவேன். எனக்குச் சிறிது அவகாசம் தருவாய்" என்று வேண்டி பல ப்ரபலபாபங்களை உதாரணமாகச் சொல்ல, ப்ரஹ்ம ராக்ஷஸ்ஸு திருப்தி அடையவில்லை. "வாஸுதேவனை மற்ற தெய்வங்களுடன் ஒக்க எண்ணுமவன் பாபத்தை அடைவேனாக; வாஸுதேவனை விட்டு மற்ற தெய்வங்களைப் பூசிப்பவனுடை மஹாபாபத்தை அடைவேனாக நான் திரும்பவும் வாரேனாகில்" என்று ஆணையிட, ப்ரஹ்ம ரக்ஷஸ்ஸும் இவனைப் போய்த் திருக்குறுங்குடி நம்பியை ஸேவித்துப் பாடிவிட்டுத் திரும்ப அநுமதி தந்தது என்ற விஷயமும் அவச்யம் அறியத்தக்கது. இதனால் ஸ்ரீவைஷ்ணவன் ஸ்ரீமந்நாராயணனை விட்டு இதர தெய்வமெதையும் தொழுவது மிகக்கொடிய பாபம் என்று மூதலிக்கப் பட்டது.

திருவாய்மொழி ஈட்டில் (4-6-6) வ்யாக்யானத்தில் 'மாயன்தமரடி நீறுகொண்டு அணிய' என்ற இடத்துக்குப் பொருளாய் அத்புதமான ஐதிஹ்யம் ஒன்று காட்டப்படுகிறது. "வண்டரும் செண்டரும் அகளங்க நாட்டாழ்வானுடன் செல்லா நிற்க, (அவன்) இவர்களுக்கு அமணன் பாழியில் ஸிம்ஹத்தைக் காட்டி, "திருமுற்றம்; தொழுங்கோள்" என்ன, அவர்களும் மெய் யென்று (நம்பி) திருவடி தொழுது, அது அமணன் பாழி என்றறிந்தவாறே மோஹித்து விழ, பிள்ளையுறங்கா வில்லிதாஸர் தம் ஸ்ரீபாத தூளியை அவர்களுக்கு இட, உணர்ந்து எழுந்திருந்தார்கள். (இதன் விவரணம் கீழே காண்க.)

வண்டர் என்பவரும் செண்டர் என்பவரும் அகளங்க நாட்டாழ்வான் என்ற அரசனின் மெய்க்காப்பாளர்களான மல்லர்கள். பிள்ளையுறங்கா வில்லிதாஸர் இவர்களை எம்பெருமானாரிடம் ஆச்ரயிப்பித்து ஸ்ரீவைஷ்ணவர்களாக்கி வைத்தார். அரசனும் எம்பெருமானாரிடம் ஆச்ர

பித்தான். ஒருநாள் இவர்கள் ஒன்றாகவரும்போது அரசன் வேடிக்கையாக (இவர்கள் நெஞ்சை சோதிக்கைக்காகவும் இருக்கலாம்) ஒரு ஜைந ஆலயத்தைக் காட்டி "எம்பெருமான் திருமுற்றம்; தெண்டன் ஸமர்ப்பியுங்கோள்" என்ன, அவர்களும் இவன் சொல்லை விச்வஸித்து அப்படியே செய்தபின்னர், அது பெருமான் திருமுற்றமல்ல என்றறிந்து தாம் செய்த மஹா பாபத்துக்குப் பரிகாரம் காணாது மூர்ச்சித்து விட்டனர். அரசனும் செய்வதேதுமறியாமல் பிள்ளையுறங்காவில்லிதாஸருடைய ஸ்ரீபாதரேணுவைக் கொண்டுவந்து அவர்கள் மீது தடவ, அவர்கள் பாகவதப்ராபவத்தால் உணர்ந்தெழுந்தனர். தமதாசார்யரான எம்பெருமானார் உபதேசத்தில் அந்த மல்லர்களுக்கிருந்த மஹா விச்வாஸமும், பாகவத பாததுளி ப்ரபாவமும் எத்தகையது என்று இவ்வைதிஹ்யத்தின் மூலம் உணரலாம். இப்படிப்பட்ட மஹாவிச்வாஸம் நமக்கு எல்லோருக்கும் அமையும்படி எம்பெருமானார் திருவடிகளைச் சரணம் பற்றுவோமாக.

"அஹமேவ பரம் தத்வம்" என்று தேவப்பெருமாள் உடையவருக்கு அருளிச் செய்தபடி அவனே (ஸ்ரீமந்நாராயணனே) பரதத்வம். மேலான பரம்பொருள். அவனுக்கன்றி மற்ற எந்த தெய்வத்துக்கும் நம்மைச் சேஷமாக (உரியதாக) எண்ணுவதோ, செயற்படுவதோ கூடவே கூடாது என்றிருக்க ஒவ்வொரு ஸ்ரீவைஷ்ணவனுக்கும் இன்றியமையாதது. இது நம் தர்சனத்தில் மிக மிக முக்யமான அர்த்தம் என்பதை உணர்ந்து நாம் ஒழுகவேண்டும்.

**அஹமேவ பரம் தத்வம்** என்று தன்னுடைய ஒப்புயர்வற்ற மேன்மையைச் சொன்ன இமையோர் தலைவன் தானே பேரருளாளன் என்றும் அர்த்திதார்த்த தீக்ஷிதன் என்றும் ப்ரஸித்தனாய் ஸௌலப்யத்திற்கு எல்லை நிலமாய்த் தன் எளிமையும் ப்ரகாசிக்கும்படி திருவத்திமாமலைமேல் சேதன ஸம்ரக்ஷணார்த்தமாக நிலைபெயராமல் நில்லாநின்றான். மெய்ம்மைப் பெருவார்த்தையருளிச் செய்த கீதாசார்யன் முதல் முன்னம் பார்த்தஸாரதியாய் அவன் (பார்த்தன்) சொல்லைத்தலைமேல் கொண்டுகார்யம் செய்யும் எளியநிலையைக்காட்டி, **மாமேகம் சரணம் வ்ரஜ** என்று நியமித்து, உடனே **அஹம் த்வா ஸர்வபாபேப்யோ மோக்ஷயிஷ்யாமி** என்று தன்பரத்வம் குன்றிட்ட விளக்காய் ப்ரகாசிக்கும்படி அருளிச்செய்து, கண்டவாற்றால் தனதே உலகமெல்லாம் என்னும்படி திருவல்லிக்கேணியில் நிலையாகப் பேரருளாளனாகவே நாம் பார்த்த சாரதியாய் நின்றருளுகிறான். இங்கு பீஷ்மருடைய அஸ்த்ரங்களால் வடுநிறைந்த திருமுக மண்டலமாகவும் அங்கு அக்னியிலிருந்து ஆவிர்ப்பவித்ததால் வடுநிறைந்த திருமுக மண்டலமாகவும் ரூபத்திலும் ஒரு விதத்தில் ஏகத்வம் காட்டி நம்மை வாழ்விப்பது ரஸிக்கத்தக்கது. பெருமாள் கோவிலில் பிறந்து வளர்ந்து தேவப்பெருமாளுக்கு வாய்த்த கைங்கர்யங்களைச் செய்யும்படி அடியேனை அருள் பாலித்திருந்த எம்பெருமான், பின்னர் திருவல்லிக்கேணியில் தனக்கு அத்தாணிச் சேவகம் புரியும்படி அநுக்ரஹித்து அழைத்து வாழ்விப்பதை நினைந்து நினைந்து அடியேன் பலகால் உருகுவதுண்டு. இரண்டு திருக்கோலங்களுமே "அழைத்து வாழ்வித்தவர்" என்ற திருநாமத்துக்கு இலக்கானவைகளே. பெரும் பட்டணத்தின் நடுவில் நின்றருளி, எங்கெங்கோ இருப்பவர்களை எல்லாம் லௌகிக வாழ்க்கையை வளமுறும்படி செய்துகொள்ள இங்கு அழைத்துத் தன் கைங்கர்யமாகிற வாழ்ச்சியையுமளித்து வாழ்விப்பவனன்றோ நமது பார்த்தஸாரதி எம்பெருமான் ?



எம்பெருமானார் திருவடிகளே சரணம்



ஸ்ரீ:

# யதீந்த்ரரும் யதீந்த்ரப்ரவணரும்

Dr. V. V. ராமாநுஜம்



**முன்னுரை :**

ஸ்ரீசைலேசதயாபாத்ரம் தீபக்த்யாதிகுணார்ணவம்
யதீந்த்ரப்ரவணம் வந்ததே ரம்யஜாமாதரம் முநிம்

என்பது மணவாள மாமுனிகள் விஷயமாக நம்பெருமாள் அருளிச்செய்த தனியனாகும். யதீந்த்ரராகிறார் எம்பெருமானார். யதீந்த்ர ப்ரவணர் என்று அரங்கன் மாமுனிகளைக் கொண்டாடுவது சாலவும் பொருந்தும். இதைவிட உயர்ந்த பிருதொன்றை யாரும் மாமுனிகளுக்குக் கொடுத்திருக்க முடியாது. மணவாளமாமுனிகளுக்கு எம்பெருமானாரிடத்தில் உள்ள ப்ராவண்யாதிசயத்தை ஓரளவுக்கு அநுபவிக்கலாம். முழுதும் சொல்லித்தலைக்கட்ட இயலாது.

எம்பெருமானாரே மணவாளமாமுனிகளாக வந்துப் பிறந்தவர். சக்ரவர்த்தி திருமகன் அவதார ரஹஸ்யத்தை பெரும்பாலும் ஒளித்துப் போந்தான். நந்தகோபன் குமரன் அந்த ரஹஸ்யத்தை அடிக்கடி காட்டிப்போந்தான். அப்படியே இங்கும். திருவநந்தாழ்வானே தாம் என்பதை எம்பெருமானார் மறைத்துப்போந்தார். வடுகநம்பி முதலானவர் வாயிலாக அவதார மூலத்தை அறிகிறோம். மாமுனிகள் தமது அஹிபதி நிஜாகாரத்தை பலருக்கும் ப்ரகாசப்படுத்தியது யதீந்த்ரப்ரவணப்ரபாவத்தில் ப்ரஸித்தம். "ஸஹபத்ந்யா விசாலாக்ஷ்யா நாராயணமுபாகமத்" என்கிறபடியே பெருமாள் (ராமபிரான்) திருவரங்கனை தன்னையே பிராட்டியுடன் கூட வழிபட்டான். இது லோகத்தாருக்கு வழி காட்டுகைக்காக. அது போலவே மாமுனிகளும் எதிராஜனிடம் ஆழ்ந்தபற்றுடையராய் நம்மாழ்வாரிடம் மதுரகவிகள் போலே வாழ்ந்து காட்டியது எதிராஜனுடைய உத்தாரகத்வத்தை நாமறிந்து உய்வதற்காகவே.

எம்பெருமானாரிடம் நேரில் அத்யந்தப்ராவண்யம் காட்டிய முதலியாண்டான், எம்பார், வடுகநம்பி, கிடாம்பியாச்சான் போல்வாருக்கு யதீந்தரப்ரவணர் என்ற பட்டம் கிடைக்கவில்லை. ஸ்ரீரங்கநாதனே மாமுனிகளுக்கு இந்தப்பட்டத்தைச் சூட்டியதாலே இவருக்கும் எதிராஜருக்கும் உள்ள ஆசார்ய சிஷ்ய ஆன்மீக உறவு எத்தகையது என்றறியலாம். ஒரு ஸ்ரீவைஷ்ணவனுடைய உஜ்ஜீவனத்துக்கு எம்பெருமானைவிட எம்பெருமானாரே உயர்ந்த மேலான உபாயம் எம்பெருமானாரைப்பற்றினால் பேறு தப்பவே தப்பாது என்ற திட அத்யவஸாயத்தை உடையவராய், அதை அநுஷ்டானத்தில் காட்டி நம்மை வாழ்வித்தருளினவர் மணவாளமாமுனிகள்.

**யதீந்த்ரரும் யதீந்த்ரப்வணரும்:** இருவருக்கும் உள்ள ஒப்புமையை பிள்ளைலோகம் சீயர் காட்டியபடி சிறிது அநுபவிப்போம்.* ஸ்ரீரங்கத்துக்கு வடக்காயிருக்கிற திருவேங்கடநாட்டில்

* ஸ்ரீசைலேசதயாபாத்ர தனியன் வ்யாக்யானத்தில் ஸாதித்துள்ளவை.

ஏரார் பெரும்பூதூரில் எம்பெருமானார் வடமொழியையும் தென்மொழியையும் (ஸம்ஸ்க்ருத வேதாந்தம், த்ராவிடவேதாந்தம்) வெளியிட அவதரித்தருளினார். இவர்பிறப்பால் "நாரணனைக் காட்டிய வேதம் களிப்புற்றது; தென் குருகை வள்ளல் வாட்டமிலா வண் தமிழ்மறை வாழ்ந்தது.

"அரங்கநகரும், மேவுதிருநகரியும் வாழவந்த மணவாளமாமுனி" என்கிறபடியே தென் னாட்டுத்திலதமான தென் குருகூரிலே பெரியஜீயர் தென்மொழியை வெளியிடவே அவதரித் தருளினார். இவருக்கு இரண்டு மொழிகளிலும் ப்ரவர்த்தகத்வம் உண்டேயாகிலும் ஊற்றத்தைப் பற்ற ஒன்றிலே சொல்லுகிறது. ஜீயரும் ஜன்மபூமியை விட்டுவந்து காவிரி நடுவு பாட்டிலே கருமணியைக் கண்டு, வைஷ்ணவஸ்ரீயோடு வாழ்ந்துகொண்டிருந்து ஸ்ரீரங்கஸ்ரீயையும் ச்ருதி ஸாகரத்தையும் த்ராவிடவேதஸாகரத்தையும் பெருகப்பண்ணி, பெருமாளை நோக்கிக்கொண்டு போந்தார்.

அவர் "எல்லாவுயிர்கட்கும் நாதன் அரங்கன்" என்னும்பொருள் சுந்தரர். இவர் "பல் லுயிர்க்கும் விண்ணின் தலைநின்று வீடளிப்பான் அனைத்துலகும் வாழப்பிறந்த எதிராச மாமுனிவன்" என்னுமர்த்தத்தை அருள் சுரந்தார். உடையவர் வைபவத்தை ப்ரகாசிப்பித்த தீபம் இவர்.

நர நாராயண அவதாரம் போலேதான் இவர்கள் அவதாரமும். அந்த ஒருவனே ஆசார்யனும் சிஷ்யனுமாயிருந்தாப் போலேயே இங்கும். அவர் நாராயணவைபவ ப்ரகாசர். இவர் ராமாநுஜவைபவப்ரகாசர். நாராயண, ராமானுஜ இரண்டுமே சதுரக்ஷரிகள். சதுரயில் தலைவரான இவர் சரமசதுரக்ஷரியில் (ராமாநுஜ) நிலை நின்றார். ஆழ்வாருக்கு மதுரகவிகளிலும் *சரமமான திருவடி ராமாநுசனைப்போல (நம்மாழ்வாருடைய திருவடிநிலைக்கு ராமாநுசன் என்று திருநாமம்) ராமாநுசனுக்குச் சரமமான சரணங்கள் யதீந்த்ரப்ரவணர்.

மாமுனிகளுடைய எதிராஜபக்தி—ஆர்த்திப்ரபந்தம்:** நம்மாழ்வாருக்கு க்ருஷ்ணத்ருஷ்ணா தத்வம் என்று சிறப்பு உண்டானாற்போல் இவருடைய எதிராஜபக்தியை யிட்டே யதீந்த்ர ப்ரவணர் என்னும்படி, "நையும் மனம் உன் குணங்களையுன்னி" என்று அவருடைய குணங் களிலே ஊன்றியமனத்தராய், அதனாலே வந்தத்த புகல் என்னும்படியான எம்பெருமானார் திரு வடிகளை மெய்கொள்ளக் காணவேணும் என்ற அடங்காத காதலையுடையராய், கரைபுரண்ட ஆற்றாமையுடன் எம்பெருமானாரிடம் "பக்தி எல்லாம் தழைத்ததென்ன" என்னும்படியே பரம பக்தி தலையெடுத்து, பரமார்த்தியை அடைந்து, அவ்வார்த்தியை வெளியிடும்படி ஆர்த்திப்ரபந் தத்தை அருளிச்செய்தார்.

இப்ரபந்தத்தில் எம்பெருமானார் பரமபதத்திலே நித்ய கைங்கர்ய நிரதராய் இருக்கிற படியை அநுஸந்தித்து அவர் விஷயத்தில் தாமும் அப்படி வழுவிலாவடிமை செய்து வாழ வேணும் என்று ப்ரார்த்தித்தருளுகிறார். "வடுகநம்பி தன்னிலையை எந்தனுக்கு நீ தந்து, எதி ராசா! எந்நாளும் உந்தனக்கே ஆட்கொள் உகந்து" என்பது இவர் ப்ரார்த்தனை. அவரது நிலை "அஹம் ஸர்வம் கரிஷ்யாமி" என்ற இளையபெருமாளது. இவரது நிலை "சத்ருக்நோ நித்ய சத்ருக்ந:" என்று பேசலாம் படியானது.

"ஆமுதல்வன்" என்னும்படி அவதாரவிசேஷமாய் இருந்துள்ள வ்யக்திவிசேஷங்கள், முகில் வண்ணனடியை அடைந்துய்ந்த ஆழ்வாரும், மாறனடிபணிந்துய்ந்த ராமாநுசரும் அவர் திருவடிகளிலே அநந்யசரணரான ஜீயருமே. உடையவர் "பராங்குச பாதபக்தம்" என்றும்,

*முடிந்த, நிலைத்த.

**பிள்ளை லோகம் ஜீயருடைய ஆர்த்திப்ரபந்த வ்யாக்யானத்திலிருந்து தொகுத்தவை.

"சடகோபர் தேமலர்த்தாட்கேய்ந்தினிய பாதுகமாம் எந்தை இராமாநுசன்" என்றும் நம்மாழ்வார் விஷயத்தில் சரம பர்வநிஷ்டராய்* இருந்ததைச் சொல்லிப்போற்றி, இச்சரமமார்க்கத்தை தம் சரமகாலத்தே சரமப்ரபந்தத்தாலே வெளியிட்டருளினார். யதிராஜவிம்சதியில் 'ராமாநுஜம் யதிபதிம் ப்ரணமாமி மூர்த்நா" என்று தொடங்கி "தஸ்மாதநந்யசரணோ பவதீதி மத்வா" என்று தலைக்கட்டுகையால் ப்ராபகபரமாய் (உபாயத்தைக் காட்டுவதாய்) உள்ளது அந்த ஸ்தோத்ரம். ஆர்த்திப்ரபந்தத்தில் "வாழி எதிராசன்" என்று தொடங்கி, "இந்தவரங்கத்து இனிதிரு நீ" என்று தலைக்கட்டுகையாலே இது (ஆர்த்திப்ரபந்தம்) ப்ராப்யபரமாய் (உபேயத்தை உபதேசிப்பதாய்) இருக்கும். த்வயத்தின் உத்தரவாக்யமான ஸ்ரீமதேநாராயணாயநம: ப்ராப்யத்வரா நுஸந்தானமாயிருக்குமாப்போலே இங்கும். அந்த உத்த்ரவாக்யத்திலும் தாத்பர்யமாய் (ஸாரமாய்) இருப்பது இது.

தம் ஆர்த்தியை எம்பெருமானாரிடத்தில் விண்ணப்பிக்கப்புகுந்த இவர், தண்டகாரண்ய வாஸிகளான ரிஷிகள் "ஏஹிபச்ய சரீராணி" என்று ராக்ஷஸர்களால் நலிவு பட்டதேஹங்களை பெருமாளுக்குக்காட்டி அவனாலே ரக்ஷிக்கப்பட்டவராக வேணும் என்றிருந்தவர்கள், அத்தலையில் ஸௌந்தர்ய ஸௌகுமார்யாதிகளில் ஈடுபட்டு "மங்களானி ப்ரயுஞ்ஜாநா:" என்று மங்களாசாஸனம் பண்ணினாப்போலே இவரும், ப்ரக்ருதி தின்ற ஆத்மாவை ஸ்வாமியிடம் காட்டித் தாம் விரும்பியதையெல்லாம் அறிவிப்பதற்குமுன் எம்பெருமானாருடைய அப்ராக்ருத திவ்யமங்கள ஸேவையை (அவர் அநுக்ரஹிக்க) ஸேவித்து, மங்களாசாஸனம் பண்ணுகிறார், "வாழி எதிராசன், வாழி எதிராசன், வாழி எதிராசன்" என்று, பல்லாண்டு பல்லாண்டு பல்லாயிரத்தாண்டு என்னுமாப்போலே முதல் முன்னம் (ஆர்த்தி-1) மங்களாசாஸனம் பண்ணுகிறார். மேலும், "சீராரும் எதிராசர் திருவடிகள் வாழி" (ஆர்த்தி-30) என்றும், அறுசமயச் செடியதனை அடியறுத்தான் வாழியே (ஆர்த்தி-81) என்றும், (பாஹ்யகுத்ருஷ்டிகள்) மதத்தை மாய்த்த பெருவீரர் நாளும் மிகவாழியே (ஆர்த்தி-29) என்றும் திருமேனிசோபையையும் திவ்யசேஷ்டிதங்களின் பெருமைகளையும் சொல்லி மங்களாசாஸனம் பண்ணுகிறார். இந்த மங்களாசாஸனமும் "ஜயத்யதி பலோராம: லக்ஷ்மணச்ச மஹாபல: ராஜா ஜயதி ஸுக்ரீவோ ராகவேணாபிபாலித:" என்ற திருவடியின் திருவாக்குபோல ஸம்பந்த ஸம்பந்திகளளவும் செல்லுகிறது.

**ஆர்த்திப்ரபந்தத்தில் தேறின அர்த்தம்:** "உபயவிபூதி ஐச்வர்யத்தையும் பெரிய பெருமாளாலே பெற்று உடையவராய் அத்தால் "ஸ்ரீவிஷ்ணுலோக மணிமண்டப மார்க்கதாயி' யாய் ப்ரபந்நஜன கூடஸ்தராய் இருக்கிற எம்பெருமானார் திருவடிகளிலே ருசிகார்யமாய் யதீந்த்ரப்ரவணரான ஜீயர் பண்ணும் ப்ராப்யப்ரார்த்தனை அவர் அபிமானத்தார்ப் பூதர் எல்லாருக்கும் ஆகி அத்தால் எம்பெருமானார் ப்ரஸாதத்தைப் பெற்று நித்யவிபூதியிலே நிரந்தர கைங்கர்ய ஸாம்ராஜ்யத்தை பெற்று வாழ்வார்கள்" என்பது ஆர்த்திப்ரபந்தத்தில் தேறிய அர்த்தம்.

**மாமுனிகள் காட்டும் எதிராஜ உத்தாரகத்வம் :** ஆர்த்தி ப்ரபந்தத்திலும் எதிராஜ விம்சதியிலும் மாமுனிகள் நமக்கு உபதேசிப்பது எதிராஜனுடைய எம்பெருமானாரின் உத்தாரகத்வத்தையே. (ஸம்ஸாரத்தினின்றும் கரையேற்றும் திறன்). உன்தன் அபிமானமே உத்தாரகமென்று சிந்தை தெளிந்திருக்கச் செய்த நீ அந்தோ! எதிராசா! சதிராக நின் திருத்தாள் தா" (ஆர்த்தி 56) என்று எதிராசனிடம் விண்ணப்பம் செய்வதன் மூலம், நாம் எம்பெருமானார் திருவடி ஸம்பந்தமடியாகத்தான் உஜ்ஜீவனம் பெறவேண்டும் என்று காட்டி, எதிராஜனுடன் குருபரம்பரை மூலம் ஒரு விலக்ஷண உறவை உண்டாக்கித்தந்து, அந்தத்திருவடிகளே பரமப்ராப்யம் என்ற அத்யவஸாயத்தைப் பிறப்பித்த தமதாசார்யன் பண்ணின மஹோபகாரத்தை, "மாசில் திருமலையாழ்வார் என்னை நேசத்தால் நின்பால் சேர்த்தார்" (ஆர்த்தி 12) என்று உபகாரஸ்ம்ருதி பண்ணி, இதனால் விளையும் பலனைச் சொல்லுகிறார் "அவர்க்காய் எதிராசர் எம்மைக் கடுக பரமபதம் தன்னில்

* ஆசார்யனைக்காட்டிலும் தேவுமற்றறியேன் என்றிருக்கும் நிலை.

ஏற்றுவர்-என்ன பயம் நமக்கே? (ஆர்த்தி-21) என்ற துணிவை. எம்பெருமான் நேரே தரும் பேற்றைவிட எம்பெருமானுர் மூலம் கிடைக்கும் அதே பேறு மிகவும் சிறந்தது என்பது இவர் அத்யவஸாயம்: "எதிராசர் தம் அபிமானமென்னும் போதத்தை ஏறிப் பவமாம் புணரிதனைக் கடந்து பாதக்கரையைக் குறுகுவனே". (ஆர்த்தி-22) என்று மேலே அருளிச் செய்கிருர் பெரு மிதத்துடன். எதிராசனுடைய அபிமானமென்னும் கப்பலில் ஏறி ஸம்ஸாரஸாகரமென்னும் பெருங்கடலைக் கடந்து, ச்ரியபதியான ஸர்வேச்வரனுடைய திருவடிகளான கரையை அடைவேன் என்றபடி.

"பொலிக! பொலிக!" என்னும் திருவாய்மொழியில் ஆழ்வார் ஸூசனம் பண்ணியருளிய படி "அனைத்துலகும் வாழப்பிறந்தவன் எதிராசமாமுனிவன்." (ஆர்த்தி-41) எம்பெருமானுக்குக் கூட இப்பெருமை கிட்டவில்லை. "என்னின்ற யோனியுமாய்ப் பிறந்தாய்! இமையோர் தலைவா!" என்கிறபடியே பலபல பிறவிகள் பிறந்தும் தத்வமான் தான் செய்து தலைக்கட்ட இயலாத சேதனோஜ்ஜீவன கார்யத்தை தத்வதர்சிகளான மஹான்களைப் பிறப்பித்துத் தலைக்கட்டிக் கொள்ளுகிருன் ஸர்வேச்வரன். அப்படிப்பட்ட தத்வதர்சிகளில் கருணையே வடிவெடுத்த நம்மிராமாநுஜன் முதல்வனாக நிற்பதால் நமக்கு இந்த எம்பெருமானுர் க்ருபையே தஞ்சம். அதிகாரிகளுக்கு (ஞானமநுட்டானம் நன்ருக உடையவர்களுக்கு) அரங்கன் இரங்கிக் கார்யம் செய்வன். நம் போன்று அதிகாரலேசமுமில்லாதார்க்கு எம்பெருமானுர் திருவடிகளைத் தவிர வேறு புகலே இல்லை. "அதிகாரமுண்டேல் அரங்கர் இரங்காரோ? அதிகாரமில்லாதார்க்கன்ருே எதிராசா! நீயிரங்க வேண்டுவது?" (ஆர்த்தி-41) என்று எதிராசனை மணவாளமாமுனிகள் கேட்கிருர், அப்படியே அவச்யம் இரங்கியருள்வர் என்பது தாத்பர்யம்.

நம்மாசார்யர்களுக்கு நேரே புருஷகாரத்வம் இல்லையாயினும் பிராட்டி பரிகரம் இவர்கள் என்பதால் இவர்கள் பக்கலிலும் ஒரு விதத்தில் புருஷகாரத்வபூர்த்தி ஸித்திக்கிறது. பிராட்டி எப்படி நிக்ரஹம் என்பதையே நினைக்காமல் நம் வாழ்ச்சிக்காக எம்பெருமானுடன் எப்போதும் அகலாமல் இருந்து பாடுபடுகிருளோ அப்படியே நம் ஆசார்யர்களும். நம் தர்சனத்தில் ஆசார்யத்வபூர்த்தி என்பது எம்பெருமானுரிடத்தில்தான். எம்பெருமானுர் என்னும்போது அவரபராவதாரமான மாமுனிகளும் சொல்லப்பட்டாராகக் கொள்க. எம்பெருமானுருக்கு முன் ஆசார்யர்கள் இவர் திருமுடி ஸம்பந்தத்தால் வீறு பெற்றனர். இவருக்குப் பின்புள்ளார் இவர் திருவடி ஸம்பந்தத்தால் வாழ்ச்சி பெறுகின்றனர் என்பது நம் ஸம்ப்ரதாயத்தில் மிகவும் முக்ய மான, அவச்யம் அறியவேண்டிய பொருள். "எந்தை திருவாய்மொழிப்பிள்ளை இன்னருளால் உந்தன் உறவை உணர்த்தியபின் இந்தவுயிர்க்கெல்லா வுறவும் நீயென்றே எதிராசா! நில்லாத துண்டோ? என் நெஞ்சு" (ஆர்த்தி-58) எம்பெருமானுரே இவ்வாத்மவஸ்துவுக்கு ஸர்வவிதபந்து என்று தம் ஆசார்யரான திருவாய்மொழிப்பிள்ளை பரமக்ருபையுடன் காட்டித்தந்து இவரை யதீந்த்ரப்ரவணராக்கியபின் அந்த அத்யவஸாயத்தில் தம் நெஞ்சு நிலையாக நிற்பதாகத் தம் நிஷ்டையை வெளியிட்டருளி, நமதும் அந்த நிலையே ஆகவேண்டும் என்று உபதேசமாகப் பேசி அருளினர். தமது வடமொழிப்ரபந்தமான விம்சதியிலும் இந்த பொருளை அழகாகப் பேசியருளினர் "ஸ்ரீமந் யதீந்த்ர! தவ திவ்யபதாப்ஜஸேவாம் ஸ்ரீசைலநாதகருணுபரிணுமதத்தாம் தாமந்வஹம் மம விவர்த்தய" (ய. வி-19) ஆசார்யரான ஸ்ரீசைலநாதருடைய அநுக்ரஹத்தால் பெற்ற தேவரீருடைய திருவடிகளில் கைங்கர்யத்தை தேவரீரே வளர்ச்சி பெறும்படி அநுக்ரஹித்தருள வேண்டும் என்று.

ஸ்ரீரங்கநாதன் எம்பெருமானுரிட்டவழக்காயிருப்பன்-தன் உபயவிபூத்யைச்வர்யத்தையும் இவரிட்ட வழக்காய் இருக்கும்படி இவருக்கு உடைமையாய்ச் செய்துவிட்டபடியாலே. "அரங்கர் நீயிட்ட வழக்கன்ருே? எதிராசா! என்னுடைய இருவினையை இறைப்பொழுதில் மாற்றி ஏராரும் வைகுந்தத்தேற்றி விடாய் நீயே!" (ஆர்த்தி-34) என்றும் "ரங்கராஜ: வச்யஸ்ஸதா பவதிதே யதிராஜ! தஸ்மாத் ஸ்வகீயஜந பாபவிமோசநே த்வம் சக்த:" (ய. வி. 17) என்றும் ஸாதிக்கிறபடி

யால் "அஹம்த்வா ஸர்வபாபேப்யோ மோக்ஷயிஷ்யாமி" என்றவன் அந்த திவ்யசக்தியையும் எதிராஜனிடம் தந்திட்டான் என்று தெள்ளத்தெளிய அறியலாகிறது. இதற்கு நிதானத்தையும் அதனுல் நமக்குள்ள உரிமையையும் மாமுனிகள் திருவாக்காலேயே அறியலாம். "அரங்கர் எதிராசர்க்கீந்த வரம் சிந்தை செய்யில் நம்மதன்றோ தாயமுறைதான்?" (ஆர்த்தி-60) பாபக்ரியஸ்ய சரணம் பகவத் க்ஷமைவ; ஸா ச த்வயைவ கமலாரமணேர்த்திதாயத் க்ஷேமஸ்ஸ ஏவஹி யதீந்த்ர! பவச்ச்ரிதாநாம்" (ய. வி-18) என்பவையே இவை.

ச்ரிய: பதியான எம்பெருமானிடத்தில் ஒரு பங்குனி உத்தரத் திருநாளில் வேண்டிப் பெற்ற யாதொருவரம் உண்டோ (உமக்காக உமது ஸம்பந்தி ஸம்பந்திகள் பக்கலிலுள்ள குற்றங் களைப் பொறுத்து வாழ்ச்சி அளிப்போம். நீர் இனிதே திருவரங்கத்திரும் என்று நம் பெருமாள் சேரபாண்டியனில் இருந்து சொன்ன வார்த்தை) அந்தவரமே அடியோங்களுக்கு எல்லாம் க்ஷேமமளிப்பதாக அமையவேண்டும். நிருபாதிகபிதாவின் ஸொத்து தாயமுறைப்படி அவன் ஸந்ததியையன்றோ சேரும்? ஒரு முயற்சியும் இல்லாமல் கேவலம் எதிராஜனுடைய ஸம்பந்தத்தி ஞலேயே பெறுவதன்றோ? இது. எம்பெருமானுர் திருவடி ஸம்பந்தமொன்றே நமக்கு வாழ்ச்சி யளிக்க (நம்மை உத்தரிப்பிக்க) வல்லது. ஒரு ஸ்ரீவைஷ்ணவனுக்கு இந்த ஸம்பந்தஞானம் ஏற் பட்டுவிட்டால் எம்பெருமானிடம் தனித்து ஒரு சரணுகதிகூட பண்ண அவச்யமில்லை என்று மார்பில் கைவைத்துறங்கலாம். இந்த ஸம்பந்தத்தை ஏற்படுத்தி ஸம்பந்த ஜ்ஞானத்தையும் உண் டாக்கும் ஸாக்ஷாதாசார்யனிடம் க்ருதஜ்ஞதை ஸதா நெஞ்சில் நடக்கவேணும். இவ்விரண்டு அர்த்தங்களும் ஆர்த்தியிலும் விம்சதியிலும் நமக்கு மாமுனிகள் உபதேசிக்கும் மிகச்சீரிய பொருள்கள்.

**இவர்களுடைய ஆசார்யத்வ பூர்த்தி:** எம்பெருமானுருடைய ஸர்வோத்தாரகத்வம் இந்தக் கட்டுரையில் மாமுனிகளுடைய திருவாக்கால் மூதலிக்கப்பட்டது. வேறு இடங்களில் வேறு வழிகளில் மூதலிக்கப்பட்டுள்ளது. தர்மி ஐக்யத்தால் (இருவரும் திருவாநந்தாழ்வானுடைய அவதாரபூதரானமையால்) இந்த உத்தாரகத்வம் இருவரிடமுமே உண்டு. ஆயினும் புனரவ தாரத்தின் ஔஜ்வல்யம் மிக உயர்ந்துள்ளதை பல படியாலும் உணரலாம்.

அர்த்தஸ்வாரஸ்யம் ஒருபுறமிருக்க, சப்தஸ்வாரஸ்யத்தினுல் சில விஷயங்களை ரசித்து க்ரஹிக்கக்கூடும். இவ்விரு மஹாசார்யர்களுடைய அவதாரதின நாள்பாட்டை அநுஸந்தித்துப் பார்த்தால் இந்த ரஸம் வெளியாகும். "சங்கர பாஸ்கர யாதவ பாட்டப்ரபாகரர் தங்கள் மதம் சாய்வுற வாதியர் மாய்குவர்" என்று செறுக்குதோற்றும் பாசுரம் எதிராஜருடைய நாள் பாட்டு. "செந்தமிழ்வேதியர் சிந்தை தெளிந்து சிறந்து மகிழ்ந்திடு நாள்" என்று பரம ஸாத்விகமாக மகிழ்ச்சியுறும் திருநாள் திருமூல நன்னாளாகும். "பார்த்தன் அறுசமயங்கள் பதைப்ப" என்று பாஹ்யகுத்ருஷ்டிகள் நிரஸனத்துக்கென்றே எதிராசனுகத்தோன்றி, "தற்கச்சமணரும் சாக்கியப் பேய்களும், தாழ்சடையோன் சொற்கற்ற சோம்பரும், சூனியவாதரும், நான்மறையும் நிற்கக் குறும்புசெய் நீசரும் மாண்டனர் நீணிலத்தே" என்றும் "சாருவாகமதம் நீறுசெய்து – மிக்கயாதவ மதத்தை மாய்த்தபெருவீரர்" என்றும் போற்றும்படி வாழ்ந்தருளினது அந்த அவதாரத்தில். "அடியார்கள் வாழ, அரங்கநகர் வாழ, சடகோபன் தண்டமிழ்நூல் வாழ, கடல்சூழ்ந்த மன்னுல கம் வாழ" என்னும்படி இன்பமுற வாழ்ந்தருளினது இந்த அவதாரத்தில்.

இரு அவதாரங்களிலும் ஆசார்யத்வபூர்த்தி வாசமகோசரமாய் உண்டு. எம்பெருமானு ருடைய பூர்த்தியை பல முகங்களாலும் ஆழ்வார் "கலியும் கெடும்" என்று முன்கூட்டியே பேசி வைத்ததுமுதல் நாதமுனிகள் முதலாக எதிராஜனுடைய ஆசார்யர்களும் ஆழ்வான் முதலான

ஸச்சிஷ்யர்களும் பேசிற்றேபேசும் ஏககண்டராக வெளியிட்டதை நன்கு அனுபவித்துள்ளோம். திருவேங்கடமுடையானுக்கு சங்காழி அளித்தும், வேதார்த்த ஸங்க்ரஹத்தை உபன்யஸித்தும் எம்பெருமானர் ஆசார்யராயினர். திருக்குறுங்குடி நம்பி தானே பணிந்து இவரிடம் உபதேசம் பெற்று, இவர் திருக்கையால் திருமண்காப்பிடப் பெற்று, மாறுவேடத்தில் இவர் திருவடிகளில் குற்றவேல் செய்து, வைஷ்ணவ நம்பி ஆயினமை ப்ரசித்தம்.

"ஆராமம் சூழ்ந்தவரங்கம்" என்கிறபடியே உகந்தருளிய நிலங்களில் தலையானதான திருவரங்கம் திருப்பதியில் "செங்கோலுடைய திருவரங்கச் செல்வனார்" என்றும் "பதின்மர் பாடும் பெருமாள்" என்றும் அர்ச்சையிலும் இவரைவிட உயர்ந்த தத்வம் இல்லை என்றும் கொண்டாடப் படுமவர் ஸ்ரீரங்கராஜன். "தேசுடைய தேவர் திருவரங்கச் செல்வனார் பேசியிருப்பனகள் பேர்க்கவும் பேராவே" என்கிறபடியே இவரே நமது தர்சனத்தில் பல அர்த்தங்களையும் வெளியிட்ட ப்ரதாமாசார்யன். முன்பொருகால் திருமங்கை மன்னன் எம்பெருமானை நோக்கி, "வெண் சங்கமொன்றேந்திய கண்ணா! நின்றனக்கும் குறிப்பாகில் கற்கலாம் கவியின் பொருள்தானே" என்றருளிச் செய்தார். அன்றுமுதல் இன் கவியின் பொருளைக்கேட்கப் பெருங்காதல் கொண்டிருந்தவன் மாமுனிகளிலும் இப்பொருளைத் திறம்படக் கூறவல்லார் யாருமில்லை என்று துணிந்து தமக்கு இப்பொருளைச் சொல்லவேணும் என்று விண்ணப்பித்து, ஓராண்டுகாலம் தன் திருவிழாக்களை எல்லாம் தவிர்ந்து, தேனும் பாலும் கன்னலும் அமுதுமாக ஆழ்வாருடைய ஸ்ரீஸூக்திரஸத்தை வாரி வழங்க, இனிதாகப்பருகி, தான் சிஷ்யனாயிருந்ததை நாட்டாரறிந்து போற்றவேண்டும் என்று இவரைப் பலபடியிலும் சிறப்புறும்படி உயர்த்தி மகிழ்ந்தான். ஆசார்யனுக்குத் திருவரங்கன் செய்த சம்மானங்களாவன:

1. ஸ்ரீசைலேசதயாபாத்ரம் என்ற மாமுனிகள் விஷயமான தனியனை அனுக்ரஹித்து ஸகல திவ்ய தேசங்களிலும் முக்காலமும் நித்யானுஸந்தானமாக நடக்கும்படி திவ்யாஜ்ஞை பிறப்பித்து நடத்திவைத்தது.

2. "சென்றால்குடையாம் இருந்தால் சிங்காதனமாம், திருமாற்கரவு" என்கிறபடியே தமக்கு திவ்யஸிம்ஹாஸனமாய் அமைந்த நாகபர்யங்கத்தை இவருக்கு இருப்பாக அளித்தது. இதனாலன்றே இவ்வுலகிலுள்ள எல்லா ஸந்நிதிகளிலும் மணவாளமாமுனிகள் சேஷ ஆஸனத்தில் ஸேவைஸாதிப்பது. இதுவும் ஸ்ரீரங்கராஜனுடைய திவ்யாஜ்ஞையே. எம்பெருமானர் உட்பட எந்த ஆசார்யருக்குமில்லாத தனிச்சிறப்பு இது.

3. ஆசார்யனுடைய தீர்த்ததினத்தை திருவத்யயனதினமாக சிஷ்யன் பாலிக்கக்கடவன் என்ற ஸதனுஷ்டானத்தை இவர் விஷயத்தில் அரங்கன் இன்றும் அநுஷ்டித்துவருவது அறியத்தக்கது. எந்த ஆழ்வாருடையவோ ஆசார்யனுடையவோ திருவத்யயதினமும் இப்படி அநுஷ்டிக்கப்படுவதில்லை.

முடிவுரை: நமது குருபரம்பரையில் "லக்ஷ்மீநாதஸமாரம்பாம்" என்கிறபடியே ரங்கநாதனே ப்ரதமாசார்யன். மணவாளமாமுனிகளுடன் பூர்வாசார்ய பரம்பரை முடிவுறுவதாக ஸம்ப்ரதாயம். இவர் ப்ரதமாசார்யனை ரங்கநாதனுக்கு ஆசார்யராயினமை கொண்டு நமது குருபரம்பரை ஒரு ஹாரமாயிற்று. இந்த ஹாரத்துக்கு நாயகக்கல் எதிராசனை உடையவர். நடுநாயகக்கல்லுக்கு சோபைதருவது முன்னும் பின்னுமுள்ளவை. ரங்கநாதனும் மணவாளமாமுனிகளும் இப்பணியை நிறைவேற்றுவதாகக் கொள்ளலாம். எம்பெருமானாருடைய பெருமைகளை "தானும் தன் தன்மை அறிவறியான்" என்கிறபடியே அவராலேயே பேசித்தலைக்கட்ட முடியாது. யதிபுநரவதாரமான மாமுனிகளின் பெருமை எம்பெருமானாருடையதைவிட உயர்ந்தது ஔஜ்வல்யமானது என்று காட்டப்பட்டது இக்கட்டுரையில்.

மன்னுயிர்கள் இங்கே மணவாளமாமுனிவன்
பொன்னடியாம் செங்கமலப் போதுகளை-உன்னிச்
சிரத்தாலே தீண்டில் அமானவனும் நம்மை
கரத்தாலே தீண்டல் கடன்.

எம்பெருமானர் திருவடிகளே சரணம்—ஜீயர் திருவடிகளே சரணம்.

# பெரும்பூதூர் மாமுனிவன்

[Dr. V. V. ராமாநுஜம்—பதிப்பாசிரியர்]

## திருவவதார நன்னாள்

"ஆழ்வார்கள் தாங்கள் அவதரித்த நாள்களிலும் வாழ்வான நாள் நமக்கு மண்ணுலகீர்! ஏழ்பாரும் உய்ய எதிராசர் உதித்தருளும் சித்திரையில் செய்ய திருவாதிரை" என்று மணவாள மாமுனிகள் எம்பெருமானாரின் திருவவதார நன்னாளான சித்திரைத் திருவாதிரையின் பெருமையைப் பேசியருளுகிறார். ஒவ்வொரு சித்திரைத் திருவாதிரையும் நமக்குப் பெருவிழா வாகும். ஸ்வாமி திருவவதரித்த ஆண்டான பிங்கள ஆண்டும் ப்ராப்தமாகும் போது பிங்கள சித்திரைத் திருவாதிரையின் தனிப்பெருமையைப் பற்றி என் சொல்வது? இந்தத் திரு விழாவைக் கொண்டாடும்படி நாம் பெரும் பாக்யம் பெற்றுள்ளோம் என்று நாமனைவரும் உணரவேண்டும். அனைத்துலகும் வாழப்பிறந்த இந்த மஹாசார்யரின் அவதாரத் திருநாளின் சிறப்பை மாமுனிகள் மற்றொருபாசுரத்தாலே அருளிச் செய்துள்ளார். இதோ பாசுரமும் அதன் விளக்கமும்:

சங்கர பாக்கர யாதவ பாட்ட ப்ரபாகரர் தங்கள்மதம்
சாய்வுற வாதியர் மாய்குவரென்று சதுமறை வாழ்ந்திடுநாள்
வெங்கலியிங்கினி வீறுநமக்கிலையென்று மிகத்தளர் நாள்
மேதினி நஞ்சுமையாறுமெனத் துயர்விட்டு விளங்கிய நாள்
மங்கையராளி பராங்குசமுன்னவர் வாழ்வு முளைத்திடு நாள்
மன்னிய தென்னரங்காபுரி மாமலை மற்றுமுவந்திடு நாள்
செங்கயல் வாவிகள்சூழ் வயல் நாளும் சிறந்த பெரும்பூதூர்
சீமான் இளையாழ்வார் வந்தருளிய நாள் திருவாதிரை நாளே.

(ஆர்த்தி ப்ரபந்தம்—32)

எம்பெருமானார் இந்நிலவுலகில் வந்து பிறப்பதற்கு முன் பல மாயமதத்தவர்கள் இங்கு மலிந்திருந்தனர். சிலர் வேதம் ப்ரமாணமன்று என்றனர். பலர் வேதவாக்யங்களுக்குத் தவறான பொருள்களை உரைத்து உலகத்தவரை வஞ்சித்துத் திரிந்தனர். இதனால் வேதங்கள் மிகவும் வருத்தமுற்றுத் தவித்த ஸமயத்தில் ஸ்வாமி எம்பெருமானார் வேதாந்த விழுப்பொருளை உள்ளது உள்ளபடி எடுத்துரைப்பதற்கென்றே வந்து தோன்றியபடியால் "நாரணனைக் காட்டிய வேதம் களிப்புற்றது" (ரா. நூ. 54) என்கிறபடியே வேதங்கள் வாழ்ச்சியைப் பெற்றன.

இந்தப் பூமியில் கலிபுருஷன் தன் வண்மை ஓங்கி வளரும்படி அரசுபுரிந்து வந்தான். "கலியும் கெடும் கண்டு கொண்மின்" (திருவாய்மொழி 5-2-1) என்று நம்மாழ்வார் முன் கூட்டியே அறிவித்திருந்தபடி நம் ஸ்வாமி திருவவதாரம் பண்ணியவுடனே கலியின்வீறு மிகத்தளர் வுற்றது. "இறந்தது வெங்கலி" என்றனர் அமுதனாரும் (ரா. நூ. 49).

பொறுமைக்கு இருப்பிடமான பூமிப்பிராட்டிக்கு ஸத்துக்கள் பலர் வாழ்வதால் சுமை யேதுமில்லை; ஒரு தீயன் வாழ்ந்தாலும் பெரும்பாரமாக இருக்கும். உடையவர் வந்தவதரிப் பதன் முன்பு பூமியில் தீயவர் மலிந்திருந்தனர். மேதினியாளுக்கு இச்சுமை தாங்கவொண்ணாத

தாயிருந்தது. நம் ஸ்வாமி தோன்றியவுடன், "இவர் வந்து பிறந்ததால் தீயவர் யாவரும் திருந்தி நல்லவராகத்திகழ்வர்; நம் சுமை மிகக்குறையும்" என்று தன் துயரத்தை விட்டொழித்தாள் ஸ்ரீபூமிப்பிராட்டி.

எதிராசருக்கு நெடுங்காலம் முன்பு அவதரித்த பராங்குச பரகாலாதி ஆழ்வார்களும் அவர்களைத் தொடர்ந்து அவதரித்த நாத யாமுநாதிகளான ஆசாரியர்களும் அருமருந்தன்ன பல ஸ்ரீஸூக்திகளை அருளிச்செய்திருந்தும் அவைகளை விளங்கச் செய்வாரில்லாமையால் வாழ்வற்றிருந்தன. இவைகளை அருளிய ஆழ்வார் ஆசாரியர்களும் "நம்முடைய நற்பணிகள் பயனற்றவையாயுள்ளனவே" என்று துயருற்றிருந்தனர். ராமாநுசன் திருவவதாரம் பண்ணி அருளிச்செயல்களுக்கு வியாக்யானங்கள் அவதரிக்கும்படி பண்ணி ஸ்ரீபாஷ்யம், கீதாபாஷ்யம் முதலான தம்முடைய க்ரந்தங்களில் அருளிச்செயல்களிலுள்ள சீரிய பொருள்களை ப்ரகாசப்படுத்தியமையால் நம்மாழ்வார் முதலானவர்கள் களிப்புற்றனர்.

மேலும், பரவாஸுதேவனான எம்பெருமான் வ்யூஹவாஸுதேவனாக பாற்கடலில் வந்து ஆர்த்தர் கூப்பீடு தன்செவிப்படும்படி படுத்துக் கிடந்தும், ராமக்ருஷ்ணாதி அவதாரங்கள் எடுத்துப் பிறந்து உலகத்தை வாழ்வித்தும், இவைகளால் த்ருப்தி பெறாமல், அர்ச்சாவதாரமாய், கோவில் திருமலை முதலான உகந்தருளின திவ்யதேசங்களிலே ஸ்தாவரப்ரதிஷ்டையாய் சேதனர்களைத் தான் பெறும் பொருட்டு ஸன்னிதி பண்ணிக்கிடந்தான். ஆயினும் அந்த திவ்ய தேசங்களைச் சரியான முறையில் நடத்திப் பணிகொள்வாரில்லாமையால், "அர்ச்சாவதாரமும் பயனற்றதோ?" என்னும் நிலை ஏற்பட்டிருந்தது நம்பி ராமாநுசமுனி பிறப்பதற்கு முன்னே. ஸ்வாமி வந்து பிறந்த பின்பு, "ஸர்வதேச தசாகாலேஷு அவ்யாஹத பராக்ரமா—ராமாநுஜார்ய திவ்யாஜ்ஞா வர்த்ததாம் அபிவர்த்ததாம்; ராமாநுஜார்ய திவ்யாஜ்ஞா ப்ரதிவாஸரமுஜ்வலா திகந்த வ்யாபிநீ பூயாத் ஸா ஹி லோகஹிதைஷிணீ" என்ற (மணவாள மாமுனிகளின் திருவாக்கான) திவ்யமந்த்ரங்கள் எங்கும் ஒலிக்கின்றபடி, ஸகல திவ்யக்ஷேத்ரங்களிலும் அற்புதமான சீர்திருத்தங்களும் கைங்கர்யாபிவ்ருத்திகளும் ஏற்பட்டு எம்பெருமானும் மற்றும் யாவரும் மகிழும்படி ஆயிற்று.

ஆக, வேத வேதாந்தங்கள் களிப்புறவும், கலிபுருஷன்தேய்வுறவும், மண்மகள் மகிழ்வுறவும், ஆழ்வார்கள் பொலிவுறவும், எம்பெருமான் தானும் இன்புறவும் அமைந்தது நமது பெரும்பூதூர்ச்சீமானான இளையாழ்வார் சித்திரையில் செய்ய திருவாதிரையில் வந்தவதாரம் செய்ததினாலே.

## அவதாரத்தின் தோற்றுவாய்

**சேஷாவதாரம் :**

இப்படி உலகெல்லாம் வாழும்படி வந்து தோன்றிய நம் ஸ்வாமி எம்பெருமானார் திருவனந்தாழ்வானுடைய (ஆதிசேஷனுடைய) அவதாரம் என்பர். ராமாவதாரத்தில் எம்பெருமான் தானே பரம புருஷன் என்பதை ஸூசனம் பண்ணினான்; வெளிப்படையாகக் காட்டவில்லை. க்ருஷ்ணாவதாரத்தில் தான் யாரென்பதை வெளிப்படையாகப்பலமுறை காட்டியருளினான். ராமாநுசமுனியாக அவதரித்தபோது அவதார ரஹஸ்யத்தைப் பெரும்பாலும் மறைத்துப் போந்தவர், மணவாள மாமுனிகளாக அவதரித்தபோது தம்முடைய அஹிபதி நிஜாகாரத்தைப் பலமுறை வெளிப்படுத்தித் தாமே உடையவர் என்பதையும் (கந்தாடை அண்ணனுக்குக்) காட்டித்தந்தார். எம்பெருமானாருக்கு அனுக்கர்களாயும் அவருடைய பூர்ண கடாக்ஷத்துக்கு பாத்ரபூதர்களாயும் வாழ்ந்த இரண்டு முதலிகள் ஸ்வாமியின் அவதார ரஹஸ்யத்தைத் தம் க்ரந்தங்களில் பொறித்து வைத்தனர். தம்முடைய திவ்யஸூரிசரிதத்தில் கருட வாஹன பண்டிதர் "பௌஜங்கம் வபுரபஹாய சேஷபோகீ யத்ரூபம் த்ரிபுவநவந்திதம்

ஜகாம'' என்றும், வடுக நம்பி தம்முடைய யதிராஜவைபவத்தில், ''வேதாந்த ஸித்தாந்த ஸமர்த்தநாய பாஹ்யாந்தரப்ராந்த மதாநுபத்யை—சேஷாம்சக : கேசவயஜ்வ தேவ்யாம் தேஜோநிதி ; கச்சித ஹா விராஸீத்'' என்றும் அருளிச் செய்துள்ளனர். மேலும், ''அநந்த : ப்ரதமம் ரூபம் லக்ஷ்மணஸ்து தத:பரம் பலபத்ரஸ்த்ருதீயஸ்து கலௌ கச்சித் பவிஷ்யதி'' என்ற ப்ரஸித்தமான ச்லோகமும் ப்ரமாணமாகும். இதில் நாலாவது பாதம் ''கலௌ ராமாநுஜ ஸ்ம்ருத:'' என்றும் பாடமாக வழங்குகிறது. இந்த ச்லோகத்தில் ''கச்சித்'' என்பது இராமாநுசனையே குறிக்கும் என்பது சொல்லாமலே விளங்கும்.

**கீதாசார்யனே இராமாநுசர் :**

ஸ்வாமி திருவநந்தாழ்வானுடைய அபராவதாரம் என்பது நிர்விவாதம். ஆயினும், இவருடைய பூர்வாவதாரமான இளையபெருமாளை (லக்ஷ்மணனை) வால்மீகி முனிவர் பகவதவதாரமாகவே பேசுகிறார் என்பது நினைக்கத்தக்கது.

''தத: பத்ம பலாசாக்ஷ: க்ருத்வாத்மாநம் சதுர்விதம்—பிதரம் ரோசயாமாஸ ததா தசரம் ந்ருபம்'' (ஸ்ரீரா. பால- 15-30) என்ற ச்லோகமும் ''ஸாக்ஷாத் விஷ்ணோச்சதுர்பாக:—ஸௌமித்ராஜநயத்ஸௌ தௌ'' (பால்-18-13) என்ற ச்லோகமும் இதற்கு ப்ரமாணங்கள். திருக்குறுங்குடி நம்பி, காரியாருக்கு, ''நாமே வந்து உமது மகனாய்ப் பிறக்கிறோம்'' என்று அநுக்ரஹித்துப் பிறந்தாற்போல, திருவல்லிக்கேணி எம்பெருமானான பார்த்தஸாரதி—கீதாசார்யனும் ஆஸூரி கேசவ ஸோமயாஜியாருக்கு ''நாமே வந்து உமக்கு மகனாய்ப் பிறக்கிறோம்'' என்று அநுக்ரஹித்தமையைப் பிள்ளைலோகம் ஜீயர் தமது ராமாநுஜார்ய திவ்ய சரிதையில் விரிவாக அருளிச்செய்துள்ளார். திருக்கோட்டியூர் நம்பியும்; உடையவரை, அவரோ நீர்? எம்பெருமானாரே! (உபடேஸனமத்தியில்மெய்ம்மைப்பெருவார்த்தையான சரமச்லோகத்தைத் தன் பரம க்ருபையால் அருளிச்செய்த கீதாசார்யன் தானோ நீர்!) என்று கொண்டாடி இந்த ரஹஸ்யத்தை வெளிப்படுத்தினார். இது கொண்டே திருவல்லிக்கேணியில் உடையவருக்கு உத்ஸவம் அவதார ஸ்தலத்தில் போலே இரண்டு வேளையும், பெருமாளுக்குப் பஞ்சபர்வ உத்ஸவங்கள் வாய்த்தாலும் அவை தவிர்த்தும் நடத்திப்போருவது. ஆக எம்பெருமானார் எம்பெருமானுடைய திருவவதாரமே என்பதில் விப்ரதிபத்தி வேண்டியதில்லை.

**ஐம்படைகள், சேனைநாதன் இவர்கள் அவதாரம்**

''அடையார்கமலத்து'' என்ற ராமாநுச நூற்றந்தாதிப் பாசுரத்தில் (33) எம்பெருமானுடைய ஐந்து திவ்யாயுதங்களும் ''இடையே இராமாநுசமுனியாயின இந்நிலத்தே'' என்று பேசப்பட்டுள்ளது. ''வவ்ருதே பஞ்சபிராயுதை முராரே:'' என்று வேதாந்தாசாரியரும் தம் யதிராஜஸப்ததியில் (12) பணித்துள்ளார். மேலும் அதே க்ரந்தத்தில் ''விஷ்வக்ஸேனோ யதிபதிரபூத் வேத்ரஸாரஸ் த்ரிதண்ட:'' (33) என்று எம்பெருமானாரை சேனை முதலியாருடைய அவதாரமாகவும் போற்றுகிறார். இதற்குச் சான்றாக ஆறாயிரப்படி குருபரம்பரையிலும் ஐதிஹ்யங்கள் காணலாம். (விரிவுக்கஞ்சி இவை விடப்பட்டன; அந்நூலில் கண்டு கொள்வது).

எம்பெருமானாருடைய வைபவ விசேஷங்களை எண்ணிப்பார்க்கில் நித்யமுக்தர்கள் எல்லாருமே திரண்டு வந்து ஒரு மஹாபுருஷராய் அவதரித்தனரோ? என்னும்படி உள்ளது. வடுக நம்பி தாம்பணித்த யதிராஜ மங்களத்தில்,

**சேஷோவா ஸைந்யநாதோவா ஸ்ரீபதிர்வா இதிஸாத்விகை: |**
**விதர்க்யாய மஹாப்ராஜ்ஞைர் யதிராஜாய மங்களம் || (19)**

என்ற ச்லோகத்தினால் ஆதிசேஷனோ? சேனைநாதனோ? எம்பெருமானோ? என்றெல்லாம் மஹாப்ராஜ்ஞர்களான நல்லோர் அதிசயப்படும்படியுள்ளதை அருளிச்செய்துள்ளார். இப்படி

அளவிலடங்காத பெருமை படைத்த எம்பெருமானார் தமக்கு முன் பிறந்தவர்களைத் தம் திருமுடிஸம்பந்தத்தினாலும் பின்பு வந்தவரைத் திருவடி ஸம்பந்தத்தினாலும் உய்யும்படி அருள் பாலித்தார் என்பது நம்பூர்வர்கள் துணிவு. "உந்தனபிமானமே உத்தாரகம் என்று சிந்தை தெளிந்திருக்கச் செய்த நீ" (ஆர்த்தி 56) என்ற மாமுனிகள் திருவாக்குப்படி எம்பெருமானார் திருவடி ஸம்பந்தத்தை விட நம்மை உய்விக்கவல்லது வேறு எதுவுமில்லை; அந்த ஸம்பந்தம் நமக்குள்ளபோது பேறு தப்பாது'' என்று மார்பில் கைவைத்து உறங்கலாம்.

## எதிராசன் வடிவழகு

எம்பெருமானின் காருண்ய குணமொன்று மட்டுமே எதிராசனாக வந்துதித்ததோ? என்னும்படி வந்தவதரித்த இந்த மஹாசார்யரின் திருமேனி ஸௌந்தர்யம் நம் நெஞ்சை மிகவும் கவர்வதாக இருக்கும். ஸ்ரீபெரும்பூதூரில் (அவதாரஸ்தல) திவ்ய மங்கள விக்ரஹத்தை ஒரு தடவையாகிலும் ஸேவித்தநுபவித்தவருக்கு இதன் உண்மை நன்றாகத் தெரிந்திருக்கும். விபவாவதாரத்தின் வடிவழகை ஸ்வாமியின் நிழலும் அடிதாறுமாக வாழ்ந்திருந்த எம்பாரின் ஸ்ரீஸூக்தி யொன்றால் அறியலாம். இந்த வடிவழகுப் பாசுரம் நமக்கு நிச்சலும் நினைக்க உரியது.

> பற்பமெனத்திகழ் பைங்கழல் உந்தன் பல்லவமே விரலும்
> பாவனமாகிய பைந்துவராடை பதிந்தமருங்கழகும்
> முப்புரிநூலொடு முன்கையிலேந்திய முக்கோல் நிலாவழகும்
> முன்னவர்தந்திடு மொழிகள் நிறைந்திடு முறுவல் நிலாவழகும்
> கற்பகமேவிழி கருணைபொழிந்திடு கமலக்கண்ணழகும்
> காரிசுதன்கழல் சூடியமுடியும் கனகநற்சிகைமுடியும்
> எப்பொழுதும் எதிராசன் வடிவழகு என்னிதயத்துளதால்
> இல்லையெனக்கெதிர் இல்லையெனக்கெதிர் இல்லையெனக்கெதிரே.

இன்சுவைமிக்க இந்தப் பாசுரத்துக்கு விளக்கமே தேவையில்லை. பரமவிலக்ஷணமான திவ்யமங்கள விக்ரஹசோபை ஸௌந்தர்யாதிகளை ஸ்ரீபெரும்பூதூரில் தானுகந்த திருமேனியில் இன்றும் ஸேவித்து மகிழலாம். இந்த சோபையை நம்பூர்வர்கள் "காஷாயசோபி கமநீய சிகாநிவேசம், தண்டத்ரயோஜ்வலகரம் விமலோபவீதம்—உத்யத்தி நேச நிபமுல்லததூர்த்வ புண்ட்ரம் ரூபம் தவாஸ்து யதிராஜ த்ருசோர்மமாகரே" என்றும், "உபவீதிநம் ஊர்த்வ புண்ட்ர வந்தம் த்ரிஜகத்புண்யபலம் த்ரிதண்டஹஸ்தம்—சரணாகதஸார்த்தவாஹமீடே சிகயா சேகரிணம் பதிம் யதீநாம்" என்றும் பரமபோக்யமாகப் பேசி அநுபவித்து மகிழ்ந்தனர். பூதபுரிநாயகனை இந்தச்சீமானை அடிக்கடி சென்று அடிபணிந்து இப்பாசுரங்கள் கொண்டு ஏத்தி அநுபவித்து இன்புறலாம். அந்தந்த இடங்களில் கோயில்கொண்டு ஸேவைதரும் திவ்யமங்கள விக்ரஹங்களை ஸேவிக்கவும் அங்கு கைங்கர்யம் பண்ணவும் சாலவும் பொருந்தும். நகைக ஸிந்துவாய் க்ருபாமாத்ரப்ரஸன்னராய் விளங்கும் எதிராசனைப்போற்றி வணங்கின் பேறு தப்பாது. எம்பெருமானார் திருவடிகளே சரணம் என்பது நம் பூர்வாசார்யர்கள் ஒருவர் தப்பாமல் தம் தம் சிஷ்யர்களுக்குக் கற்பித்த மஹாமந்த்ரமாகும். நா—ரா—ய—ண என்னும் நான்கெழுத்துத் திருநாமம் போலவே ரா—மா—நு—ச என்றதும் ய—தி—ரா—ச என்பதுமான சதுரக்ஷரிகள் நமக்கு நிச்சலும் வாய்வெருவி ஆத்மக்ஷேமமான நற்பேறு பெறுதற்குரிய திருநாமங்கள். நாராயண நாமத்தை விட ராமாநுச நாமம் சீரியது என்பதே நமக்கு மணவாளமாமுனிகள் காட்டித்தந்த உயர்ந்த உபதேசமாகும்.

வாழி பெரும்பூதூர் மாமுனிவன் பூங்கழல்கள்!

———